மெத்த வுபசாரம் வேண்டுவதெல் லாமுரைத்துச்
சித்தந் திரும்புதற்குச் செய்திசொல்லிச் - சத்தியமாய்த்

திங்கள்கதி ருள்ளமட்டுந் தேசிகரே யென்னாட்டி
லுங்கண் மரபிற் கொருகாலும் - பங்கம்

வரவொட்டே னென்று வலதுகை யைக்கொடுத்தே
யிரவி யொளிரதத்தி லேற்றிப் - பரிவாய்

வளமை யுடனழைக்க வந்தே நலமா
யிளைசைமா னைதப்பதி யிருந்தார் - களிகூர்ந்தே

யஞ்செழுத்தை யுட்செபிப்போ ரல்லும் பகலுமெனை
நெஞ்சில்விட்டு நீங்காத நிண்ணயத்தார் - ரஞ்சிதமாய்த்

திருமாற் கடிமைசெய்வோர் தெய்வமெல்லா மொன்றென்
றுரிமையுடன் போற்றிவளர் வுற்றோர் - றிருநிதியம்

வேண்டினோ ருக்குதவி மிக்ககனத் தைப்பெற்றோர்
பாண்டிநா டாள்வான் பதம்பணிவோர் - நீண்டபுகழ்த்

தேசா திபர்புகழுஞ் செய்ய திருப்புனவை
யாசா னழக ரடிபணிவோர் - நேசமுட

னன்னைதந்தை தெய்வமுத லாசானைப் போற்றுதலாய்
மன்னவரைக் கூட வணங்காதார் - முன்னுயர்ந்த

மேரு கிரியுரைத்தும் வேழந் தனைநிறுத்தும்
பேருலகின் மிக்கான பேரானார் - யாரு

மதிசயிக்கக் காவேரி யாறுதனைப் பஞ்சுப்
பொதியா லடைத்தபுக ழாளர் - மதியாற்

கடலி லெறிந்தபொன்னைக் காசினியோர் தாமெச்
சிடவழைத்த வேலேல சிங்க - னெடுங்கிணற்றில்

வீம்புக்குத் தம்வீட்டில் வெள்ளாட்டி பாற்சவடி
தாம்பிட்டு நீரிறைத்த தாஷ்டியர்க - டேம்பவே

கல்யாண வாயிலிலே காவணக்கா லுக்குயர்ந்த
நமபவளக் காலதனை நாட்டினோர் - வல்விரவில்

மற்கதவு வெள்ளிதனை வாங்கிவிட வக்கணமே
பொற்கதவு நாட்டிப் புகழ்படைத்தோ - ரிப்புவியில்

சிரகப்பூந் தாரணிந்தோர் சிங்கக் கொடிபடைத்தோர்
காரிணையாச் செம்பொன் கவிக்கீவோர் - பார்புகழுங்

கத்த னிளைசைக் கைலாய நாதனையும்
நித்தியகல் யாணியையு நெஞ்சில்வைப்போர் - நத்தினனை

யாட்கொண்ட நாதருட னுஞ்சிவபு ரத்தேவி
தாட்கமலம் போற்றிவளர் தாட்டிகர்கள் - வேட்காம்

வடிவாரும் பேட்டை வளரொளியோர் மிக்க
வடிவுடையா ளைப்பணியு மாண்பார் - படிபுகழுந்

தென்னு தமிழ்சேர் திருநேல்வேலிச் கற்பகமாம்
பிள்ளையா ரைப்பணியும் பேராள - ரள்ளிநிதி

செய்பு நியமச் செயங்கொண்ட சோழீசர்
தையல் சௌந்தரியைத் தாள்பணிவோர் - வையமகிழ்

பூவுடைய வூரிற் புகழ்தே சிகரடியோர்
பாவுடைய மாதி னடிபணிவோர் - தேவர்புகழ்

வேலி னமரின் மிருத்தகன் டீசரொடு
சாலவுங்கா மாட்சியிரு தாள்பணிவோர் - மேலிப்பை

தான்றோன் றி யீசரையுஞ் சங்கரியை யும்போற்று
* மான்மதஞ்சே ருந்துளவ மார்மார்பர் - தேன்சிறந்த

---

* மான்மதம் - கஸ்தூரி.

டர்தைப் பதியில் வளருமைஞ்ஞூற் றீசர்மகிழ்
காதல் பெரியவனைக் கைதொழுவோர் - சாதகமாய்

ராசசிங்கம் வாழ்பூமி நாதர்சிவ காமியையும்
நேசமுடன் போற்றி நிறைந்திருப்போர் - வாசனைபாய்

நானிலத்தோர் கொண்டாட நம்மிடத்தின் மிக்கவன்ன
தானமடங் கட்டிவைத்த * தாளாளர் - மேன்மைத்

திருவாவி னன்குடியிற் சென்றெதிர்க்க போர்க்குத்
தருவாய்க் கொடுக்குமன்ன தான - மிருநிதிய

நாடறியப் பூவுலகி னன்முந் திரிதேடிக்
கோடி யளிக்குங் கொடையாளர் - தேடிநிதி

மாயேஸ் வரர்பூசை மாறு தரிபூசை
சேயார்மும் மூர்த்தி பிரதிஷ்டை - மாயாத

ஆருணிகள் ‡ கூபமிவை யுண்டுபண்ணி மிக்கதர்மந்
தாரணியிற் செய்திட்ட சற்புருஷர் - வாரஞ்

சிகரத்தி லேற்றிவைத்த தீபம்போ லேழு
நகரத்தார் யாரு நமதடியார் - மிகவவர்கள்

வீர ருனைக்காக்க வேண்டித் திருமுகமுந்
தாரே னவரிடத்திற் றுன்சென்று - பூரணமாய்க்

கனகவணி கேசரிரு கையிற் றிருமுகத்தை
மனமகிழ வீவாய் வணிகேச - ரனைவர்களுங்

குன்றுக் குடியிற் குமரர் திருமுகத்தைக்
கண்ட வுடனே களிகூர்ந்து - கொண்டாடி

யுன்னை யடர்சவிக ளோடக் கனகநிதி
தன்னைக் கொடுத்தா தரிப்பார்க - ளிந்நேரஞ்

* தாளாளர் - ஊக்கமுள்ளோர்; வைசியர். ‡ கூபம் - கிணறு.

செல்லுவா ரென்று திருமுகந்தந் தென்னை
யல்ல லறவிங் கனுப்பினார் - நல்லதென்றே

யிங்கிதமாய் மெய்கூர்ந் தினிதாய் நடந்துகொற்ற
மங்கலத்திற் சென்றேன் வணிகேசர் - சங்கதியாய்க்

கூடி யுலகாயி கோயிலுக்கு நேர்வடக்காய்
நாடி விடுதிக்கு நன்னயமாய் - நீடிவளர்

மாவுக்கு மேற்காய் வணிகேச ரெல்லாருங்
காவணத்துக் குள்ளிருந்தார் கண்டேனன் - பூவணத்த

இந்திரனைப் போலிருந்த வேழுநக ராதிபர்க்குக்
கந்தர் திருமுகங்கை யிற்கொடுத்தே - னந்தமுடன்

வித்தாரக் கைவாங்கி வேலர் திருமுகத்தை
வைத்தார் சிரசில் வணிகேச - ருற்றுநான்

குன்றக் குடியிற் குமரர்பா லென்றுயரை
விண்டதுவு மென்னிடத்தில் வேலவரும் - பண்பாய்ச்

சலிப்பை யுரைத்ததுவுஞ் சாகரந்தான் சுட்டாற்
கலக்கச் சலமுண்டோ கந்தா - நலத்துடனே

யென்கவலை தீரவகை யென்னவென்று கேட்டதுவும்
வன்மைக் குபேர வணிகருக்கா - யன்பாந்

திருமுகத்தைத் தந்ததுவுஞ் செப்பினே னப்போ
மருவுந்தி மிக்கவணி கேச - ரொருமையுடன்

வந்த திருமுகத்தை வாசித்தா ரப்போது
சிந்தைமகிழ்ந் தேயஞ்சல் செப்பினார் - கந்தமலர்

வேணு நிதியீந்தார் மிக்கவஸ்தி ரங்கொடுத்தார்
பூணுமெனத் தங்கநகை பூட்டினா - ரூணுறவா

யுண்டிருக்க நெற்கொடுத்தா ரூரும் பலவாகக்
கண்டிருக்க மெத்தக் கனஞ்செய்தார் - கொண்டாடித்

திட்டமுட னேவணிகர் செய்யுங்கல் யாணமதிற்
கட்டளையா யோர்பணமுங் கண்டெழுதிச் - சட்டமுடன்

சாதனமுந் தந்தார் சஞ்சலமெல் லாந்தீர்த்தார்
மாதனவா னாகவென்னை வாழ்வித்தா - ராதலினாற்

றுங்கமலை யான்வாழி துய்யதமி ழோர்வாழி
யெங்குமப டியா னிறைவாழி - மங்களமாய்

வாழுகும ரேசர் மகராசர் தென்னிலைசை
யேழுநக ரார்வாழி யே.

திருமுக விலாசம் முற்றிற்று.



சிவமயம்

# தனிக் கவிகள்



## ஊனையூர்ப்பாரதியாரவர்கள் வினாவாக இயற்றியது

### நேரிசை வெண்பா

ஓங்குபத்மா சூரனைக்கண் டோடியொளித் தார்விசையன்
வாங்குதனு வால்பூசை வாங்கினா—ரீங்கிருக்கும்
நன்னியமச் சோழீச னார்செயங்கொண் டாரென்றா
லென்னசெயங் கொண்டா ரிவர்.

மேற்படி வினாவிற் குத்தரமாக

## முத்தப்பசெட்டியாரவர்கள் இயற்றியது

### நேரிசை வெண்பா

என்னசெயங் கொண்டா ரிவரென்றான் முப்புரத்தைச்
சொன்னமய மாச்சமைத்த சோழீசர்—பின்னுஞ்
சிரித்துச் செயங்கொண்டார் சித்தசனைக் கண்ணா
லெரித்துச் செயங்கொண்டா ரே.

---

ஜெயங்கொண்டார் சதகத்தின்

# பாயிரகவி



## சுந்தரமுதலியார் சொல்லியது

### ஆசிரியவிருத்தம்

திருமதுரைச் சீர்ப்பட் டினையாற்றங் குடிச்செட்டி சீமானென்னா, முருமதன னழகப்ப னுகவியமுத் தையனென்னு மொப்பில் சிங்க, மருமறைசாத் திரங்களோ டாகமங்கள் புராணங்க ளனைத்துந் தேர்ந்து, பெருகுபழ மொழிநூறுங் கதை நூறுஞ் சதகமெனப் பேசிற் றுமால்.

---

உ

சிவமயம்

ஜெயங்கொண்டார் சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

---

SECOND EDITION] 1927 [1000 COPIES

## திவ்விய தேசயாத்திரையின் சரித்திரம்

[பரதகண்டத்தில் வடபாகத்திலுள்ள பிரதானமான பல திவ்ய ஸ்தலங்களின் மகிமையும் விசேஷங்களும், அந்த ஸ்தலங்களுக்கு இந்நூலின் ஆசிரியர் செய்த யாத்திரையின் வரலாறும்:]
விலை ரூபா 2.

இதி லடங்கிய முக்கியமான ஸ்தலங்களின் பெயர்கள்:

பிரயாகை, நைமிசாரண்யம், காசி, கயா, பர்த்வான், சந்திரநகர், கல்கத்தா, பூரி, ஜகந்நாத், சோடாநாகபூர், டார்ஜீலிங், குர்ஷாங், நேப்பாளம், அயோத்தி, பைசாபாத், லக்ஷ்மணபுரி, நிம்சாரம், ஹரித்துவாரம், டேராடூன், மஸ்ஸூரி, ஹிமாசலம், கங்கோத்ரி, கேதார்நாதம், பதரிகாச்சிரமம், கயிலாசமலை, மானஸ சரோவரம், கான்பூர், ஆக்ரா, குவாலியர், பரதப்பூர், ஆள்வார், வடமதுரை, கோகுலம், பிருந்தாவனம், கோவர்த்தனம், மல்லர்புரம், பலதேவம், பிரசன்ன, நந்தகமனம், டில்லி, லாகூர், அமிர்தசாரம், பானிப்பட்டு, தனேசுவர், சிம்லா, அம்பாலா, காங்கிரா, இராவல்பிண்டி, புஷ்பபுரி, காஷ்மீரம், ஜைப்பூர், இராஜபுட்டானு, உஜ்ஜினி, இந்தூர், பஞ்சவடி, பம்பாய், பூனு, பண்டரிபுரம் முதலியன.

தக்ஷிண இந்தியா சரித்திரம்: ஷை தென்தேச யாத்திரையின் சரித்திரம்: விலை ரூபா 5

---

## ஸ்ரீ பர்த்ருஹரி வைராக்கிய சதகம்

விலை அணு 3

இந்நூலாசிரியரும், பிரஹ்மநிஷ்டருமாகிய ஸ்ரீ பர்த்ருஹரி என்னும் மஹாநுபாவர் ஸ்ரீ சங்கரபூஜ்ய பகவத்பாதாசார்ய சுவாமிகளின் குருமூர்த்தியாகிய ஸ்ரீ கோவிந்த பகவத்பாதாசாரிய சுவாமிகளின் புத்திரர். இவர் வைராக்கியத்திலும் ஞானத்திலும் சிறந்தவர். இவர் நீதி சதகம், சிங்கார சதகம், வைராக்கிய சதகம், வியாகரண மஹாபாஷ்யகாரிகை முதலிய அநேக கிரந்தங்களை வடமொழியில் இயற்றியிருக்கின்றனர். இவற்றுள் வைராக்கியத்தையும் ஞானத்தையும் விசேஷமாகப் போதிக்கும் வைராக்கிய சதகம் என்னும் இந்நூலைத் தமிழில் செய்யுள் வடிவமாக மொழிபெயர்த்து, அச் செய்யுளுக்கு உரையும், ஸ்ரீ பர்த்ருஹரியின் சரித்திரமும் சேர்த்து அச்சிடலாயிற்று.

ஸ்ரீ பர்த்ருஹரி நீதி சதகம் உரையுடன்: விலை அணு 3
ஷை சிருங்கார சதகம் உரையுடன்: விலை அணு 3

ரிப்பன் புஸ்தகசாலை, 87, தம்புசெட்டி வீதி, சென்னை

## ஸ்ரீ பக்தலீலாம்ருத வசனம்

[82 பக்தர்களின் சரித்திரம்: உயர்ந்த கிலிட்டு பயிண்டு: விலை ரூபா 3]

இதி லடங்கிய பக்த சிரேஷ்டர்களின் பெயர்:

(1) புண்டலீகர், (2) ஜயதேவர், (3) துளசிதாசர், (4) நாமதேவர், (5) கபீர்தாசர், (6) ஞானதேவர், (7) கூர்மதாசர், (8) ராகாகும்பார், (9) கோராகும்பார், (10) பரிசாபாகவதர், (11) ஜகமித்திரர், (12) ஜோகபரமானந்தர், (13) நரஹரிபக்தர், (14) ஜனுபாயி, (15) மச்சேந்திரநாதர், (16) கோபிசந்தராஜன், (17) சாங்கதேவர், (18) சோகாமேளர், (19) பத்மநாமவேதியர், (20) ரோகிதாஸர், (21) பிம்பாஜிபக்தர், (22) நரசிம்மமேதா, (23) இராமதாஸர், (24) பிரமசாரி, (25) சூரதாஸர், (26) சேனுநாபிகர், (27) சாத்வீகராஜன், (28) கருமாபாயி, (29) ஜயவந்தபக்தர், (30) சுரதாசர், (31) ரசிகமுராரிபக்தர், (32) மீராபாயி, (33) தாசிகான்ஹோ பாத்ரா, (34) தாமாஜிபண்டிதர், (35) மிருத்யுஞ்சயபக்தர், (36) பானுதாசர், (37) ஏகநாதசுவாமிகள், (38) மாண்கோஜிபோதலே, (39) பகிரம்பட்டர், (40) கணேசநாதர், (41) கேசவசுவாமி, (42) கோமாயியம்மாள், (43) லதீப்ஷாபக்தர், (44) சந்தோபாபக்தர், (45) நீளோபாபக்தர், (46) உத்தவசித்கனர், (47) நாபாஜிபக்தர், (48) நானக்தாஸர், (49) பிரேமாபாயி, (50) சிளாபாயி, (51) சமர்த்தராமதாசசுவாமி, (52) மண்டலீகராஜன், (53) பிளாபாயி, (54) ராமாபாயி, (55) ராமராஜர், (56) ஒகருசாவ்கார், (57) ஹரிஅனந்தவைஷ்ணவர், (58) ராமசந்திரபட்டர், (59) சஹூக்ஷாபக்தர், (60) பன்னஹாஜிரசபுத்திரர், (61) ஜயமல்லராஜர், (62) ஸ்ரீதரபண்டிதர், (63) ஹரிபாலதாசர், (64) ஜடபுதாசர், (65) தனுசாடர், (66) சுகாநந்தர், (67) மாதவதாசர், (68) ஹரிவியாசர், (69) திரிபுரதாசர், (70) லாடுபாவா, (71) திரிலோசனதாஸர், (72) சஜ்ஜனகசாருகர், (73) அங்கதபூபதி, (74) குணவதிபாயி, (75) குபாரபாயி, (76) கிரிதரலால், (77) பலக்புகார், (78) ஷேக்பரீத்தாசர், (79) சக்குபாயி, (80) குபாகும்பார், (81) கமலாகரர், (82) துக்காராம் சுவாமிகள்.

---

பட்டினத்துப் பிள்ளையார் என்னும் திருவெண்காட்டடிகள் சரித்திர வசனம்: விலை அணா 12.

கடவுள் துணை

# படிக்காசுப்புலவர் சரித்திரச் சுருக்கம்

இந்நூலாசிரியர், தொண்டைமண்டலத்திலே,* பொன் விளைந்த களத்தூரிலே, சுமார் உகூ0 வருடங்கட்கு முன்னே, செங்குந்தர் மரபிலே யவதரித்து, சிவாநுக்கிரகத்தால் தமிழ்க்கலை முழுதும் பயின்று, தெய்வீகம் விளங்கிய நல்வாக்கினைப் பெற்று, இல்லற வாழ்க்கையிலே இருக்குநாளில், அந் நாட்டிலுள்ள வல்ல நகரத்தை யடைந்து, காளத்திபூபதி யென்பவரைக் கண்டு,

"பெற்றா ளொருபிள்ளை யென்மனை யாட்டியப் பிள்ளைக்குப்பால்
பற்றாது கஞ்சி குடிக்குந் தரமல்ல பாலிரக்கச்
சிற்றாளு மில்லையிவ் வெல்லா வருத்தமுந் தீரவொரு
கற்றா தரவல்லை யாவல்ல மாநகர்க் காளத்தியே."

என்னுஞ் செய்யுளைப் பாடி அவரால் சில பாற்பசு வளிக்கப்பெற்றுப் பின்னர்,

"வழிமேல் விழிவைத்து வாடாம லென்மனை யாளுமற்றோர்
பழியாமற் பிள்ளையும் பாலென் றழாமற் பசியெனுஞ்சொல்
மொழியாம லென்னை வரவிட்ட பாவை முசித்துச்சதை
கழியாம லாவளித் தாய்வல்ல மாநகர்க் காளத்தியே."

என்னுஞ் செய்யுளால் அவரைப் புகழ்ந்து பாடினார்.

அன்றியும், மாவண்டூரிலே மிக்க பிரபுவாயிருந்த கஸ்தூரி முதலியார் குமாரராகிய கறுப்பமுதலியார் என்னும்

* தென்களத்தூர் என்பது வழக்கம்.

ஓர் வேளாளர் வேண்டுகோளின்படி, தொண்டைமண்டல சதகம் என்னும் ஓர் பிரபந்தத்தைப் பாடி அரங்கேற்றி, அவரால் வேண்டிய திரவியங்கள் அளிக்கப்பெற்றமையே யன்றி, பல்லக்குஞ் சுமக்கப் பெற்று, அவ் வுவகை மேலீட்டினால்,

"காலைவென் றிடுகத் தூரி கண்மணிக் கறுப்ப னென்னு
மாலையம் பதியான் றொண்டை மண்டல சதகங் கேட்டு
நாவலர் புகழ்ந்து மெச்ச நவநிதி பொழிந்து நன்றாப்
பூவுல கெங்கும் போற்றப் புகழ்நிலை நிறுத்தி னானே."

எனவும்,

"ஓர்கறுப்பு மில்லாத தொண்டைவள நன்னாட்டி
லுசிதவேளாச்
சீர்கறுப்பொன் றில்லாத கத்தூரி மன்னனருள்
சேயைப்பார்மே
லார்கறுப்ப னென்றுசொல்லி யழைத்தாலு நாமவனை
யன்பினாலே
பேர்கறுப்ப னிறஞ்சிவப்பன் கீர்த்தியினால் வெளுப்பனெனப்
பகர்வோமே."

"எல்லப்ப னம்மையப்பன் றருதிருவேங் கடநாத
னெழிற்சீராமன்
வல்லக்கொண் டையன்மாதை வேங்கடே சுரன்போல
வரிசை செய்தே
செல்வத்தம் பியருடனே கத்தூரி மகன்கறுப்பன்
றெருவீதிக்கே
பல்லக்குந் தான்சுமந்தா னதுநமக்கோ ராயிரம்பொன்
பரிசுதானே."

எனவும் வழங்குஞ் செய்யுண் முதலியவற்றாற் புகழ்ந்து மகிழ்ந்திருந்தனர்.

பின்பு பல தலங்களையுந் தரிசித்து வணங்கிக்கொண்டு சிதம்பரத்தைச் சேர்ந்து சிற்சபா நாயகரையும் சிவகாமியம்மையையுந் தரிசித்து,

"பொல்லாத மூர்க்கருக் கெத்தனை தான்புத்தி போதிக்ினும்
நல்லார்க்குண் டான குணம்வரு மோநடு ராத்திரியிற்
சல்லாப் புடவை குளிர்தாங்கு மோநடுச் சந்தைதனிற்
செல்லாப் பணஞ்செல்லு மோதில்லை வாழுஞ் சிதம்பரனே."

எனவும்,

"வேல்கொடுத் தாய்திருச் செந்தூரர்க் கம்மியின் மீதுவைக்கக்
கால்கொடுத் தாய்நின் மணவாள னுக்குக் கவுணியற்குப்
பால்கொடுத் தாய்மத வேளுக்கு மூவர் பயப்படச்செங்
கோல்கொடுத் தாயென்னை யேயெனக் கேதுங் கொடுத்திலையே."

எனவும் துதித்து, அங்கே நடராஜப்பெருமான் பஞ்சாக்ஷரப்படியில் ஐந்து பொற்காசு வைத்தருளத் திருவருளைப் புகழ்ந்து அதனாற் படிக்காசுப்புலவர் எனப் பெயர் வழங்க, அத் தலத்தை யரிதினகன்று தென்னாட்டையடைந்து இரகுநாத சேதுபதியைக் கண்டு,

"பூவேந் தருமற்றுச் சங்கமும் போய்ப்பதின் மூன்றொடிரு
கோவேந் தருமற்று மற்றொரு வேந்தன் கொடையுமற்றுப்
பாவேந்தர் காற்றி லிலவம்பஞ் சாகப் பறக்கையிலே
தேவேந்த்ர தாருவொத் தாய்ரகு நாத செயதுங்கனே!"

என்னுஞ் செய்யுளைப் பாடிச் சில பரிசு பெற்று, பல்லக்கு முதலிய விருதுகளுடன் மதுரையை யடைந்த பொ

ழுது, அந் நகரத்தை யாண்டிருந்த திருமலைநாயகர் அவரது ஆரவாரத்தை நோக்கிக் கிளிக்கூட்டுச் சிறையிலே அடைத்து வைக்க, அத் தருணத்து,

"நாட்டிற் சிறந்த திருமலை யா! துங்க நாகரிகா!
காட்டில் வனத்திற் றிரிந்துழ லாமற் கலைத்தமிழ்தேர்
பாட்டிற் சிறந்த படிக்காச னென்னுமோர் பைங்கிளியைக்
கூட்டி லடைத்துவைத் தாயிரை தாவென்று கூப்பிடுதே."

என்னுஞ் செய்யுளைப் பாடி, அவரை வசப்படுத்தி, பரிசு பெற்றுத் தங்கியிருந்தனர்.

அதன் பின்பு, காயற் பட்டினத்தை யடைந்து,

"காய்ந்து சிவந்தது சூரிய காந்தி கலவியிலே
தோய்ந்து சிவந்தது மின்னார் நெடுங்கண்க டொல்பலநூல்
ஆய்ந்து சிவந்தது பாவாணர் நெஞ்ச மனுதினமும்
ஈந்து சிவந்தது மால்சீதக் காதி யிருகரமே."

எனவும்,

"தேட்டாளன காயற துரைசீதக காதி சிறந்தவச்ர
நாட்டான் புகழ்க்கம்ப நாட்டிவைத் தான்புகழ் நாவலரை
ஓட்டாண்டி யாக்கி யவர்கடம் வாயி லொருபிடிமண்
போட்டா னவனு மொளித்தான் சமாதிக் குழிபுகுந்தே."

எனவும் வழங்குஞ் செய்யுண் முதலியவற்றால், சீதக் காதியைப் புகழ்ந்து, மிக வுயர்ந்த வைரமோதிர முதலிய பரிசு பெற்று, திருச்செந்தூரை யடைந்து முருகக் கடவுளைத் தரிசித்து,

"முற்கரை யப்பரை யேறவிட் டாட்கொண் முதல்வருள்ளக்
கற்கரைக் கும்படி போதித் திடுங்கரு ணைக்கடலைச்
சிற்பரைக் குட்டியை யெங்கெங்குந் தித்திக்குஞ் செங்கரும்பின்
சர்க்கரைக் கட்டியைக் கண்டேன்செந் தூரெனுந் தானத்திலே."

என்பது முதலிய செய்யுட்களாற் றுதித்து, மற்றுந் தலங்களைத் தரிசித்து வணங்கி, தனைடலைநீணெறி யென்னுந் தலத்தைத் தரிசித்து, அங்குள்ள அன்பர்கள் வேண்டுகோளின்படி இச் சதகத்தை யருளிச்செய்து சந்நிதியிலரங்கேற்றி வசித்திருந்து சின்னாட் சென்றபின், தருமபுர ஆதீனத்தில் அப்பொழுது விளங்கிய ஞானதேசிகரால் ஞானதீக்ஷையும் சந்நியாசமும் பெற்று வசிக்குங்கால், ஒரு தினம் காவிரிநதியில் ஸ்நாநத்திற்குச் சென்றபொழுது தவசுப்பிள்ளையினிடம் தோய்க்கத் தந்த வஸ்திரங்களிலொன்றை வெள்ளம் அடித்துக்கொண்டு போய்விட்டமையால் அவன் வருந்துதல் கண்டு,

"அப்பிலே தோய்த்திட் டடுத்தடுத்து நாமதனைத்
தப்பினு னம்மையது தப்பாதோ—அப்பா!கேள்
இக்கலிங்கம் போனுலென் னேகலிங்க மாமதுரைச்
சொக்கலிங்க முண்டே துணை."

என்னுஞ் செய்யுளால் தமது ஆதீன சம்பிரதாயப்படி. தமக்கு வழிபடுகடவுளாய் விளங்கும் சொக்கலிங்க மூர்த்தியைத் துதித்து, அவ் வஸ்திரம் மீண்டுங் கரையில் வரப்பெற்றுத தமது நிபதி முடித்து அவனையு மழைத்துச் சென்றனர்.

இவ்வாறு பல விசித்திரப் பாக்களை இயற்றிக்கொண்டு ஞாஆசாரிய ருவக்குமாறு சிலகாலம் அணுக்கத்தொண்டராயமர்ந்திருந்து, பின்னர் அவ்வாசிரியர் ஆக்கினைப்படி

வைத்தீசுரர் சந்நிதியை யடைந்து அக் கடவுளின் கட்டளையை நடாததிக்கொண்டு படிக்காசுத் தம்பிரான் என அதிகப் பிரபலமாய் வாழுநாளில், அத் தலத்தைச் சுட்டிப் புள்ளிருக்குவேளூர்க் கலம்பகம் என்னும் ஓர் பிரபந்த மியற்றி அச் சந்நிதியில் அரங்கேற்றி வசித்தனர்.

அதன் பின்பு, முன்னைத் தமக்குப் படிக்காசு தந்து திருவருள் பாலித்த சிற்சபாநாயகர் சந்நிதியிலேயே தொண்டுசெய்து கதியடைய வேண்டுமென்னும் அவா மேலீட்டால் ஞானசாரியரனுமதிபெற்றுச் சிதம்பரத்தைச் சேர்ந்து, ஒரு திருமடம் வகுத்து அதிலிருந்துகொண்டு அக் கடவுளுடைய தொண்டை வகித்துத் தினந்தோறும் ஆலயத்தை யடைந்து சபாநாயகரைத் தரிசிக்கும்பொழுது, அக் கடவுள் பஞ்சாக்ஷரப்படியில் பொற்காசு ஐந்து வைத்தருளப்பெற்று, சைவாசாரியராகச் சில காலம் நன்மாணாக்கர்களுக்கு ஞானோபதேசம் பாலித்து வீற்றிருந்து, சில பிரபந்தங்களையும் அருளிச்செய்து, அக் கடவுளுடைய திருவடி நீழலை யடைந்தனர்.

இவ்வாசிரிய ரியற்றுஞ் செய்யுட் டிறத்தைப்பற்றிப் பலபட்டடைச் சொக்கநாதப்புலவர்,

“மட்டாருந் தென்களந்தைப் படிக்காச னுரைத்தகவி
வரைந்த வேட்டைப்
பட்டாலே சூழ்ந்தாலு மூவுலகும் பரிமளிக்கும்
பரிந்தவ் வேட்டைத்
தொட்டாலுங் கைமணக்குஞ் சொன்னாலும் வாய்மணக்குந்
துய்ய சேற்றில்
நட்டாலும் தமிழ்ப்பயிராய் விளைந்திடுமே பாட்டினது
நயப்புத் தானே.”

என்று புகழ்ந்திருக்கின்றனர். அன்றியும்,

“வெண்பாவிற் புகழேந்தி பரணிக்கோ செயங்கொண்டான்
விருத்தமென்னு
மொண்பாவி லுயர்கம்பன் கோவையுலா வந்தாதிக்
கொட்டக்கூத்தன்
கண்பாய கலம்பகத்திற் கிரட்டையர்கள் வசைபாடக்
காளமேகம்
பண்பாகப் பகர்சந்தம் படிக்காச லாதொருவர்ப்
பகரொணாதே.”

என ஓர் செய்யுள் வழங்கி வருகின்றது; ஆனால், இந்நூலும் வேளூர்க்கலம்பகமுந் தவிர வேறு அரிய சந்தப் பாக்களொன்றும் கிடைக்கவில்லை. இந்நூலும், பிரதி கிடைப்ப தருமை யாதலால் கிடைத்த பிரதிகளைக்கொண்டு மிக முயன்று பரிசோதித்து அச்சிடப்பட்டது.

திருச்சிற்றம்பலம்

---

உ

கணபதி துணை

பழமொழிவிளக்கம் என்னும்

# தண்டலையார் சதகம்



## காப்பு

### விநாயகர் துதி

சீர்கொண்ட கற்பகத்தில் வாதாவி
நாயகனைத் தில்லை வாழுங்
கார்கொண்ட கரிமுகனை விகடசக்ர
கணபதியைக் கருத்துள் வைப்பாம்
பேர்கொண்ட ஞானநா யகிபாகன்
றண்டலையெம் பெருமான் மீதில்
ஏர்கொண்ட நவகண்ட மிசைந்தபழ
மொழிவிளக்க மியம்பத் தானே.

### இதுவுமது

வேதநெறி விளம்பியசொல் லாகமநூல்
விளம்பியசொல் மிகுபு ராணம
ஏதுவினிற் காட்டியசொல் லிலக்கணச்சொல்
லிசைந்தபொரு ளெல்லா நாடி
ஆதிமுத லுலகுதனில் விளங்குபழ
மொழிவிளக்க மறிந்து பாடச்
சோதிபெறு மதவேழ முகத்தொருவ
னகத்தெனக்குத் துணைசெய் வானே.

## அவையடக்கம்

வள்ளுவர்நூ லாதிபல நூலினுள
அரும்பொருளை வண்மை யாக
உள்ளபடி தெரிந்துணர்ந்த பெரியவர்கள
முன்னொரு மொருவன் போலப்
பள்ளமுது நீருலகிற் பரவுபழ
மொழிவிளக்கம் பரிந்து கூறல்
வெள்ளைமதி யினன்கொல்லத் தெருவதனி
லூசிவிற்கும் வினைய தாமே

## நூல்

தண்டலையார் தேவாலயத்தில் திருவிளக்கிடுதற் பயன்

வரமளிக்குந் தண்டலையார் திருக்கோயி
லுட்புகுந்து வலமாய் வந்தே
ஒருவிளக்கா யினும்பசுவி னெய்யுடன்று
மறைநூலி னொளிர வைத்தால்
கருவிளக்கும் பிறப்புமில்லை யிறப்புமில்லை
கைலாசங் காணி யாகும்
திருவிளக்கிட் டார்தமைமே தெய்வமளித்
திடும்வினையுந் தீருந் தானே. (க)

தண்டலையார் செய்த நன்றிக்குப் பிரதி நன்றியில்லையெனல்

கூன்செய்த பிறையணியுந் தண்டலையார்
கருணைசெய்து கோடி கோடி
யான்செய்த வினையகற்றி நன்மைசெய்தா
லுபகார மென்னு முண்டோ
ஊன்செய்த வுயிர்வளரத் தவந்தான
நடந்தேற வுதவி யாக
வான்செய்த நன்றிக்கு வையகமென்
செய்யுமதை மறந்தி டாதே. (உ)

முன் செய்த தருமத்திற்குத் தக்கபடியே இப்பொழுது பயன் கிடைக்குமெனல்

*அட்டதிசை யெங்கணும்போ யலைந்தாலும்*
*பாதாள மதிற்சென் றாலும்*
*பட்டமென வானூடு பறந்தாலு*
*மென்னவதிற் பயனுண் டாமோ*
*பிட்டுவர மண்சுமந்த தண்டலையா*
*ரேமுன்னாள் பெரியோர் கையில்*
*இட்டபடி யேயொழிய வேறாசைப்*
*படின்வருவ தில்லை தானே.* (௩)

பலர்க்குஞ் செய்யு முபகாரமே வேண்டப்படுவ தென்பது

*தன்மமதைச் செயல்வேண்டுந் தண்டலைநீ*
*ணெறியாரே தயவு செய்வார்*
*வன்மவினை செயல்வேண்டாம் பொய்வேண்டாம்*
*பிறரையொன் றும் வருத்தல் வேண்டாம்*
*கன்மநெறி வரல்வேண்டாம் வேண்டுவது*
*பலர்க்குமுப கார மாகும்*
*நன்மைசெய்தார் நலம்பெறுவர் தீமைசெய்தார்*
*தீமைபெற்று நலிவர் தாமே.* (௪)

இல்லறத்தின் தன்மையும், துறவறத்தின் தன்மையும்

*புல்லறிவுக் கெட்டாத தண்டலையார்*
*வளந்தழைத்த பொன்னி நாட்டிற்*
*சொல்லறமா தவம்புரியுஞ் சௌபரியுந்*
*துறவறத்தைத் துறந்து மீண்டான்*
*நல்லறமாம் வள்ளுவர்போற் குடிவாழ்க்கை*
*மனைவியுட னடத்தி நின்றான்*
*இல்லறமே பெரிதாகுந் துறவறமும்*
*பழிப்பின்றே லெழில தாமே.* (௫)

## பதிவிரதைகளின் தன்மை

முக்கணர்தண் டலைநாட்டிற் கற்புடைமங்
கையர்மகிமை மொழியப் போமோ
ஒக்குமெரி குளிரவைத்தா ளொருத்திவில்லே
டனையெரித்தா ளொருத்தி மூவர்
பக்கமுற வமுதளித்தா ளொருத்தியெழு
பரிதடுத்தா ளொருத்தி பண்டு
கொக்கெனவே நினைந்தனையோ கொங்கணவா
வென்றொருத்தி கூறி னாளே. (சு)

## நற்பிள்ளை யொன்றிருந்தால் போது மென்பது

நன்றிதரும் பிள்ளையொன்று பெற்றாலுங்
குலமுழுது நன்மை யுண்டாம்
அன்றியறி வில்லாத பிள்ளையொரு
நூறுபெற்று மாவ துண்டோ
மன்றினடம் புரிவாரே தண்டலையா
ரேசொன்னேன் வருடந் தோறும்
பன்றிபல வீன்றுமென்ன குஞ்சரமொன்
றீன்றதனாற் பயனுண் டாமே. (எ)

## நல்லதைப் பெரியோர் நாயகனுக் களிப்ப ரென்பது

அல்லமருங் குழலாளை வரகுணபாண்
டியராச ரன்பா லீந்தார்
கல்லைதனின் மென்றுமிழ்ந்த வூனமுதைக்
கண்ணப்பர் கனிவா லீந்தார்
சொல்லியதண் டலையார்க்குக் கீரையுமா
வடுவுமொரு தொண்ட ரீந்தார்
நல்லதுகண் டாற்பெரியோர் நாயகனுக்
கென்றதனை நல்கு வாரே. (அ)

### விருந்தின் உயர்வு

திருவிருந்த தண்டலையார் வளநாட்டி
லில்வாழ்க்கை செலுத்து நல்லோர்
ஒருவிருந்தா யினுமின்றி யுண்டபகல்
பகலாமோ வுறவாய் வந்த
பெருவிருந்துக் குபகாரஞ் செய்தனுப்பி
யின்னமெங்கே பெரியோ ரென்று
வருவிருந்தோ டுண்பதல்லால் விருந்தில்லா
துணுஞ்சோறு மருந்து தானே. (௯)

### இன்சொல்லின் உயர்வு

பொற்குடையும் பொற்றுகிலும் பொற்பணியுங்
கொடுப்பதென்ன பொருளோ வென்று
நற்கமல முகமலர்ந்தே யுபசார
மிக்கவின்சொ லுடைத னன்றே
கற்கரையு மொழிபாகர் தண்டலையார்
வளநாட்டிற் கரும்பின் வைத்த
சர்க்கரையின் பந்தலிலே தேனமாரி
பொழிந்துவிடுந் தன்மை தானே. (௧0)

### ஞானமில்லாததற் கிரங்கல்

குறும்பெண்ணு துயர்ந்தநல்லோ ராயிரஞ்சொன்
னாலுமதைக் குறிக்கொ ளாமல்
வெறும்பெண்ணு சையிற்சுழல்வே னெஞ்ஞானம்
பொருந்தியுனை வேண்டே னந்தோ
உறும்பெண்ணு ரமுதிடஞ்சேர் தண்டலைநீ
ணெறியேயென் னுண்மை தேரில்
எறும்பெண்ணு யிரமப்பா கழுதையுங்கை
கடந்ததெனு மெண்ணந் தானே. (௧௧)

தினையளவு நன்றி பனையளவாய்ச் சிறக்கு மென்பது

துப்பிட்ட வாலம்விதை சிறிதெனினும்
பெரிதாகுந் தோற்றம் போலச்
செப்பிட்ட தினையளவு செய்தநன்றி
பனையளவாய்ச் சிறந்து தோன்றும்
கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார்
வளநாட்டிற் கொஞ்ச மேனும்
உப்பிட்ட பேர்கடமை யுளவரையு
நினைக்குமிந்த வுலகந் தானே. (கஉ)

பயனற்ற செயல்கள்

மேட்டுக்கே விரைத்தவிதை வீணருக்கே
செய்தநன்றி மேயும் பட்டி
மாட்டுக்கே கொடுத்தவிலை பரத்தையர்க்கே
தேடியிட்ட வண்மை யெல்லாம்
பாட்டுக்கே யருள்புரியுந் தண்டலையார்
வீதிதொறும் பரப்பி டாமல்
காட்டுக்கே யெறித்தநிலாக் கானதுக்கே
பெய்தமழை கடுக்குங் காணே. (கங)

சிறியோர் நற்கதி யடையா ரென்பது

சங்கையறப் படித்தாலுங் கேட்டாலும்
பிறர்க்குறுதி தனைச்சொன் னாலும்
அங்கணுல கிற்சிறியோர் தாமடங்கி
நடந்துகதி யடைய மாட்டார்
திங்களணி சடையாரே தண்டலையா
ரேசொன்னேன் சிறிது காலம்
கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரைக்காய்
நல்லசுரைக் காயா காதே. (கச)

உள்ளன. அவை: குமரேச சதகம், அறப்பளீசுர சதகம் திருவேங்கட சதகம் முதலாக உள்ளனவாம். சதகத்தி லுள்ள செய்யுட்கள் எளிய நடையில் செய்யப்பட்டுள்ள மையால், பல அரிய விஷயங்கள் தெளிவாய் விளங்குகின் றன. ஆகவே, இந்நூல் அனைவராலும் பாராட்டத்தக்கதே யாம்.

இந் நூலாசிரியர் வரலாறு நன்கு புலப்படவில்லை; இவர் வேறு நூல் செய்ததாகவும் தெரியவில்லை. இந்நா லில் சோதிடக் குறிப்புகள் பல கூறப்பட்டிருத்தலால், இவர் சோதிடத்தில் மிக்க வல்லுநரென்பது வெளிப்படை யாம். "நூல் பாடிய காலம்" எனத் தலைப்பிடப்பட்ட 100-ம் செய்யுளில், இவரது காலமுதலிய விவரம் தெளி ளிவாய்க் காணலாம். இந்நூலில் 72-ம் செய்யுளில் இராகு காலத்தைக் குறிக்கவந்த விடத்துச் சில வெழுத்துக்கள் சிதைந்து "செல்லுசனி முடிவாக" என மாறிப் பொருள் விளங்காமற் போயிற்று வேறு சில பிரதிகளைக்கொண்டு பார்த்ததுமன்றி பதனைச சோதிடநூலார் மாட்டு ஆராய் ந்து, கர்ணபரம்பரையாக வழங்கி வருவதாகிய "செலபூநீ முடிவா" எனத் திருத்தி அதற்கேற்பக் குறிப்புரையும், மற்றுஞ் சில சொற்களின் வழுக்களைப் பொருட் பொருத்த முறத் திருத்தமும் செய்துள்ளேன். இந்நூல் பதிப்பித்தற் கண் ஒத்திட்டுப் பார்க்கும்போது பிரமாதத்தின லுண் டாகும் எனது தவறுகள் இதிற் காணப்படின் உலகம் பொறுக்க.

இங்ஙனம்:
சி. குமரகுரு செட்டியார்,
தமிழ்ப்பண்டிதர்,
முத்தியாலுபேட்டை உயர்தர கலாசாலை,
சென்னை.

திணையளவு நன்றி பனையளவாய்ச் சிறக்கு மென்பது

துப்பிட்ட வாலம்விதை சிறிதெனினும்
பெரிதாகுந் தோற்றம் போலச்
செப்பிட்ட திணையளவு செய்தநன்றி
பனையளவாய்ச் சிறந்து தோன்றும்
கொப்பிட்ட வுமைபாகர் தண்டலையார்
வளநாட்டிற் கொஞ்ச மேனும்
உப்பிட்ட பேர்கடமை யுளவரையு
நினைக்குமிந்த வுலகந் தானே. (கஉ)

பயனற்ற செயல்கள்

மேட்டுக்கே யிறைத்தவிறை வீணருக்கே
செய்தநன்றி மேயும் பட்டி
மாட்டுக்கே கொடுத்தவிலை பாத்தையர்க்கே
தேடியிட்ட வண்மை யெல்லாம்
பாட்டுக்கே யருள்புரியுந் தண்டலையார்
வீதிதொறும் பரப்பி டாமல்
காட்டுக்கே யெறித்தநிலாக் கானதுக்கே
பெய்தமழை கடுக்குங் காணே. (கங)

சிறியோர் நற்கதி யடையா ரென்பது

சங்கையறப் படித்தாலுங் கேட்டாலும்
பிறர்க்குறுதி தனைச்சொன் னாலும்
அங்கணுல கிற்சிறியோர் தாமடங்கி
நடந்துகதி யடைய மாட்டார்
திங்களணி சடையாரே தண்டலையா
ரேசொன்னேன் சிறிது காலம்
கங்கையிலே படர்ந்தாலும் பேய்ச்சுரைக்காய்
நல்லசுரைக் காயா காதே. (கச)

### உலக ஆசை விடாததற் கிரங்கல்

உழையிட்ட விழிமடவா ருறவுவிட்டும்
வெகுளிவிட்டு முலக வாழ்விற்
பிழைவிட்டு மின்னமின்ன மாசைவிடா
தலக்கழியப் பெற்றோ னந்தோ
தழையிட்ட கொன்றைபுனை தண்டலைநீ
ணெறியேயென் றன்மை யெல்லாம்
மழைவிட்டுந் தூவானம் விட்டதில்லை
யாயிருந்த வண்மை தானே. (கரு)

### துர்ச்சனப்பிள்ளைக்கு ஊரார் புத்தி சொல்வா ரெனல்

கோச்சையிற்பிள்ளைக்குகவுந் தண்டலையார்
வளநாட்டிற் கொடிகாய் வந்த
வச்சிரப்பிள்ளைக்குமுன மாதவனே
புத்திசொன்னான் வசையுஞ் சொன்னான்
அச்சுதப்பிள்ளைக்குமந்த வாண்டவரே
புத்திசொன்னா ராக லாலே
துர்ச்சனப்பிள்ளைக்கூரார் புத்திசொல்லு
வாரென்றே சொல்லு வாரே. (கசு)

### பொறுத்தார் அரசாள்வா ரென்பது

கறுத்துவிட முண்டருளுந் தண்டலையார்
வளநாட்டிற் கடிய தீயோர்
குறித்துமனை யாளரையிற் றுகிலுரிந்து
மைவர்மனங் கோபித் தாரோ
பறித்துரிய பொருண்முழுதுங் கவர்ந்தாலு
மடித்தாலும் பழிசெய் தாலும்
பொறுத்தவரே யரசாள்வர் பொங்கினர்
காடாளப் போவர் தாமே. (கஎ)

### பொறுமைக் குணத்தா ரியல்பு

அள்ளித்தண் ணீறணியுந் தண்டலையார்
வளநாட்டி லாண்மை யுள்ளோர்
வின்னாற்ற கல்வியுள்ளோர் செல்வமுள்ளோ
ரழகுடையோர் மேன்மை நோக்கி
உள்ளத்தி லழன்றழன்று நடக்கில்லை
யெனவுரைத்திங் குழல்வா ரெல்லாம்
பிள்ளைபெற் றவர்தமைப்பார்த் திருந்துபெரு
மூச்செறியும் பெற்றி யோரே. (கஅ)

### எதுவும் விதிப்படி நடக்கு மெனல்

மண்ணுலகா ளவுநினைப்பார் பிறர்பொருண்மே
லாசைவைப்பார் வலுமை செய்வார்
புண்ணியமென் பதைச்செய்யார் கடைமுறையி
லலக்கழிந்து புரண்டே போவார்
பண்ணுலவு மொழிபாகர் தண்டலையார்
வகுத்தவிதிப் படியல் லாமல்
எண்ணமெல்லாம் பொய்யாகு மெளனமே
மெய்யாகு மியற்கை தானே. (க௯)

### பகுத்தறிவில்லாதா ரியல்பு

சொன்னதைச் சொல்லுமிளங் கிள்ளையென்பார்
தண்டலையார் தொண்டு பேணி
இன்னத்துக் கின்னதெனும் பகுத்தறிவொன்
றில்லாத வீன ரெல்லாம்
தன்னைத்துக் கண்டவுடன் காணுமன்
முறைபேசிச் சாடை பேசி
முன்னுக்கொன் றாயிருந்து பின்னுக்கொன்
றாய்நடந்து மொழிவர் தாமே. (உ0)

கோடியர் இயல்பும், மடையர் இயல்பும்

கோடியருக்கு நல்லபுத்தி சொன்னாலுந்
தெரியாது கொடையில் லாத
மடையருக்கு மதுரகவி யுரைத்தாலு
மவர்கொடுக்க மாட்டார் கண்டீர்
படியளக்குந் தண்டலைநீ ணெறியாரே
யுலகமெலாம் பரவி யோடி
விடியன்மட்டு மழைபெயினு மதிலோட்டாங்
குச்சின் முளை வீசி டாதே. (உக)

தன் பாவந் தன்னுடனே வருமென்பது

செங்காவி மலர்த்தடஞ்சூழ் தண்டலைநீ
ணெறியேநின் செயலுண் டாகில்
எங்காகி லென்னவவ ரெண்ணியதெல்
லா முடியு மில்லை யாகில்
பொங்காழி சூழுலகி லுள்ளங்கால்
வெள்ளெலும்பாய்ப் போக வோடி
ஐங்காதம் போனாலுந் தன்பாவந்
தன்னுடனே யாகுந் தானே. (உஉ)

மூடர் தமிழருமை யறியா ரென்பது

தாயறிவாள் மகளருமை தண்டலைநீ
ணெறிநாதர் தாமே தந்தை
ஆயறிவா ரெமதருமை பரவையிடந்
தூதுசென்ற தறிந்தி டாரோ
பேயறிவார் முழுமூடர் தமிழருமை
யறிவாரோ பேசு வாரோ
நாயறியா தொருசந்திச் சட்டிப்பா
னையினந்த நியாயந் தானே. (உங)

ஈயார் வாழ்வு பயன்படா தெனல்

கட்டுமாங் கனிவாழைக் கனிபலவின்
கனிகளுப கார மாகும்
சிட்டருமவ் வணங்கேடும் பொருளெல்லா
மிரப்பவர்க்கே செலுத்தி வாழ்வார்
மட்டலவுஞ் சடையாரே தண்டலையா
ரேசொன்னே னவனங்க ளோடும்
எட்டிமரம் பழுத்தாலு மீயாதார்
வாழ்ந்தாலு மென்னுண் டாமே. (உச)

புகழுடையானே புருடனெனல்

ஓதரிய தண்டலையா ரடிபணிந்து
நல்லவனென் றுலக மெல்லாம்
போதமிகும் பேருடனே புகழ்படைத்து
வாழ்பவனே புருட னல்லால்
ஈதலுட னுரக்கமின்றிப் பொன்காத்த
பூதமென விருந்தா லென்ன
காதவழி பேரில்லான் கழுதையோ
டொக்குமெனக் காண லாமே. (உரு)

அன்பில்லா தன்னமிடுதலும், ஊமை கண்ட கனவும், தமிழ்ஞான மில்லாதவன் அறிவும் ஒன்றெனல்

பரியாம லிடுஞ்சோறு மூமைகண்ட
கனவுமொன்று பரிசி லீயான்
அரிதான செந்தமிழி னருள்சிறிது
மில்லாதா னறிவு மேதான்
கரிகாலன் பூசைபுரி தண்டலைநீ
ணெறியாரே கதித்த வோசை
தெரியாத செவிடன்காதினிற்சங்கு
குறித்ததெனச் செப்ப லாமே. (உசு)

ஜீவகாருண்யத்தின் உயர்வு

முன்னறிய மறைவழங்குந் தண்டலையா
ராகமத்தின் மொழிகேளாமல்
பின்னுயிரை வதைத்தவனுங் கொன்றவனுங்
குறைத்தவனும் பெருஞ்சொல்லானும்
அந்நெறியே சமைத்தவனு முண்டவனு
நரகுறுவ ராதலாலே
தன்னுயிர்போ லெந்நாளு மன்னுயிருக்
கிரங்குவதுந் தக்கதாமே. (உஎ)

பகவானடி பணிய நேரமில்லாதிருத்தல்பற்றி யிரங்கல்

உருவெடுத்த நாண் முதலா வொருசாணும்
வளர்க்கவுட லுழல்வ தல்லால்
மருவிருக்கு நின்பாத மலர்தேடித்
தினம்பணிய மாட்டே னந்தோ
திருவிருக்கு மணிமாடத் தண்டலைநீ
ணெறிபேயென் செய்தி யெல்லாம்
சருகரிக்க நேரமின்றித் தீக்காய
நேரமில்லாத் தன்மை தானே. (உஅ)

வெளிவேடம் கூடாதெனல்

காதிலே திருவேடங் கையிலே
செபமாலை கழுத்தின் மார்பின்
மீதிலே தாழ்வடங்கண் மனத்திலே
கரவடமாம் வேட மாமோ
வாதிலே யயன்றேடுந் தண்டலைநீ
ணெறியாரே மனிதர் காணும்
போதிலே மவுனமிராப் போதிலே
ருத்ராக்ஷப் பூனை தானே. (உகூ)

தாரொன்று நினைக்கத் தெய்வமொன்று நினைக்குமென்பது

மானொன்று வடிவெடுத்து மாரீசன்
போய்மடிந்தான் மானை யென்று
தேனொன்று மொழிபேசிச் சீதைதனைச்
சிறையிருக்கத் திருடிச் சென்றோன்
வானொன்று மரசிழந்தான் தண்டலையார்
திருவுளத்தின் மகிமை காணீர்
தானொன்று நினைக்கையிலே தெய்வமொன்று
நினைப்பதுவுஞ் சகசந் தானே. (௯௦)

பொய் சொல்லும் வாய்க்குப் போசனங் கிடையாதென்பது

கைசொல்லும் பணிகாட்டுங் களிற்றுரியார்
தண்டலையைக் காணார் போலப்
பொய்சொல்லும் வாயினர்க்குப் போசனமும்
கிடையாது பொருளுமில் லாது
மைசொல்லுங் காரளிசூழ் தாழைமலர்
பொய்சொல்லி வாழ்ந்த துண்டோ
மெய்சொல்லி வாழாதான் பொய்சொல்லி
வாழ்வதில்லை மெய்ம்மை தானே. (௯௧)

பெரியோரைப் பழித்தலால் அவர்க்குக் குறையில்லை யென்பது

அந்தணரை நல்லவரைப் பரமசிவ
னடியவரை யுகந்தை யாலோர்
நிந்தனைசொன் னாலுமென்ன வைதாலு
மென்னவதி னிலேசு முண்டோ
சுந்தரர்க்குத் தூதுசென்ற தண்டலைநீ
ணெறியாரே துலக்கும் பூர்ண
சந்திரனைப் பார்த்துநின்று நாய்குரைத்த
போதிலென்ன தாழ்ச்சி தானே. (௯௨)

பெரியோர்க்குத் தீங்கு செய்வோர் அழிவ ரென்பது

கோடாமற் பெரியவர்பா னடப்பதன்றிக்
குற்றமுடன் குறைசெய் வோர்கள்
ஆடாகிக் கிடந்தவிடத் ததன்மயிருங்
கிடவாம லழிந்து போவார்
வீடாநற் கதியுதவுந் தண்டலையா
ரேசொன்னேன் மெய்யோ பொய்யோ
கோடாலிக் காம்பேதன் குலத்தினுக்குக்
கேடான கொள்கை தானே. (௩௩)

நடக்கை தூலந்தால் சிறப்பில்லை யெனல்

சின்னமெங்கே கொய்பெங்கே சிவிகையெங்கே
பரியெங்கே சிவியா ரெங்கே
பின்னையொரு பாழுமில்லை நடக்கைகுலைந்
தாலுடனே பேய்பே யன்றோ
சொன்னவிலுந் தண்டலையார் வளநாட்டிற்
குங்கிலியத் தூபங் காட்டும்
சன்னதமா னதுகுலைந்தாற் கும்பிடெங்கே
வம்பிது தனையென் றாரே. (௩௪)

துறவறம் பெரிதெனல்

சிறுபிறைதுன் னியசடையார் தண்டலைசூழ்
பொன்னிவளஞ் செழித்த நாட்டில்
குறைபகலும் பெருவாழ்வு மனைவியுமக்
களும்பொருளாக் குறித்தி டாமல்
மறைபயில்பத் திரகிரியும் பட்டினத்துப்
பிள்ளையுஞ்சேர் மகிமை யாலே
துறவறமே பெரிதாகுந் துறவிக்கு
வேந்தனொரு துரும்பு தானே. (௩௫)

உலகத்திருப்பினும் ஒட்டாதிருக்கவேண்டு மெனல்

பேரிசைக்குஞ் சுற்றமுடன் மைந்தருமா
தருஞ்சூழப் பிரபஞ் சத்தே
பாரியையுற் றிருந்தாலும் திருநீற்றிற்
கழற்காய்போற் பற்றில் லாமல்
சீரிசைக்குந் தண்டலையா ரஞ்செழுத்தை
நினைக்கின்முத்தி சேர லாகும்
ஆரியக்கூத் தாடினுங் காரியமேற்
கண்ணாவ தறிவு தானே. (௧௬)

மரம் வைத்தவர் தண்ணீர் வார்ப்ப ரென்பது

இரந்தனையித் தனைநாளும் பரந்தனைநா
ளென்றலைந்தா யினிமே லேனும்
கரந்தைமதி சடையணியுந் தண்டலைநீ
ணெறியாரே காப்பா ரென்னும்
உரந்தனைவைத் திருந்தபடி யிருந்தவருக்
குள்ளதெல்லா முண்டா முண்மை
மரந்தனைவைத் தவர்நாளும் வாடாமற்
றண்ணீரும் வார்ப்பர் தாமே. (௧௭)

செங்கோல் மன்னனே தெய்வ மெனல்

நாற்கவியும் புகழுவருந் தண்டலையார்
வளநாட்டி னல்ல நீதி
மார்க்கமுட னடந்துசெங்கோல் வழுவாமற்
புவியாளும் வண்மை செய்த
தீர்க்கமுள்ள வரசனையே தெய்வமென்பார்
கொடுங்கோன்மை செலுத்தி நின்ற
மூர்க்கமுள்ள வரசனுந்தன் மந்திரியு
மாழ்நரகின் ழ்ந்து வாரே. (௧௮)

குணங்களுக் கழகு இன்னவை என்பது

ஓதரிய வித்தைவந்தா லுரியசபைக்
கழகாகு முலகில் யார்க்கும்
ஈதலுட னறிவுவந்தா லினியகுணங்
களுக்கழகா யிருக்கு மன்றோ
நீதிபெறு தண்டலையார் திருநீறு
மெய்க்கழகாய் நிறைந்து தோன்றும்
காதிலணி கடுக்கனிட்டான் முகத்தினுக்கே
யழகாகிக் காணுந் தானே (௩௯)

கல்வி யில்லார் இடம்பஞ் செய்வ ரெனல்

பாரதியா ரண்ணாவிப் புலவரென்பார்
கல்வியினிற் பழக்க மில்லார்
சீரறியார் தலையறியார் பல்லக்கே
றவர்புலமை செலுத்திக் கொள்வார்
ஆரணியுந் தண்டலைநீ ணெறியாரே
யிலக்கணநூ லறியா ரேனும்
காரிகையா கிலுங்கற்றுக் கவிசொல்லார்
பேரிகொட்டக் கடவர் தாமே. (௪0)

சாஸ்திர மறியார் உபதேசம் பயன்படா தெனல்

அருண்மிகுத்த வாகமநூல் படித்தறியார்
கேள்வியையு மறியார் முன்னே
இருவினையின் பயனறியார் குருக்களென்றே
யுபதேச மெவர்க்குஞ் செய்வார்
வரமிகுத்த தண்டலைநீ ணெறியாரே
யவர்கிருபா மார்க்க மெல்லாம்
குருடனுக்குக் குருடன்கோல் கொடுத்துவழி
காட்டிவருங் கொள்கை தானே. (௪௧)

## தேக மிருக்கும்போதே அறத்தைத் தேடிக்கொள்ளவேண்டு மெனல்

நேற்றுள்ளா ரின்றிருக்கை நிச்சயமோ
வாதலினா னினைக்க போதே
ஊற்றுள்ள பொருளுதவி யறந்தேடி
வைப்பதறி வுடைமை யன்றோ
கூற்றுள்ள மலையவருந் தண்டலையா
ரேசொன்னேன் குடபால் வீசும்
காற்றுள்ள போதெவருந் தூற்றிக்கொள்
வதுநல்ல கருமந் தானே. (சஉ)

## சந்நியாசிகள் பொருள் தேடல் இழிவென்பது

'வர்க்கத்தார் தமைவெறுத்த விருத்தருமாய்
மெய்ஞ்ஞான வடிவ மானோர்
கற்கட்டா கியமடமுங் காணியுஞ்செம்
பொனுந்தேடுங் கரும மெல்லாம்
பொற்கொத்தாரு செங்கெல்வயற் றண்டலையா
ரேசொன்னேன் பொன்னு டாளும்
சொர்க்கத்தே போம்போதுங் கக்கத்தே
ராட்டினத்தைச் சுமந்த வாறே. (சஙூ)

## பெரியோரை யடுத்தவர்க் குயர்வுண்டா மெனல்

ஆம்பிள்ளா யெனக்கொடுக்கும் பெரியோரை
யடுத்தவரை யவனிக் கெல்லாம்
நாம்பிள்ளா யதிகமென்பார் நன்றாரு
மேவல்செய நாளும் வாழ்வார்
வான்பிள்ளா யெனுமேனித் தண்டலையார்
பூஷணமாய் வளர்த்த நாகம்
என்பிள்ளாய் கருடாநீ சுகமோவென்
றுரைத்தவித மென்ன லாமே. (சச)

புல்லரை யடுப்பதால் மிடி தீராதெனல்

வடிவிட்ட புல்லர்தமை யடுத்தாலும்
விடுவதுண்டோ மலிநீர்க் கங்கை
முடியிட்ட தண்டலைநா தரைப்புகழிற்
பெருவாழ்வு முழுது முண்டாம்
மிடியிட்ட வினைதீருந் தெய்வமட்டும்
விடியாமல் வீணர் வாயிற்
படியிட்டு விடுவதுண்டோ வவராருளே
கண்ணுகப் பற்று வீரே. (சரு)

கல்ணீ ருகுத்தாலும் எமன் விடா னென்பது

பொலியவளம் பலதழைத்த தண்டலைநீ
ணெறிபாதம் போற்றி நாளும்
வலியவலஞ் செய்தறியீர் மறஞ்செய்வீர்
நமன்றூதர் வந்து கூடி
மெலியவரைந் திடும்பொழுது கலக்கண்ணீ
ருகுத்தாலும் விடுவ துண்டோ
எலியழுது புலம்பிடினும் பூனைபிடித்
ததுவிடுமோ வென்செய் வீரே. (சசா)

தமிழில் எவரும் கெட்டிக்காரரெனச் சொல்ல முடியா தெனல்

மற்றவரோ தமிழ்பாடி நாட்டவல்லார்
நக்கிரர் வலிய ராகி
வெற்றிபுனை மீனாக்ஷி சுந்தரநா
யகரடுத்து விளம்பும் போதில்
பற்றுளதண் டலைவாழுங் கடவுளென்றும்
பாராமற் பயப்ப டாமல்
நெற்றிவிழி காட்டினுங் குற்றமே
குற்றமென நிறுத்தி னாரே. (சஎ

பஞ்ச காலத்தில் அன்ன மிடுதலே சிறந்த தென்பது

சீரிலகுந் தண்டலையார் திருவருளா
லகமேறிச் செழித்த நாளில்
பாரியென வாயிரம்பேர்க் கன்னதா
னங்கொடுக்கும் பலனைப் பார்க்க
நேரிடும்பஞ் சந்தனிலே யெவ்வளவா
கிலுங்கொடுத்தா னீதி யாகும்
மாரிபதின் கலநீரிற் கோடைதனி
லொருகுடநீர் வன்மை தானே. (௪அ)

தண்டலையிற் சேராமல் திரிவார் பயன் பெறா ரென்பது

பிறக்கும்போ தொருபொருளுங் கொடுவந்த
தில்லையுயிர் பிரிந்து மண்மேல்
இறக்கும்போ திலுங்கொண்டு போவதில்லை
யென்றுசும்மா விருந்து வீணே
சிறக்குந்தா யினுமருள்வார் தண்டலையிற்
சேராமற் றேச மெல்லாம்
பறக்குங்கா கமதிருக்குங் கொம்பறியா
தெனத்திரிந்து பயன்பெ றாரே. (௪௯)

வரும் இன்ப துன்பங்களைத் தெய்வச் செயல்களென
நினைக்கவேண்டு மெனல்

வைதிடினும் வாழ்த்திடினு மின்பதுன்பம்
வந்திடினும் வம்பு கோடி
செய்திடினுந் தண்டலைநீ ணெறியார்தஞ்
செயலென்றே தெளிவ தல்லால்
மெய்தவிர வவர்செய்தா ரிவர்செய்தா
ரெனநாடி வெறுக்க லாமோ
எய்தவர்தம் மருகிருக்க வம்பைநொந்த
கருமமென்ன வியம்பு வீரே. (௫௦)

போங்காலம் வருமுன் புண்ணியஞ் செய்யவேண்டு மெனல்

வாங்கால முண்டசெழுந் தண்டலையா
ரடிபோற்றி வணங்கி நாடிப்
போங்காலம் வருமுன்னே புண்ணியஞ்செய்
தரியகதி பொருந்து றமல்
ஆங்கால முள்ளதெல்லாம் விபசார
மாகியறி வழிந்து வீணை
ஈங்காலஞ் சங்கரா சங்கரா
வெனின் வருமோ தருமந் தானே. (௫௧)

பயனற்ற உதவி இன்ன தென்பது

சுற்றமாய் நெருங்கியுள்ளார் கனையடைந்தார்
கற்றறிந்தார் துணையே நில்லார்
உற்றவே தியர்பெரியோர்க் குதவியன்றிப்
பிறர்க்குதவு முதவி யெல்லாம்
சொற்றநான் மறைபரவுந் தண்டலையா
ரேசொன்னேன் சுமந்தே நொந்து
பெற்றதாய் பசித்திருக்கப் பிராமணபோ
சனநடத்தும் பெருமை தானே. (௫௨)

துன்மார்க்க ரியல்பும், நன்மார்க்க ரியல்பும்

துன்மார்க்கர்க் காயிரந்தான் சொன்னாலு
மறந்துவிட்டுத் துடுக்கே செய்வார்
சன்மார்க்கர்க் கொருவார்த்தை சொலுமளவே
மெய்யதனிற் றழும்பாக் கொள்வார்
பன்மார்க்க மறைபுகழுந் தண்டலையா
ரேசொன்னேன் பதமே யான
நன்மாட்டுக் கோரடியா நற்பெண்டிர்க்
கொருவார்த்தை நடத்தை யாமே. (௫௩)

வையம் புரப்பார்க்குச் சுவர்க்கம் கிடைக்குமெனல்

கரப்பார்க்கு நல்லகதி வருவதில்லை
செங்கோலிற் கடல்சூழ் வையம்
புரப்பார்க்கு முடிவிலே சுவர்க்கமல்லா
லரகமில்லை பொய்யி தென்றால்
உரப்பார்க்கு நலம்புரியுந் தண்டலையா
ரேசொன்னா ரொருமை யாக
இரப்பார்க்கு வெண்சோறு பஞ்சமுண்டோ
வொருக்காலு மில்லை தானே. (ருச)

கொடுங்கோல் மன்ன னியல்பு

படுங்கோல மறியாமற் றண்டலையார்
திருப்பணிக்கும் பங்கஞ் செய்வார்
நெடுங்கோளுந் தண்டமுமாய் வீணரை
வீணனைப்போ னீதி செய்வார்
கெடுங்கோப மல்லாமல் விளைவுண்டோ
மழையுண்டோ கேள்வி யுண்டோ
கொடுங்கோன்மன் னவனாட்டிற் கடும்புலிவா
ழுங்காடு குணமென் பாரே. (ருரு)

கெடுபவர் இன்னாரென்பதும், கெடாதவர் இன்னவ ரென்பதும்

உள்ளவரைக் கெடுத்தோரு முதவியற்று
வாழ்ந்தோரு முறைபெற் றோருந்
தள்ளிவழக் குரைத்தோருஞ் சற்குருவைப்
பழித்தோருஞ் சாய்ந்தே போவார்
பள்ளவயற் றண்டலையார் பத்தரடி
பணிந்தோரும் பாடி னோரும்
பிள்ளைகளைப் பெற்றோரும் பிச்சையிட்ட
நல்லோரும் பெருகு வாரே. (ருசு)

அற்பருக்கு வாழ்வுவந்தால் அர்த்தராத்திரியிற் குடைபிடிப்ப ரென்பது

விற்பனர்க்கு வாழ்வுவந்தான் மிகவணங்கிக்
கண்ணோட்ட மிகவுஞ் செய்வார்
சொற்பருக்கு வாழ்வுவந்தாற் கண்டெரியா
திறுமாந்து துன்பஞ் செய்வார்
பற்பலர்க்கு வாழ்வுதருந் தண்டலையா
ரேசொன்னேன் பண்பில் லாத
அற்பருக்கு வாழ்வுவந்தா லர்த்தராத்
திரிகுடையே லாகுந் தானே. (௫௭

பிறர் பொருள் பறித்துத் தருமஞ் செய்வதால் பயனில்லை யெனல்

விசைபயிருந் தண்டலையார் வளநாட்டி
லொருத்தர்சொல்லை மெய்யா வெண்ணி
வசைபெருக வநியாயஞ் செய்துபிறர்
பொருளையெல்லாம் வலிய வாங்கித்
திசைபெருகுங் கீர்த்தியென்றுந் தன்மமென்றுந்
தானமென்றுஞ் செய்வ தெல்லாம்
பசுவினையே வதைசெய்து செருப்பினைத்தா
னங்கொடுக்கும் பண்பு தானே. (௫௮)

சிறியோர் அரசு பெற்றாலும் பெரியோ ராகா ரென்பது

சிறியவரா மூழுமூடர் துரைத்தனமா
யுலகாளத் திறம்பெற் றாலும்
அறிவுடையார் தங்களைப்போற் சற்குணமு
முடையோர்க ளாக மாட்டார்
மறிதருமான் மழுவேந்துந் தண்டலையா
ரேசொன்னேன் வாரி வாரிக்
குறுணிமைகா னிட்டாலுங் குறிவடிவங்
கண்ணாகிக் குணங்கொ டாதே. (௫௯)

தண்டலையாரைப் பணிவார்க்குப் பிறப்பில்லை யெனல்

கற்றவர்க்குக் கோபமில்லை கடந்தவர்க்குச்
சாதியில்லை கருணை கூர்ந்த
நற்றவர்க்கு விருப்பமில்லை நல்லவருக்
கொருகாலு நரக மில்லை
கொற்றவருக் கடிமையில்லை தண்டலையார்
மலர்ப்பாதங் கும்பிட் டேத்தப்
பெற்றவர்க்குப் பிறப்பில்லை பிச்சைசோற்
றினுக்கில்லை பேச்சுத் தானே. (௬0)

நல்ல பெண்ணை மட்டிக்குக் கொடுத்தல் தகாதெனல்

பரங்கருணை வடிவாகுந் தண்டலையார்
வளநாட்டிற் பருவஞ் சேர்ந்த
சரங்குலவு காமகலை தனையறிந்த
வதிரூபத் தையலாரை
வரம்புறுதா ளாண்மையில்லா மட்டிகளுக்
கேகொடுத்தால் வாய்க்கு மோதான்
குரங்கினது கையினறும் பூமாலை
தனைக்கொடுத்த கொள்கை தானே. (௬௧)

நல்ல பெண்களால் நலமுண்டாமெனல்

பிரசமுண்டு வரிபாடுந் தண்டலையார்
வளநாட்டிற் பெண்க ளோடு
சரசமுண்டு போகமுண்டு சங்கீத
முண்டுசுகந் தானே யுண்டிங்
குரைசிறந்த வடிமையுண் டோர் கேடிக்கணுண் டோ
வொன்றுமில்லை யுலகுக் கெல்லாம்
அரைசியுண்டேல் வரிசையுண்டா மக்களுமுண்
டாகின்மச்சா னன்புண் டாமே. (௬௨)

மந்திரி யில்லாச் சபையில் நீதி யில்லை யெனல்

தந்தைமொழி யுமைசேருந் தண்டலையார்
பொன்னிவளந் தழைத்த நாட்டில்
வித்தகமந் திரியில்லாச் சபைதனிலே
நீதியில்லை வேந்தர்க் கெல்லாம்
புத்திநெறி நீதிசொல்ல மந்திரியில்
லாதொருவர் போதிப் பாரோ
நித்தலுமுண் சோற்றின் முழுப் பூசினிக்காய்
மறைத்ததுவு நிசம தாமே. (௬௩)

சமயமறிந்து பேசவேண்டு மெனல்

நேசமுடன் சபையில்வந்தால் வேளையறிந்
திங்கிதமா நிருபர் முன்னே
பேசுவகை யுசிதமல்லா னடுவிலொரு
வன்குழறிப் பேச லெல்லாம்
வாசமிகுந் தண்டலைநீ ணெறியாரே
யபிஷேக மலிநீ ராட்டிப்
பூசைபண்ணும் வேளையிலே காடியைவிட்
டோட்டுவது போலுந் தானே. (௬௪)

கெடுவான் கேடுநினைப்பா னென்பது

மன்னுலகிற் பிறர்குடியை வஞ்சனையிற்
கெடுப்பதற்கு மனத்தி னாலே
உன்னிடினு முரைத்திடினு மவன்றனையே
கெடுவனென்ப துண்மை யன்றோ
தென்னவன்சோ ழன்பணியுந் தண்டலைநீ
ணெறியாரே தெரிந்து செய்யுந்
தன்வினைதன் னைச்சுடவோட் டப்பம்வீட்
டைச்சுடவுந் தான்கண் டோமே. (௬௫)

## பெரியோர் வழியைத் தள்ளலாகா தெனல்

முன்பெரியோர் தொண்டுபட்டு நடந்தவழி
தனைப்பழித்து மூடனை பேசிப்
பின்பல்லை யுடல்கூட்டி நூதனமா
நடத்துவது பிழைபா டெய்தில்
துன்பறியாக் கதியருளுந் தண்டலைநீ
ணெறியாரே தூய ராகி
அன்புளதா ரைப்பழித்து மகளேதோ
செபத்தொடக்கு மறிவு தானே. (௬௬)

## நரஸ்துதி செய்யலாகா தெனல்

தண்ணமரு மலர்ச்சோலைத் தண்டலைநீ
ணெறியேநின் றன்னைப் பாடில்
எண்ணமிக விம்மையிலு மறுமையிலும்
வேண்டியதுண் டிதையோ ராமல்
மண்ணின்மிசை நரஸ்துதிகள் பண்ணியலைந்
தேதிரியா வாணா ளெல்லாம
வெண்ணெய்தம திடத்திருக்க நெய்தேடிக்
கொண்டலையும் வீணர் தாமே. (௬௭)

## இன்னாருக்கின்னார் துணை யெனல்

அந்தணர்க்குத் துணைவேத மரசருக்குத்
துணைவயவா ளவனி மீது
மைந்தருக்குத் துணைதாயார் ஆதருக்குத்
துணைமதுர வார்த்தை யன்றோ
நந்தமக்குத் துணையான தண்டலைநீ
ணெறியாரே நண்ப ரான
சுந்தரர்க்குத் துணைநாதே மேழையர்க்குத்
தெய்வமே துணையென் பாரே. (௬அ)

இன்னார் இன்னதற்கு அஞ்சா ரெனல்

போரஞ்சா ரதிவீரர் பொருளஞ்சார்
விதரணஞ்சேர் புருஷர் நோயும்
நீரஞ்சார் மறைமுனிவர் நெருப்பஞ்சார்
கற்புடைய நிறைசேர் மின்னார்
வாரஞ்சா முலையிடஞ்சேர் தண்டலையா
ரேசொன்னேன் மதயா வென்னுங்
காரஞ்சா திளஞ்சிங்கங் களத்தவலி
யார்க்குதன் காலஞ் சாரே. (௬௯)

ஒன்றுக்கு இன்னது ஒழியா தெனல்

உபசாரஞ் செய்பவரை விலக்கிடுறு
மவர்செய்கை பொழுந்து போகா
தபசாரஞ் செய்வாரை படுக்காலும்
வைதாலு மதுநில் லாது
சுபசாரத் தண்டலையார் வளநாட்டிற்
றிருடருக்குத் தொழிலில் லாது
விபசாரஞ் செய்வாரை மேனியெல்லாஞ்
சுட்டாலும் விட்டி டாரே. (௭௦)

இழிந்த பிரபுக்கள் தரத்துக்குத் தக்க சன்மானஞ்
செய்யா ரெனல்

சகமிக்க தண்டலையா ரடிபோற்று
மகராசர் சபையில் வந்தால்
சுகமிக்க வேசையர்க்குப் பொன்னூறு
கொடுப்பர்தமிழ் சொன்ன பேர்க்கோ
ஆகமிக்க சோறிடுவா ரந்தணருக்
கெனிலொழி யரிசி யீவார்
பகடிக்கோ பணப்பத்துத் திருப்பாட்டுக்
கொருகாசு பாலிப் பாரே. (௭௧)

### பணமே எல்லாவற்றிற்கும் பிரதான மென்பது

பணந்தானே பறிவாகும் பணந்தானே
வித்தையுமாம் பரிந்து தேடும்
பணந்தானே குணமாகும் பணமில்லா
தவர்பிணமாம் பான்மை சேர்வர்
பணந்தானே பேசுவிக்குந் தண்டலைநீ
ணெறியாரே பார்மீ திற்றான்
பணந்தானே பந்தியிலே குலந்தானே
குப்பையிலே படுக்குந் தானே. (எஉ)

### சிவனடியார், எவர்க்கும் அஞ்சாரெனல்

புனங்காட்டு மன்றும்வின் றுமஞ்சவருங்
காலனையும் போடா வென்றே
இனங்காட்டு மார்க்கண்டன் கடிந்துபதி
னாறுவய தென்றும் பெற்றான்
அனங்காட்டுந் தண்டலையா ரடியாரெல்
லாமொருவர்க் கஞ்சு வாரோ
பனங்காட்டு நரிதானுஞ் சலசலப்புக்
கொருநாளும் பயப்ப டாதே. (எங)

### ஊரிலொருவனே தோழன், ஆருமற்றவனே தார மென்பது

சீரிலகுந் தண்டலையார் வளநாட்டி
லொருதோழன் றீமை தீர
வாரமிகும் பிள்ளைதனை யரிந்துண்டா
னொருவேந்தன் மணந்து கொண்ட
ஆர்வமிகு மனைக்கிழத்தி யாண்டிச்சி
வடிவுகொண்டா ளாத லாலே
ஊரிலொரு வன்றோழ னாருமற்ற
தேதார முண்மை தானே. (எச)

## ஞானிகளின் இயல்பு

ஞானவறி வெனுஞானச் செயலுடையார்
மாதர் முலை தழுவி னாலும்
ஆனதொழில் வகைவகையாச் செய்தாலு
மனுபோக மவர்பா லுண்டோ
கானுறையுந் தண்டலையா ரடிபோற்றுஞ்
சுந்தரனார் காமி போலாய்
மேனவிலுஞ் சுகம்படுக்கை மெத்தைபறி
பாதெனவே விளம்பி னாரே. (எரு)

## சோற்றின் செயல்கள்

சோறென்ன செய்யுமெல்லாம் படைத்திடவே
செய்யுமருள் சுரந்து காக்கும்
சோறென்ன செய்யுமெல்லா மழித்திடவே
செய்யுமதன் சொரூப மாக்கும்
சோறென்ன வெளிதேயோ தண்டலையார்
கம்பூசை துலங்கச் செய்யும்
சோறென்ன செய்யுமெனிற் சொன்னவண்ணஞ்
செயும்பழமை தோற்றுந் தானே. (எசு)

## பித்தருக்குத் தங்குணமே சிறந்ததா மெனல்

எத்தருக்கு முலுத்தருக்கு மீனருக்கு
மூடருக்கு மிரக்கம் பாரா
மத்தருக்குங் கொடிதாமவ் வக்குணமே
நற்குணமா வாழ்ந்து போவார்
பத்தருக்கு நலங்காட்டுந் தண்டலையா
ரேயறிவார் பழிப்பா ரேனும்
பித்தருக்குத் தங்குணமே நூலினுஞ்செம்
மையதான பெற்றி யாமே. (எஎ)

மனிதர், தங்கள் தங்கள் இயற்கைக்குத் தக்கபடி
நடந்துகொள்ள வேண்டுமெனல்

பன்னகவே வணிப்பரமர் தண்டலையார்
நாட்டிலுள்ள பலருங் கேளீர்
தன்னறிவு தன்னினைவு தன்மகிமைக்
கேற்றநடை தகுமே யல்லால்
சின்னவரும் பெரியவர்போ லேநடந்தா
லுள்ளதும்போஞ் சிறிய காகம்
அன்னநடை நடக்கப்போய்த் தன்னடையுங்
கெட்டவகை யாகுந் தானே. (எஅ)

பெரியோரைப்போல் சிறியோரும் தொழில் நடத்த
ஆரம்பிப்பா ரெனல்

பேரான கவிராச ருடன்சிறிய
கவிகளுமோர் ப்ரபந்தஞ் செய்வார்
வீராதி வீரருடன் கோழைகளும்
வாள்பிடித்து விருது சொல்வார்
பாராளுந் தண்டலைநீ ணெறியாரே
யிருவரையும் பகுத்துக் காணில்
ஆராயு மகதேவ ராடிடத்துப்
பேய்களுநின் றாடு மாறே. (எகூ)

பொல்லாத கள்ளர் இன்னா ரென்பது

செழுங்கள்ளி நிறைசோலைத் தண்டலைநீ
ணெறியாரே திருடிக் கொண்டே
எழுங்கள்ளர் நல்லகள்ளர் பொல்லாத
கள்ளரினி யாரோ வென்றால்
கொழுங்கள்ளர் தம்முடன்கும் பிடுங்கள்ளர்
திருநீறு குழைக்குங் கள்ளர்
அழுங்கள்ளர் தொழுங்கள்ள ராசாரக்
கள்ளரிவ ரைவர் தாமே. (அ0)

பெரியோர் மனமும் செயலும் ஒன்றயிருக்கு மெனல்

தனத்திலே மிகுத்தசெழுந் தண்டலையார்
பொன்னிவளந் தழைத்த நாட்டில்
இனத்திலே மிகும்பெரியோர் வாக்குமன
மொன்றாகி யெல்லாஞ் செய்வார்
சினத்திலே மிகுஞ்சிறியோர் காரியமோ
சொல்வதொன்று செய்வ தொன்று
மனத்திலே பகையாகி யுதட்டிலே
யுறவாகி மடிவர் தாமே. (அக)

உலகத்தோடு பொருந்தி நடக்கவேண்டு மெனல்

தேரோடு மணிவீதித் தண்டலையார்
வளங்காணுந் தேச மெல்லாம்
பேரோடும் விறல்படைத்து வீராதி
வீரனென்னும் புகழே பெற்றார்
நேரோடு முலகத்தோ டொன்றுபட்டு
நடப்பதுவே நீதி யாகும்
ஊரோட வுடனோட நாடோட
நடுவோட லுணர்வு தானே. (அஉ)

இன்னவற்றினும் இன்னவை சிறந்தனவா மென்பது

இழைபொருந்த முலைபாகர் தண்டலையார்
வளநாட்டி லெடுத்த ராகம்
தழுதழுத்துப் பாடுவதின் மௌனமா
யிருப்பதுவே தக்க தாகும்
குழைகுழைத்த கல்வியினுங் கேள்வியினுங்
கல்லாமை குணமே நாளும்
வழுவழுத்த வுறவதனின் வயிரம்பற்
றியபகையே வண்மை யாமே. (அ௩)

### சிவனடியாரில் பெரியோர் சிறியோரென்ற வித்தியாசமில்லை யெனல்

அருப்பயிலுந் தண்டலைவாழ் சிவனடியா
ரேககுலத் தோரானு லென்ன
உருப்பயிலுந் திருநீறுஞ் சாதனமுங்
கண்டவுட னுகந்து போற்றி
இருப்பதுவே முறைமையல்லா லேழையென்றுஞ்
சிறியரென்று மிகழ்ந்து கூறின்
நெருப்பினையே சிறிதென்று முன்றானை
தனின்முடிய நினைந்த வாறே. (அச)

### பெண்ணாசை ஆகாதெனல்

உரங்காணும் பெண்ணாசை கொடிதாகும்
பெண்புத்தி யுதவா தாகும்
திரங்காணும் பெண்வார்த்தை தீதாகும்
பெண்சென்மம் சென்ம மாமோ
வரங்காணுந் தண்டலைநீ ணெறியாரே
பெண்ணிடத்தின் மயக்கத் தாலே
இரங்காத பேருமுண்டோ பெண்ணென்ற
வுடன்பேயு மிரங்குந் தானே. (அரு)

### பரத்தையர் சேர்க்கை கூடாதெனல்

மையிலே தோய்ந்தவிழி வஞ்சியரைச்
சேர்ந்தவர்க்கு மறுமை யில்லை
மெய்யிலே பிணியுமுண்டாங் கைப்பொருளுங்
கேடாகி விழல ராவார்
செய்யிலே வளர்ந்தழைத்த தண்டலையார்
வளநாட்டிற் றெளிந்த தன்றோ
கையிலே புண்ணிருக்கக் கண்ணாடி
பார்ப்பதென்ன கருமந் தானே. (அசு)

கெட்டவிடத்தில் சேர்ந்து நல்லது செய்தாலும் கெட்டதாகக் கருதப்படு மென்பது

காலமறி தண்டலையார் வளநாட்டிற்
கொலைகளவு கள்ளை காமம்
சாலவருங் குருநிந்தை செய்பவர்பான்
மேவியறந் தனைச்செய் தற்கும்
சீலமுடை யோர்நினையார் பனையடியி
லேயிருந்து தெளிந்த வாவின்
பாலினையே குடித்தாலுங் கள்ளென்பார்
தள்ளென்பார் பள்ளென் பாரே. (௬௭)

சூது கூடாதென்பது

கைக்கெட்டா தொருபொருளுங் கண்டவர்க்கு
நகையாகுங் கனமே யில்லை
இக்கட்டாம் வருவதெல்லாம் லாபமுண்டோ
கவறுகையி லெடுக்க லாமோ
திக்கெட்டே றியகீர்த்தித் தண்டலையார்
வளநாட்டிற் சீசீ யென்னச்
சொக்கட்டா னெடுத்தவர்க்குச் சொக்கட்டான்
சூதுபொல்லாச் சூது தானே. (௬௮)

புற்றடிமண் குருந்தடிமண் முதலியவற்றின் பிரயோசனம்

தனமேவும் புற்றடிமண் குருந்தடிமண்
பிரமகுண்டந் தன்னி லேய்மண்
மனமேவு மணியுடனே மந்திரமுந்
தந்திரமு மருந்து மாகி
இனமேவுந் தண்டலையார் தொண்டருக்கு
வந்தபிணி யெல்லாந் தீர்க்கும்
அனுபோகந் தொலைந்தவுடன் சித்தியாம்
வேறுமுள வவிழ்தந் தானே. (௬௯)

## மானத்தின் உயர்வு

கானமருங் கவரியொரு மயிர்படினு
　　மிறக்குமது கழுதைக் குண்டோ
மானமுடன் வாழ்பவனை மாபுருஷன்
　　சுயோதனனை மறந்தா ருண்டோ
ஆனகஞ்சே ரொலிமுழங்குந் தண்டலையா
　　ரேசொன்னே னரைக்கா சுக்குப்
போனவபி மானமினி யாயிரம்பொன்
　　கொடுத்தாலும் பொருந்தி டாதே. (௧0)

## துரைகளை யடுத்திருப்பார்க்குப் பலனுண்டா மெனல்

நிலைசேரு மதிகவித ரணசமுக
　　துரைகளுட னேச மாகிப்
பலநாளு மேயவரை யடுத்தவர்க்குப்
　　பலனுண்டாம் பயமு மில்லை
கலைசேருந் திங்களணி தண்டலையா
　　ரேசொன்னேன் கண்ணிற் காண
மலைமீதி லிருப்பவரை வந்துபன்றி
　　பாய்வதெந்த வண்ணந் தானே. (௧௧)

## பெரியோ ரியல்பும், சிறியோ ரியல்பும்

பொறுமையுட னறிவுடையா ரிருந்தவிடம்
　　விளக்கேற்றிப் புகுத வேண்டும்
செறுவுமுட னகந்தையுள்ளா ரிறுமாந்து
　　நடந்துதலை கீழாய் வீழ்வார்
வறுமையினு மறுமையினுங் காணலர்ந்
　　தண்டலையார் வாழு நாட்டில்
நிறைகுடமோ தளும்பாது குறைகுடமே
　　கூத்தாடி நிற்ப தாமே. (௧௨)

### நல்லோர் செல்வம் பலர்க்கும் பயன்படு மென்பது

ஞாலமுறு நல்லவர்க்குச் செல்வம்வந்தா
 லெல்லவர்க்கு நாவ லோர்க்கும்
காலமறிந் தருமையுடன் பெருமையறிந்
 துதவிசெய்து கனமே செய்வார்
மாலறியாத் தண்டலைநீ ணெறியாரே
 யவரிடத்தே வருவார் யாரும்
ஆலமரம் பழுத்தவுடன் பறவையின்பாற்
 சீட்டெவரே யனுப்பு வாரே. (கூங)

### நாணமற்றார் தன்மை

சேணிலகு மதிச்சடையார் தண்டலையார்
 வளநாட்டிற் சிறந்த பூணிற்
காணவரு நாணுடையார் கனமுடையா
 ரல்லாதார் கரும மெல்லாம்
ஆணவலம் பெண்ணவல மாடியகூத்
 தவலமென வலைந்து கேடாம்
நாணமில்லாக் கூத்தியர்க்கு நாலுதிக்கும்
 வாயிலென்னு நடத்தை யாமே. (கூச)

### கெட்ட மனைவி இயல்பு

அடுத்தமனை தொறும்புகுவாள் கணவனுறு
 முனமுண்பா ளடக்க மில்லாள்
கடுத்தமொழி பேசிடுவாள் சிறுதனந்தே
 டுவளிவளைக் கலந்து வாழ்தல்
எடுத்தவிடைக் கொடியாரே தண்டலையா
 ரேயெவர்க்கு மின்ப மாமோ
குடித்தனமே கெட்டேவண்டிப் பிடாரிதனைப்
 பெண்டுவைத்துக் கொண்ட தாமே. (கூரு)

### செல்வருக்கு வலிமையுண் டென்பது

களித்துவருஞ் செல்வருக்கு வலிமையுண்டு
மிடியருக்குக் கனந்தா னுண்டோ
வளைத்தமலை யெனுஞ்சிலையார் தண்டலைசூழ்
தருமுலக வழக்கம் பாரீர்
ஒளித்திடுவர் தம்மனையிற் பெண்டீரைக்
கண்டவரு மொன்றும் பேசார்
இளைத்தவன்பெண் டீரென்று மெல்லார்க்கு
மச்சினியா யியம்பு வாரே. (கசு)

### பிறர் வருத்த மறியாதவர் இன்னவ ரென்பது

நொந்தவரும் பசித்தவரும் விருந்தினரும்
விரகினரு நோயுள் ளோரும்
தந்தமது வருத்தமல்லாற் பிறருடைய
வருத்தமது சற்று மெண்ணார்
இந்நூல்வுஞ் சடையாரே தண்டலையா
ரேசொன்னே னின்ற தாயின்
அந்தமுலைக் குத்துவலி சவலைமக
வோசிறிது மறிந்தி டாதே. (கஎ)

### இரவலர்க்குப் போசன சுகமில்லை யென்பது

ஆழியெல்லாம் பாலாகி யவனியெல்லா
மன்னமய மானு லென்ன
சூழவரு மிரவலர்க்குப் பசிதீர
வுண்டிருக்குஞ் சுகந்தா னுண்டோ
ஏழுலகும் பணியவருந் தண்டலையா
ரேசொன்னே னெந்த நாளும்
நாழிநெல்லுக் கொருபுடவை விற்றாலு
நிருவாண நாய்க்குத் தானே. (கஅ)

அற்பருக்கு அறிவிராதென்பது

கோச்சையிலே பாலுமுண்டோ கூத்தியர்க
டம்மிடத்திற் குணந்தா னுண்டோ
துச்சரிடத் தறிவுண்டோ துச்சரெங்கே
போனாலுந் துரையா வாரோ
நச்சரவத் தொடையாரே தண்டலையா
ரேயிந்த நாட்டல் லாமல்
அச்சியிலே போனாலு மகப்பையரைக்
காசதன்மே லார்கொள் வாரே. (கூகூ

கயவர் குணம் அகற்றலாகாது என்பது

நித்தமெழு நாறுநன்றி செய்தாலு
மொருதீது நேர வந்தால்
அத்தனையுந் தீதென்பார் பழிகருமக்
கயவர்குண மகற்ற லாமோ
வித்தகஞ்சேர் தண்டலையார் வளநாட்டிற்
சாம்பலிட்டு விளக்கி னாலுட்
எத்தனைசெய் தாலுமென்ன பித்தளைக்குத்
தன்னூற்ற மியற்கை யாமே. (க00)

பழமொழி விளக்கமென்னும் தண்டலையார் சதகம்
முற்றிற்று.

## சில பிரதிகளிலே அதிகமாகக் காணப்படும் பாடல்கள்

---

### வம்பருக்கு அதிகார மிருப்பதால் பயனில்லை யெனல்

வம்பரெல்லா மாதிக்க மிகுந்திருந்தா
லென்னவது மாறி போய்ந்த
பம்பரமாய் மூலையினிற் கிடந்திட்டா
லென்னவதிற் பலனுண் டாமோ
கப்புலவுந் தண்டலையார் வளநாட்டில்
வருந்துபல கழுதை தாமும்
அப்புவியிற் கிடந்தென்ன பாதாளந்
தனிற்கிடந்தென் னாகுந் தானே. (௧)

### கடுந்தேட்டுக் கண்ணைக் கெடுக்கு மென்பது

தண்டலையா ரடிபணிந்து தவந்தான
முபகாரங் கருமஞ் செய்து
கொண்டபொருள் விலைவாசி காணிதே
டிக்கோடி கொடுப்ப தல்லால்
வண்டருமா யொன்றுபத்து விலைகூறி
யநியாய வட்டி வாங்கிக்
கண்டவர்தங் கடுந்தேட்டுக் கண்ணைபறக்
கெடுக்குமிது கருமந் தானே. (௨)

நல்ல தொழிலுக் கேவியபோது கெட்ட தொழிலைச் செய்வோ ரியல்பு

இதுகரும மிதனாலே யிதைமுடிப்பா
 யெனத்தொழிலை யெண்ணிச் செய்தால்
அதுகருமம் பாராமற் றிருடியுமள்
 ளியும்புரட்டா யலைவ தெல்லாம்
மதியணியுந் தனடலையார் வளநாட்டி
 னீராடு மாதர் தங்கள்
முதுகினைத் தேய்யெனச்சொன்னால் முலைமீது
 கையையிட்ட முறைமை தானே. (௩)

சிறியார்க்கு எதனாலு மகிமை யுண்டாகா தெனல்

பார்க்குளறி விருந்தாலும் படித்தாலுங்
 கேட்டாலும் பணிந்து வேத
மார்க்கமுட னடந்தாலுஞ் சிறியவர்க்குப்
 பெரியவர்த மகிமை யுண்டோ
ஆர்க்குமருங் கதியுதவுங் கண்டலையா
 ரேசொன்னே னொகா யத்தில்
ஊர்க்குருவி தானுயரப் பறந்தாலும்
 பருந்தாகா துண்மை தானே. (௪)

எல்லாம் தெய்வச்செய லென்பது

வல்லமையான் முடிவதுண்டோ தலைகீழாய்
 நின்றாலும் வருவ துண்டோ
அல்லதுதா னவன்செயலே யல்லாம
 றன்செயலா லாவ துண்டோ
புல்லறிவான் மயங்காம றண்டலைபா
 ரடிபணிந்து புத்தி யுண்டாய்
இல்லதுவா ராதுநமக் குள்ளதுபோ
 காதெனவே யிருக்க லாமே. (௫)

காரியமறியார் செய்கையின் இழிவு

பேருரைகண் டறியாது தலைச்சுமைமே
லேகள்சுமந்து பிதற்று வோனும்
போரினடந் தறியாது பதினெட்டா
யுதஞ்சுமந்த புல்லி யோனும்
ஆரணிதண் டலைநாத ரகமகிழாப்
பொருள்சுமந்த வறிவி லோனும்
காரியமொன் றறியாக்குங் குமஞ்சுமந்த
கழுதைக்கொப் பாவர் தாமே. (௬)

பண்புடையா ரியல்பும், பண்பில்லா ரியல்பும்

கற்பூர வல்லியொரு பாகர்செழுந்
தண்டலையார் கடலேழ் சூழ்ந்த
நற்பூமி தனிற்பிறந்தோ ரெல்லோரு
மக்களென நாட்ட லாமோ
அற்பூரும் பண்புடையார் நற்குணமும்
பண்பிலா ரழுக்குங் காணிற்
பொற்பூவில் வாசனையும் புன்முருக்கம்
பூவுமெனப் புகல லாமே. (௭)

தருமப் பயன்

சலியாமற் றண்டலையிற் றூயகனை
யருள்கொண்டு தருமஞ் செய்யப்
பொலிவாகிக் கொழுமீதில் வந்தபொரு
ளீந்தவைதாம் போக மீந்தால்
மலிவாகிச் செல்வமுண்டாம் வயன்முழுதும்
விளைந்திடுநன் மாரி யாகும்
கலியாணப் பஞ்சமில்லை களப்பஞ்ச
மில்லையொரு காலுந் தானே. (அ)

இரக்கப் போனாலும் சிறக்கப் போகவேண்டுமெனல்

இரக்கத்தா னுலகாளுந் தண்டலையா
　　ரேசிவனே யெந்த நாளும்
இரக்கத்தான் புறப்பட்டா ரென்றனையு
　　மிரக்கவைத்தீ ரிதனா லென்ன
இரக்கத்தா னதிபாவ மிரப்பதுதீ
　　தென்றாலு மின்மை யாலே
இரக்கப்போ னாலுமவர் சிறக்கப்போ
　　வதுகருமமென்ன லாமே. ௬

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

---

Fourth Edition] [1000 Copies

ஸ்ரீ

ஸ்ரீராமஜெயம்.

வடவேங்கட

# நாராயண சதகம்

## மூலமும் உரையும்.



---

### பாயிரம்.

நேரிசை வெண்பா.

நஞ்சு வினைக்கா மமுத நமதுயிர்க்காம்
செஞ்சொல்வி னோர்சதகஞ் செப்பியது—விஞ்சுபுகழ்
நாரா யணதாசர் நன்றாக ஞாலத்தில்
பாரா யணஞ்செய் பவர்க்கு.

(இதன் பொருள்.) இந்தப் பூமியினிடத்து நன்றாகப் பாரா யணஞ் செய்பவர்க்கு உபயோகமாகும்பொருட்டு மிகுந்த புகழை யுடைய நாராயணதாசரென்பவர் செஞ்சொற்களினாலே திருவாய் மலர்ந்தருளியதாகிய ஒப்பற்ற நாராயணசதகமென்னும் பாமாலை யானது, நம்முடைய ஊழ்வினையை யழிக்கத்தக்க நஞ்சாகும்; நமதுயிர்க்கோ காக்கத்தக்க அமுதமாகும் என்றவாறு.

(விசேடவுரை.) நஞ்சு உண்டாரை அது கொல்லுதல் திண் ணமாதல்போல இந் நாராயண சதகமும் பாராயணஞ் செய்பவ ரது ஊழ்வினையை யழிக்கத் தக்கதென்பார், 'நஞ்சு வினைக்காம்' என்றார். அமுது உண்டாரது மரணத்தை யொழித்து விண் ணுலக போகத்தைத் தருதல்போல இந்நூலும் பாராயணஞ் செய்

பச்சிலையி லாவெறுங் கையினி லெடுத்தபூ
பாண்டத் தெடுத்திட்டபூ
பால்போ னிறத்ததுகி லதனிலு மெடுத்தபூ
பரிசுத்த மில்லாவிடத்
துச்சிதம தென்றே யெடுத்தபூ கீழ்விழுந்
துதிர்ந்தபூ மோந்திட்டபூ
வுண்மையாய்ப் பூசனைக் காகாது குற்றமென
வோதுஞ் சிவாகமங்கள்
அச்சுதன் கண்மலர் பறித்திட வுவந்தவா
வருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (44)

பூசைக்காம் புஷ்பவகை கூறியது

வில்வமலர் கொன்றைமாந் தளிர்புன்னை மல்லிகை
விரிந்தசத குப்பைதண்ணீர்
மிட்டான் பருத்திபொன் மத்தைவெண் தாமரை
வெண்பட்டி வெள்வழுதுணை
செல்வநிறை தாமரை நறும்பச்சை வெண்காசை
தேமுறழ் மருக்கொழுந்து
செய்யமந் தாரைபன் னீர்முல்லை மாதுளஞ்
செழுமலர்க் கொன்றையாத்தி
புல்லறு கழிஞ்சில்பொன் னுவாரை செவ்வந்தி
பூத்திகழ் குதம்பைவெட்சி
பூளைமலர் நாரத்தைசெவ் வரவிந்த ஞாழலிவை
பூசனைக் காகுமலராம்
அல்லிமலர் கொண்டுசிவ பூசைபுரி நேசனு
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (45)

இதுவுமது

தேவிசெங் கழுநீர் பசுந்தும்பை கோங்குசிறு
செண்பகம் வெண்பட்டிகை
சிறுநாக மல்லிகை வலம்புரி யடுக்குநந்
தியாவர்த்த நீலோற்பலம்
நாவல்பூம் பாதிரி புரோசைபொன் மத்தையெழி
ழுயுருவி குமரிவேங்கை
நாணல்வெண் காக்கணங் கோட்டங் கடம்பலர்
நறுந்தாளி வெள்ளெருக்குப்
பூவுறு கருந்துழாய் வன்னிவெண் கருமையாம்
போதுமால் காந்திபிச்சிப்
பூவினொடு வேரிலா மிச்சமிவை சிவபூசை
புரியமல ரென்பர்கண்டாய்
ஆவலன் போடுதமிழ் நாவலர்க் குதவுமுகி
லருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (46)

இதுவுமது

கரியசெம் பைப்பூ பசுங்குசை செழுசேவ
கன்போது செம்பாதிரி
கள்ளொழுகு வெள்ளலரி வெள்ளைத் திலோத்தங்
கமழ்ந்திடுஞ் சிவகரந்தை
விரிதரும் வெட்பாலை மாமணிப் பட்டிகை
மிகுங்கொடிப் புலித்தொடக்கி
மென்குராக் குன்றுத்தி சண்பகம் பூகம்
விளாகிளுநவை வெள்ளைநொச்சின்
மருவுகரு வெண்ணெய்தல் கொட்டைக் கரந்தைகிளை
மண்டுகண் டங்கத்திரி

மாதவனை செருந்தியை வண்ணமிரு வாட்சியிவை
மாபூசை பண்ணுமலராம்
அரியகண் ணப்பர்கண் மலர்கொண்ட விமலனை
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே.

இதுவுமது

நிலமருவு தமரத்தை வெண்கோங்க சேர்குதண்
ணீராம்ப லாண்குறிஞ்சி
நிலவுவெள் ளைத்துளவு மாவிலிங் கந்தளிர்
நிறைந்திடு பெறுங்காந்தை
குலவிய கருங்காலி செவ்வேங்கை வெண்ணிறக்
கொக்கிறகு வெள்ளடுக்குக்
கூடுமந் தாரங் கதிர்ப்பச்சை யார்ந்தகுங்
குமவலரி கருமைவெண்மை
நல்விளா செவ்வந்தி யோரிதழ்த் தாமரை
நவின்றநாற் றெட்டுவகையின்
நன்மலர் சிவார்ச்சனைக் காமென்று புட்பவிதி
நவிலாக மத்தின்முறையே
அலர்கொண்டு நாடொறு மனோன்மணிப் பூசைபுரி
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே.

சிவலிங்க வகைப் பலன் கூறியது

ஆற்றுமணலாலே யிலிங்கமே பாணித்
தருச்சனை புரிந்தபேருக்
காயுளுண் டாம்பசுஞ் சாணலிங் கப்பூசை
யாற்றுவோர்க் கர்த்தமுண்டா

நீற்றிலிங் கார்ச்சனம் முத்தியுண் டாகித்த
நியதியா யாற்றோமண்
ணையலிங் கஞ்செய்து பூசித்த பேர்க்கின்ப
நிதிமைந்தர் பேறுமுண்டா
மாற்றருஞ் சந்தனச் சாந்தா லிலிங்கம்
வகுத்துவழி பாடுசெய்யும்
மானிடர் தமக்குக் குபேரபாக் கியமவனி
மணிமாட மனைகளுண்டாம்
ஆற்றுமுடை யவர்பூசை யரசாக்ஷி செல்வமா
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (49)

## அர்ச்சனைமுதலிய தரும மொன்றுக்கொன்று விசேஷங் கூறியது

ஓராயி ரம்பூவி னாலருச் சித்தனிக
ரொருவில்வ மர்ச்சித்தலா
மோராயி ரங்கிணறு வெட்டிவைத் ததுநிகரு
மொருதடா கப்ரதிஷ்டை
சீராயி ரம்மனைகள் கட்டிவைத் திடுபலன்
சேருமொரு மடமமைத்தல்
செப்பருங் கிரகத்த ராயிரம் பேர்க்கு நிகர்
தீதிலொரு சந்நியாசியாம்
பேராயி ரஞ்சொல்லு மந்திர நிகர்க்குமொரு
பெருமுத்தி பஞ்சாக்கரம்
பெரிதுமெண் ணன்கற நிகர்க்குமொரு ஞானியைப்
பிட்சைசெய் வித்தலாகும்
ஆரம சிங்கபுரி வாழ்தருந் தருமதுரை
யருள்பெறு வசந்தராயர்

அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (50)

பலன்களைக் குறித்துப் பூசைசெய்ய வாரங்கட்குப்
புஷ்பவகை கூறியது

ஆதிவா ரத்திலே வில்வமர்ச் சிக்கவே
யஷ்டமா சித்தியுண்டாம்
அமலனைச் சோமவா ரந்துளப மர்ச்சிக்கி
லளவிலாச் செல்வமுண்டாம்
நீதிசெவ் வாயினில் விளாவருச் சிக்கினன்
னேயமுள மைந்தருண்டா
நிகழ்புந்தி வாரமா தளையருச் சிக்கினன்
னெறியுமெய்ஞ் ஞானமுண்டாம்
வேதியன் வாரமதில் வங்கமலர் கல்வியாம்
வெள்ளிநா வற்கொழுந்து
மேதினிக் காசனுஞ் சனிவார மால்காந்தி
மெய்யிலுய் வாராதுகாண்
ஆதியினில் வல்லாள ராயற்கு நேயனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (51)

ஆலயத்தீப மொன்றுக்கொன்று விசேடங் கூறியது

ஓதரிய தேவால யங்களுக் குள்ளே
யுவந்துநெய் காயெண்ணெயா
லொருகோடி தீபமிட் டதையொக்கு நல்லெண்ணெ
யொருவிளக் கேற்றிவைத்தா
றீதறுந் தெளிவான நல்லெண்ணெ யொருகோடி
தீபங்க ளிட்டதொக்குஞ்

சேருமிரு கொம்புள்ள வெண்பசுவி னெய்யினாற்
றீபமொன் றேற்றிவைத்தா
னீதிபுனை பசுவினெய் யாயிரம் விளக்கொக்கு
நிரைமூலைக் காயினுப்பை
நெய்விளக் கொன்றிடலிவ் வாயிரஞ் சுடரொக்கு
நிறைகருப் பூரதீபம்
ஆதியிற் பரவைமனை தூதுசெலு மண்ணாமலை
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (52)

உட்சமயம் ஆறின் பெயருந் தேவதையுங் கூறியது

சந்தகண பதிபூசை பண்ணுவது பாசுபத
சமயமாக் கதிர்வேலவன்
றன்பூசை யண்ணன்மா விரதசம யஞ்சிவன்
றன்பூசை சைவசமயங்
கந்தரண வீரபத் திரபூசை பண்ணுவது
காளாமு கச்சமயமாங்
கருதுவை ரவதேவ ரைப்பூசை புரியுமது
காணும்வை ரவசமயமாம்
பந்தன பயோதர பராசத்தி யைப்பூசை
பண்ணுவது வாமசமயம்
பகருமிச் சமயங்க ளாறுமுட் சமயமாய்ப்
பன்னுஞ் சிவாகமங்கள்
அந்தரற் கரிதான மெய்ஞ்ஞான பூசைபுரி
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (53)

### விபூதி வாங்கித் தரிக்கும் விதி கூறியது

ஒருகரந் தனைநீட்டி மூன்றுவிர லால்வாங்கி
யொளிவிரலி னாற்பூமிமே
லாதிரும் படிக்குநீ றிடுவோ ரகோரநர
கொருகோடி கற்பமாழ்வார்
இருகரங் கொடுதொழுது வலதுளங் கையிலேற்
றிறைவனெதிர் குருவினெதிரே
யெரியினெதிர் வழிநடுவி லாசுச மேவுழி
யிடாமலெல் லாவயினும்
பெருநிலந் தன்னிலே வீழாம லண்ணாந்து
பேசுபஞ் சாக்கரத்தைப்
பேரன்பி னானுன்னி வெண்ணிற விபூதியைப்
பெட்புடன் பூசுவோர்கள்
அருணிதிய முயர்கதியு மாயுளும் பெருகுவா
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணலி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (54)

### உருத்திராக்கந் தரிக்கும் விதி கூறியது

உச்சியிடை யோர்மணி தலைக்கிரு காதினு
முயர்ந்தமா மணியாறிரண்
டுத்தமாங் கச்சிரத் தெண்ணைந்து நீள்கழுத்
தூடுமுப் பத்திரண்டாஞ்
செச்சையணி மார்புநூற் றெட்டிரு முழங்கையிற்
செப்புமிரு பத்தாறதாஞ்
சேர்ந்திரு மணிக்கட்டி லிருபத்தி ரண்டுமணி
தேர்ந்துருத் ராக்கமணியே
நிச்சயப் பயபத்தி நியமநெறி யுள்ளன்பு
நேயநிறை யார்வமுடனே

நித்தலும் பூசைபுரி காலத்தி லாயினு
நீங்கா தணிந்தபேர்கள்
அச்சிவ சொரூபரவ ராமென்னு மாமறைக
ளருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (55)

சேபமாலைக்கு விதியும் பலனுங் கூறியது

செய்யவிரு பத்தைந்து ருத்திர மணிக்கோவை
சேர்த்துசெப மன்பொடுசெயிற்
செப்பரிய முத்திதரு மூவொன்ப தக்கமணி
செல்வமேன் மேலாயிடும்
பையவென் ணுன்குமணி கல்விநல மூந்தரும்
பதினைந்து மாபிசாரப்
பாலதாம் பதின்மூன்று மேவுமுச் சாடன
பலந்தருஞ் செபமாலிகை
கையினிற் சிறுவிரலின் மேற்றள்ளன் ஞானமது
காட்டும் பவித்திரவிரல்
கனகமுறு நடுவிரற் பகைதருந் தற்சனி
கடியநோய் விளிவுமுண்டாம்
ஐயமிலை யங்குட்ட மருளே தழைத்திடு
மருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (56)

சேபஞ் செய்யுந் திக்கின் பலன் கூறியது

நல்லகீழ் முகமா யிருந்துசெப மேசெய்யி
ஞெடொறும் வசியமுண்டா
நாடுமக் கினிமூலை நோயில்லை தென்றிசையை
நாடிச் செபம்புரியினே

வெல்லருந் திமைதரு நிருதிநல் குபேவே
விளைந்திடுவ குடதிசையதோ
வேண்டி முன்றேடிய பொருட்செலவு வாயுதிசை
வீறுமுச் சாடனமிகுஞ்
சொல்லரும் வடக்குமுக மாய்ச்செபஞ் செய்திடிற்
சொன்னமுங் கல்விநலமுந்
தோன்றுமீ சானதிசை முத்திவீ டாமென்று
சொல்லுஞ் சிவாகமங்கள்
அல்லலற வெத்திசையு மாகுமடி கட்குநல்
லருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (57)

பிரதோஷ தரிசனவிதி கூறியது

நண்ணுதிரை யோதசித் திதியதே பிரதோட
நாளென்று பெயராகுமந்
நாளிலிரு பத்தாறு நாழிகை யதற்குமே
ஞலுநா ழிகையுநீல
வண்ணராத் திரியின்முன் றரைநாழி கைத்தொகை
வரைக்கும்பிர தோடகாலம்
மறவாம லேசிவா லயநந்தி யிருகொம்பு
மத்தியினி னூட்டம்வைத்து
வெண்ணாந்தி கேசுரன் விஷாணத்தை நீவிவான்
மேவிழியி னின்றிறைஞ்சி
விமலசிவ லிங்கத்தை யரகர வெனச்சொல்லி
விழியினாற் றெரிசிப்பவர்
அண்ணலரு ளாற்செல்வ மாயுளும் பெறுவர்நல்
லருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (58)

அனுசித பதார்த்தங்களைக் கூறியது

பனையினது வெல்லங் கிழங்குநுங் கொடுபனம்
பழமிவை யருந்தலாகா
படர்தரு செடிப்பசலை செம்பசலை சிறுபசலை
பரியகுண் டைச்சுரைக்காய்
சினையுலவு மரவள்ளி யீருள்ளி வெள்ளுள்ளி
செங்கீரை செம்முருங்கை
தென்னைவெல் லத்தினொடு மீச்சவெல் லங்காய்ச்
சிரக்குபான் முள்ளிபுண்ணாக்
கினியதேன் கையாற் பிசைந்ததயி ரோட்டைநெய்
யெருமைசெம் மறியசப்பா
லீன்றநாட் பத்திற் கறந்தபாற் சூதகத்
தில்லிற் கறந்திட்டபால்
அனுசித மிதாசார முடையோ ரருந்திடா
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்று திசை யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (59)

நாடோறுஞ் செய்கையால் வரும் ஐவகைப் பாவமும்
அதற்கு நிவிர்த்தியுங் கூறியது

தினந்தோறும் பலபண்ட மம்மியி லரைப்பதாற்
செறிவிற கடுப்பிலிட்டுச்
செந்தீ யெறிப்பதாற் றண்ணீர்க் குடத்தினுட்
சேர்ந்திட முகக்குமதனுன்
முனைந்துசோ தினிகொடு பெருக்கிநற் சாணிபட
முறையாய் மெழுக்கிடுவதான்
மூரியரி வாண்மணையி லேகறி குறைப்பதான்
மூனுமைம் பாவநீங்க
நினைந்துமறை யோதிட றருப்பணம் விடுத்திட
னெருப்பினிடை யோமஞ்செய

னியமமொடு பலியிடுத றன்பா லுவந்துவரு
　　நியதிபெறு மதிதியோர்கட்
கனம்பகிர்த லிவைதினஞ் செயறகவ தென்பர்கா
　　ணருள்பெறு வசந்தராயர்
அண்ணவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
　　வண்ணு மலைத்தேவனே. (60)

நாடோறுஞ் செயும் பஞ்சயாகங் கூறியது

பரிவொடுங் காலைக் கடன்கழித் தருமறை
　　பகர்ந்திடுதல் பிரமயாகம்
பலவமர ரிருடிபிது ராதிக டருப்பணம்
　　பண்ணுவது பிதுரியாகமாந்
தெரிதரும் விதியினுற் றீவளர்த் தோமவினை
　　செய்குவது தேவயாகஞ்
செப்புஞ் சிவாகமப் படியன்ன பலியிடுத
　　றோர்ந்திடும் பூதயாகம்
வருமரிய வதிதியர்க் குளமகிழ்ந் தன்னம்
　　வழங்கன்மா னிடயாகநோய்
மாற்றுமக மைந்துந் தினஞ்செயிற் பாவமது
　　வாரா தெனத்துணிந்தே
அரனருள் பெருஞ்சைவ மறையவர் புரிந்திடுவ
　　தருள்பெறு வசந்தராயர்
அண்ணவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
　　வண்ணு மலைத்தேவனே. (61)

போசனத்திற் குற்றங் கூறியது

பந்தியிடை யோதன மிருப்பக் கரண்டியாற்
　　பரிமாற வுண்ணலொன்றும்
பாவைய ரிடுங்கறியை மீண்டுகொடு வாவெனப்
　　பன்னியிட வுண்ணலொன்றுஞ்

சந்தியா காலத்து மத்தராத் திரியினுந்
தயிரடிசி லுண்ணாமேயுடனுஞ்
சாலவய லாருண்ட நற்கலந் தன்னிலே
தானுண்ண லதிகதோடம்
வெந்தெடுத் திடுமட் கலத்தினுந் தகரத்து
மிகவுடைந் திடுகலத்து
மேவுமுள் ளங்கையினு மிட்டுண்ண னின்றுண்ணன்
மேலான தோடமாகும்
அந்தமிகு மொன்வெள்ளி பாத்திரத் திலையுசித
மருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (62)

போசனகாலத்து அன்னபலியிடும் விதி கூறியது

போஜனஞ் செயுமிடந் திருமெழுக் கிட்டுப்
பொருந்திய கிழக்குமுகமாய்ப்
பொற்பா யிருந்திட்ட வடிசின்மே லுதகம்
புரோட்சித் துடன்வலப்பால்
வாசநறு நெய்யன்ன மைந்துபிடி பலிவைத்து
மந்திர நவின்றுநன்னீர்
வலமாக வாபோ சனங்கொண்ட மிகுதிநீர்
மறுவுசிறு விரலின்வழிவிட்
டேசிலப் பலிகொடிக் கிட்டசன னமங்கா
லெழிற்பிரா ணுதிபுரிந்
தின்னடிசி லுண்டுத்த ராபோச னங்கொண்
டெழிற்சேட நீர்ப்பெருவிரல்
ஆசில்வழி விட்டெழுத லாசார சைவநெறி
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (63)

போசனஞ் செய்தபின் அநுட்டானவிதி கூறியது

போசனஞ் செய்தபின் பாசமனை முஞ்செய்து
பொற்புடன் வடகிழக்கும்
போருகா சனமேவி வில்வலன் வாதாவி
பொன்றிட வயிற்றைவருடித்
தேகசொடுஞ் சீரணஞ் செய்தகும் போதுமச்
சிவமுனியை யுன்னியோர்ந்து
திலமளவு திருநீ றருந்திப் புனைந்துளந்
தேர்ந்தங்கன் யாசமுடனே
வாசியு ளெழும்பிரா ணாயம மாற்றிநா
மௌனமாய் மூவேழுரு
மந்திர மகோரத்தை யுள்ளே செபித்துமேன்
மகிழ்வொடு மிருப்பர்நாளும்
ஆசையுறு கிருகத்த வாச்சிரம நெறியென்ப
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (64)

தாம்பூலந் தரிக்கும் விதி கூறியது

மெல்லிலைக் காம்பும் பழுப்போடு காம்பதன்
மேற்றொறும் புங்கசங்கன்
மிகமுறுக லழுகலும் வதங்கலிவ் வெட்டாகும்
வெற்றிலைக் குற்றநீக்கி
நல்லபாக் கெச்சின்முக் காலுமிழ்ந் தாராய்ந்து
நறியவெள் ளிலைகிழித்து
நண்ணுகற் சுண்ணங் கிராம்பேல தக்கோல
நன்மிளகு வான்மிளகுநேர்
சொல்லருஞ் சுக்குமணை பேவுசா திக்காய்
தொடர்ந்திடுஞ் சாதிபத்திரி

சுகவாச பூரமிவை தாம்பூல சகிதமாத்
துய்த்திடுவர் செல்வர்கண்டாய்
அல்லியலர் வாவிசூ ழணியண்ணு மலையனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (65)

தோடம் வரும் வகை கூறியது

ஊணருந் துங்காலை பேசனகை செய்தல்பிடி
யுண்டையா யுண்ணல்சிந்தல்
ஒருவிரலை நீக்கியுணன் மயிரென்பு பூச்சிபுழு
வுகிர்பட்ட சோறுண்டிடல்
காணுநக மயிரினைப் பல்லாற் கடித்தலொரு
காலினற் காறேய்த்துநீர்
கழுவிடுத லுண்கலத் தெச்சிலை யுமிழ்ந்திடுதல்
கையினு னகமுரித்தற்
பாணியாற் றலைசொறிதல் விரலினற் றலைகீறல்
பாழ்மனைவி லேயுறங்கல்
பட்டகஞ் சாக்கட் குடித்தல்பெரி யோரைப்
பழித்தனித் திரையெழுப்பல்
ஆணைதள் ளுதலிவை மகாதோட மென்பர்கா
ணருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (66)

ஆசமனஞ் செய்யுங் காலங் கூறியது

வாசமலர் கொய்யினும் வீதியிடை போய்வரினு
மலசலம் விட்டுவரினும்
மாதரொடு சம்போக மேவிடினு நீசர்நிழன்
மருவியுடன் மீதுபடினுந்

தூசரை யுடுக்கினும் பலகார முண்ணினுஞ்
சோறுண்ணினு நீருண்ணினுந்
தூயநற் கருமங்க டருமங்கள் புரியினுந்
தொகுசிராத் தங்கள்செயினுந்
தேசுதரு தானங்கள் செய்யினுங் கனிகாய்க
டின்னினுந் தூக்கியெழினுந்
தீயகொலை செய்குவோர் பாயுநிழ றோயினுந்
தீண்டொணா தவைதீண்டினும்
ஆசமன மக்கணஞ் செய்யல்விதி யென்பர்கா
ணருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (67)

மூதேவிவாசமும், தோட முள்ளவையுங் கூறியது

நாட்டரசு நீழலும் விளாமரத் தடிநிழலு
நன்மனை விளக்குநிழலு
நடமாடு மனிதர்நிழ லிரவினுடன் மேற்படியி
னலமிலாச் சேட்டைமருவும்
பூட்டுநூன் மறையவர்க டங்நிழன் மிதித்திடற்
புனிதமா யொருவனுண்ட
புனற்சேட பொருவனுண லாடைதோய்த் திட்டநீர்
பொருந்தவுட் கொள்ளலாகா
வீட்டிடை பெருக்கிய விளக்குமாற் றுப்புழுதி
மென்மயி ருகுத்தபுழுதி
வீறிடுங் கழுதைநாய்ப் புழுதிவெந் திடுசாம்பல்
வேகாக் கரிப்புழுதியும்
ஆட்டிடைப் புழுதிபட லாகாது மேலென்ப
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (68)

இவ்வகை யமையிற் சிறப்பெனக் கூறியது

விளையுநன் னிலமுமாய்த் தண்ணீரு மருகதாய்
 விரையெலா மனையிடமுமாய்
வெள்ளிமலை போலொருது கருமலை யெனக்கடா
 விடுகோனு மாயேருமாய்க்
களவிலா நெஞ்சுடைய படியாளு மாயுளுங்
 காலத்தி லேயுழவுமாய்க்
கனமான கிடையெருத் தழையுமாய் நாற்றுவிரை
 கானுமாய் மேனடவுமாய்
வளமான பாடுமாய்க் களைபறிவு மாய்வேலி
 வளைவுமாய் நற்காவலாள்
வைப்புமாய் நாடோறும் வந்துபார்க் குந்திறமு
 மாயிருந் தாற்பலிக்கும்
அளையுறுங் கொழுமுனைச் செல்வமே செல்வமா
 மருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
 வண்ணு மலைத்தேவனே. (69)

இந்நாள் நீக்கி யிந்நாளிற் கூடிற் சுபுத்திர ருதிப்பா ரெனல்

இங்குள சரீரமுண் டாகின்ற வயணமே
 காதசி யிலங்குபர்வ
மியலமா வாசைமா தப்பிறப் பாகா
 திருக்குநாட் களைநீக்கியே
மங்கையர்கள் பூத்துநீ ராடிய தினந்தொட்டு
 வருமா றிரண்டுநாளில்
வாலாய் மாய்க்கருக் குழிவாய் திறந்திடும்
 மணவாள னெடுகலந்தாற்
பொங்குசுக் கிலமுஞ் சுரோணிதத் தொடுசேர்ந்து
 பூரிக்கு மொண்சிப்பியிற்

பூத்தமுத் தைப்போலு மறுகுநுனி மேற்பனிப்
போலுந் திரண்டுருவமாம்
அங்கமல சன்வந்த மைப்பனே யிவ்வுருவ
மருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (70)

சரீர முண்டாகு முறைமை கூறியது

சுக்கிலஞ் சோணிதத் துட்சேர்ந்து சோணித
சொரூபமாய்த் தவர்வாசலைத்
தோன்று தடைத்திடும் வாயுவே வேலிபோற்
சூழ்ந்துகாக் குறும்விந்துவோ
டொக்கப் பிராணவாய் வொளியாம பானவாய்
வொன்றியே வெளியினிற்கு
முட்பாய்ந்து விந்துடன் பிராணவா யுவுகூடி
யுள்ளே கலந்துநிற்கும்
மிக்குதா னன்கரு வளர்க்குமக் கருவுக்குண்
மேவும் வியாதிமூன்று
விரவிக் கலக்குமைந் தாநாட் கருக்குமிழி
மேனிபோ லாய்வளருமே
அக்கமணி துர்க்கையுறை மிக்கபதி வாசனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (71)

சரீரம் வளரும் வகை கூறியது

கருத்தரித் திட்டபத் தாநா டிரண்டுருவு
கண்டுமுளை போன்முளைத்துக்
கருதுபதி னைந்தாந் தினத்திலே முட்டைபோற்
காணுமக் கருமிதந்தே

யுருத்தரு முதற்றிங்கள் கம்பமா மிருமதியி
னுற்றதலை முதுகுமுகமா
மோதுமூன் றுந்திங்கள் செங்கையும் பாதங்க
ளேறுவிரல்க ளையுமுண்டாந்
திருந்துநா லாந்திங்கண் மூக்குமுக வுருவமாஞ்
செய்யவைந் தாந்திங்களிற்
செவிநாவு கண்களாஞ் செப்புமா றுந்திங்கள்
சேர்ந்திடு நகங்களுண்டா
மரத்தமா ணிக்கம் பதித்தமுடி யரசர்புக
ழருள்பெறு வசந்தராயர்
அண்ணவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (72)

இதுவுமது

விஞ்சுமே ழாந்திங்கண் மயிர்நரம் பென்பும்
விளைந்திடுஞ் சடமோடுதான்
மேவிடுஞ் சலமலந் தங்குதா துக்களு
மிடைந்துமூச் சுண்டாகுமே
யெஞ்சிலெட் டாந்திங்க டாயுண்ட சாரங்க
ளியாவுமுனை யானகதிர்போ
லேய்ந்தருவி பாய்ந்தே கபாலத்தின் வழியாக
விழியவக் குழவிவளருந்
தொஞ்சவுரு வோவொன்ப தாந்திங்க ளறிவுமேற்
கொடுபிறப் பித்தோன்றனைக்
குறித்திரு காங்கூப்பி யருடா வெனத்தவங்
கொண்டே யிருந்துபுரியும்
அஞ்சலப் பையொரீஇ வெம்பிறவி நோக்குமே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (73)

பிறவித்துன்பத்தினியல்பு கூறியது

கொடியபத் தாந்திங்கள் சற்குரு பார்வையே
கொண்டிடுங் குழவிதன்னைச்
கோதறு மபானவளி கீழ்நோக்கு விக்குமக்
குழவிமிகு துன்புமுற்றுப்
படியிற் பிறந்தபின் பகாரிய மாயா
படப்போர்வை யான்மறைந்து
பண்டையி லிருந்தபே ரறிவழிந் திருவினைப்
பாசவலை யிற்படிந்து
அடியளவு நேரநீங் காக்கவலை நோயிலே
தோயுமிங் கிதனைநோக்கிற்
சுரைக்கொடி படர்ந்ததை நிகர்க்குமிச் சனனமாந்
தோதக மொழிப்பாறிவோர்
அடியணு மலையனே தொடியரா மணியனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு மூலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (74)

அட்டலட்சுமிகள் பெயர் கூறியது

மட்டிலாச் செல்வங்கண் மருவுதன லட்சுமி
வளர்ந்ததா னியலட்சுமி
மணிமாட மனையாதி செந்நெல்வய லூட்டங்கள்
வளமிகும் பூலட்சுமி
யிஷ்டபாக் கியகுணச் சந்தான லட்சுமி
யெழுத்தொடு நிறைந்தகேள்வி
யியல்பான புத்திவளர் வித்தியா லட்சுமி
யிசைந்தவீ ரியலட்சுமி
திட்டமா யெங்கணுஞ் சென்றபோ தினும்வெற்றி
சேர்தரும் விசையலட்சுமி

திமைவந் தானுங் கலங்கா திருக்கின்ற
திரதை ரியலட்சுமி
ட்டலட் சுமிவாச நேசதுரை ராசர்புக
ழருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வணணுமலைத்தேவனே. (75)

ஆடி யைந்தாந்தேதி வரும் வாரத்தின் பலன் கூறியது

ஆடிமா தம்பிறந் தைந்தாந் தினத்திலே
யரியபுத வாரம்வந்தா
லவ்வருட மொருபோக நாடெலா மிகவிளையு
மவனிமே லிட்டபயிர்கள்
பாடுள விழாழம்வரி லிருபோக மேவிளைவு
பாரெலாஞ் சுகசீவனம்
பன்னுசுக் கிரனெனில் கதிர்சாவி சனியனே
பயிரொன்றும் விளையாதுகாண்
நீடுஞா யிறுபயிர்கள் பாழ்திங்க ளொருபோக
நெல்விளையு மேசெல்வமாம்
நேர்ந்தவங் காரகன் பணிச்சோள மேவிளையு
நெறியீது குறியென்பர்காண்
ஆடல்புரி யண்ணலே மாடமா ளிகைசெல்வ
மருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (76)

பெண்கள் ருதுவாகும் நக்ஷத்திரபலன் கூறியது

மன்னுமச் சுவினியிற் புட்பவதி யாயிடின்
மகிழ்நனுக்கே தோடமாம்
வான்பரணி நாணல்ல மைந்தருண் டாங்கனக
மருவுகார்த் திகைமலடியா

முன்னுமோர கணிதீர்க்க மங்கிலிய முடையளா
முலவுமான் றலைதலைவனுக்
குயர்சுக மளிப்படிரு வாதிரை வெறுப்புமான
முடையளாம் புனர்பூசநாள்
பொன்னெழில் சுகந்தரும் பூசஞ் சிறப்புடையள்
பொலியுமா யிலியமைந்தர்
பூத்தொழியு மகமுரிய புருடன்மே லதிகாமி
பூரமைந் தர்களாணியாம்
அன்னநடை யார்நடன சாலைவளர் சிங்கபுரி
யருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (77)

இதுவுமது

உத்திரம் பதிவிரதை யத்தமென் மேற்செல்வ
முண்டா யிடுஞ்சித்திரை
யோங்கிய நலந்தரும் பாங்குறு சுவாதிசுக
முற்றிடுந் தனிவிசாகம்
மத்திமந் தலைவனுக் கல்லல்புன் நோய்கேட்டை
மறுபுருட னிச்சைமூலம்
வாழ்வுபால் பாக்கியம் பூராட மமைகெடு
மாமுத்தி ராடஞானப்
பத்தியுறு மோனநற் பொருளாா மவிட்டம்
பசும்பொனுள் சதையநிதிபோம்
பகரும் புரட்டைமல டுத்திரட் டாதிமிடி
படுமிரே வதிநடலையாம்
அத்தந் துகிர்ச்செறி மடந்தையர்கள் பூந்தபல
னருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (78)

ஆசுசமுருத விடங்களைக் கூறியது

தேவால யங்களிற் சந்நிதா னங்களிற்
 றிருவிழா விற்சிறந்த
 தேர்நடந் திடும்பொழுதி லருமறை பகர்ந்தவழி
 செய்யுந் தழற்சாலையிற்
பாவாணர் கல்விப்ர சங்கம் புராணம்
 படிக்கின்ற வித்வசபையிற்
 பார்வைக் கலங்கார சோபன முகூர்த்தங்கள்
 பண்ணும் விவாகசபையிற்
கோவான சிங்கா தனத்திருந் தரசுசெங்
 கோல்கொண்ட ராசர்சபையிற்
 கூறுமிவ் விடமெலா மாசுச மிலையென்று
 கூப்பிட் டுரைக்குமறைகள்
ஆவா கனத்தனே மாவார் வனத்தனே
 யருள்பெறு வசந்தராயர்
 அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
 வண்ணு மலைத்தேவனே. (79)

அசுவ இலக்கணங் கூறியது

நீலமர கதமுத்து மாணிக்க மம்பொன்
 னிறைந்தவெண் பனிசந்திரன்
 நெடியதா மரைமலர்க் காசைமலர், கருமுகி
 னெருப்புமணி வண்டுதீம்பாற்
கோலமுறு கின்றசெம் பஞ்சுக் குழம்புகுயில்
 கூறுமீ ரெட்டுநிறமாங்
 குதிரையுத் தமமிவையி லொருநிற முடைத்தாய்க்
 குறித்தமுக மார்புச் சிவாற்
காணுமிவ் வெட்டிடம் வெளுப்பா யிருக்கிலது
 கதியட்ட மங்கலமதாங்

கவினுறுமுக நாற்பாத மைந்தும் வெளுப்புறிற்
கனபஞ்ச கல்யாணியாம்
ஆலவா யிற்பரியி லக்கண முரைத்தவா
வருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (80)

இதுவுமது

கட்டுவாம் பரிநாபி தொட்டுமுன் புறமெலாங்
கதிர்போற் சிவந்துமதிபோற்
கவினுறும் பின்முழுது நலமா வெளுக்கிலக்
கற்கிபகல் விஜயமென்பார்
வட்டமதிபோலவே முற்புறம் வெளுப்பாய்
வயங்கியே பிற்புறமெலாம்
வடிவுசெங் கதிர்போற் சிவந்திடுங் கிள்ளையது
மருவுகதிர் விஜயமென்பார்
இட்டநூ றங்குல முயர்ந்தபரி யுத்தம
மெண்பத்து நாலங்குல
மிவுளியது மத்தியம தறுபத்தொ ரங்குல
மியம்புமத மக்கோடையாம்
அட்டமங் கலதுரக நித்தலு நடாத்துதுரை
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (81)

இதுவுமது

வாசியின் வயதுமுப் பத்திரண் டேவருட
மருவிடும் பத்தவத்தை
மாற்றிலொரு மூன்றுவற் சரமுமிரு மாதமு
மன்னுநாட் பன்னிரண்டாம்

பேசுபரி யெவ்வண்ண பேதக மிருக்கினும்
பெருவெள்ளை தான்கலந்தாற்
பெட்புமிகு மப்புரவி தலைவன் றனக்குப்
பெருஞ்செல்வ முங்கல்வியாந்
தேசுள கறுப்புப் பரிக்குவயி றேனுந்
திகழ்ந்தநெடு மார்பமேனுஞ்
செஞ்சிவப் பேறினும் வெள்ளைநிற மேவினுஞ்
செயவாரு ணத்துரகமாம்
ஆசுமது ரஞ்சித்ர வித்தார கவிஞர்புக
ழருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (82)

இதுவுமது

ஏறுபரி மார்க்கழுத் திடையிரட் டைச்சுழி
யிருக்கின்மிடி யின்னலுண்டாம்
இருகாலி லேயிரட் டைச்சுழி யிருக்கிலவ்
விவுளியா னிகளபந்தங்
கூறரும் கொடியவினை யாமிறுதி யுண்டாங்
குதக்குமீ குதடுதனினுங்
குலவுமுற் காலடியி னுங்கபோ லத்தினுங்
கோதறு முழந்தாளினும்
வீறுசுழி தாமொன்றின் மாவேறு தலைவனை
வெவ்வினை மிகுத்தொறுக்கு
மேவுமிவு ளிப்பந்தி யூடுறப் பண்டய
மெலிந்துநல் குரவெய்திடும்
ஆறுலவு செம்பவள வேணிமதி முடியனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (83)

இதுவுமது

தெரிதரு கழுத்தினிடை யொருசுழி யிருந்திடிற்
றெய்வமணி யென்றுபெயராம்
திருமகள் விலாசமுண் டாமுகந் தலைநாசி
திகழுமார் பிவைநாவிடம்
மருவிய விரண்டுசுழி யுண்டாயின் வெற்றிதரு
மாறிலாச் சரிமத்தகம்
மணியா யிருக்கில்வ் வாசிமே லேறுவோர்
வாழ்வுமென் மேலெய்துவார்
விரவுநெற் றியினடுவி லொருசுழி யிருக்கினது
வீறுநிதி மதியுமுண்டாம்
வெளிவ் விடங்களிற் சுழியிலா விவுளியின்
மேலேற னன்றன்றுகாண்
அரியயற் களவிடற் கரியபே ரழகனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (81

இதுவுமது

வேங்கைநரி சிங்கமுயன் மயின்மல்ல ரம்புமத
வேழங் குரங்குபோல
வேகமுள நடையதாச் சங்குவெண் கன்னலின்
விலாழிகால் வாய்நுரையுமாய்த்
தாங்குவிற் றெனிசங்கு மேகமத் தளமேறு
தண்டிரை மடங்கறெனியாய்ச்
சாற்றுகுற மகள்போற் கவிழ்ந்தமுக மாகநாத்
தழையுமாந் தளிரினிறமாத்
தேங்கமழ் மலர்ந்தகரு நெய்தல்போ லுக்கிரஞ்
சேர்ந்தவிழி யாய்ப்பறகடாஞ்

செப்பமா பொப்பமாய் வாலைந்து சாணுய்ச்
சிறக்குங் குளம்புயரமா
யாங்குதிரை லக்ஷண முரைத்தவிதி யென்பர்கா
ணருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (85)

இதுவுமது

பாயும் பெரும்பரி முகத்திடை வெளுத்திடிற்
பாராச ரைச்செயிக்கும்
பணிபூண் கழுத்துவால் முதுகிவை வெளுத்திடிற்
பாக்கியமெ லாங்கொடுக்கும்
ஏயுமிரு பிடர்வெள்ளை யாயிருந் தாற்புதல்வ
ரின்பமேன் மேலுமுண்டா
மெழின்மார்பில் வெள்ளையுறில் கவலைநோ யின்றியே
யெப்போது மனமகிழ்தருந்
தோயுமுக மிடதுபால் வெள்ளைநிற மேவிடிற்
றாயசந் தானமுண்டாந்
தோன்றிய வலப்புறம் வெண்ணிறஞ் செல்வமாந்
தூய்முகம் பிற்பாற்சுகம்
ஆயும்ப்ர பந்தகவி நேயம் பொருந்துதுரை
யருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
வண்ணு மலைத்தேவனே. (86)

இதுவுமது

மார்புங் கழுத்துமர வப்படம் போலதாய்
வாழைமட லொத்தசெவியாய்
வதனமுக் கோணமாய் நுதலுயர்ந் தகலமாய்
வைக்குமடி பந்தொத்ததாய்

ஏர்புனையு நரனுகா லுங்கடைந் தேயதை
யெடுத்துநாட் டியதுபோலா
யிருதொடை திரட்சியாய்ச் சுழல்கின்ற போதுதீ
யெழுகடைக் கோலென்னலாய்
போர்புரி முகத்திலே வெட்டினு மெதிர்ப்பதாய்ப்
புரவியோன் மனமறிவதாய்
பொங்ககழி கோட்டையுந் தங்கிய துருக்கமும்
புலியெனப் பாய்கின்றதாய்
ஆர்பரி யிருக்கின்ற துத்தமப் புரவிகா
ணருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (87)

இதுவுமது

கொய்யுளைப் புரவியது நிற்கின்மலை யென்னவுங்
கூத்தினட மகளென்னவுங்
குலவிடும் வாசனையின் மான்மதம் பாளிதங்
குங்கும மகிழ்கொப்பதாய்
வெய்யகட் பொறியரா வட்டநெடு வீதிநடை
விடுசுழற் பந்தென்னவும்
மேலேறு சேவகன் காற்குள் ளடங்கியே
வேகத்தில் வளியென்னவுஞ்
செய்யுநற் சாரிகை பதினெட்டு முள்ளதாய்த்
திருத்தமிரு நான்குவயது
சென்றபரி மேலேறல் விதியென்று மறையாஞ்
செழும்பரியி லேறிவந்தெம்
ஐயநீ பாண்டியற் கறிவித்த தென்பர்கா
ளருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (88)

இவர் முன்னி லின்னது பெறவேண்டு மெனல்

நாமமா கியபிறவி சாராத மெய்ஞ்ஞான
சாதனம் பெறவேண்டினோர்
சரியைகிரி யாயோக மூன்றுங் கடந்தமெய்ச்
சற்குருவை யடையவேண்டும்
நாமமார் தருசிவா லயலிங்க தரிசன
நாடியருள் பெறவேண்டினோர்
நக்கன் வலக்கைதலை மேற்கொண்ட வதிகார
நந்தியைமுன் காணவேண்டும்
பூமியா ளரசரைக் கண்டுகா ரியசெயம்
பூர்த்தியாப் பெறவேண்டினோர்
புரவலர் கருத்துக் கிசைந்தமந் திரிகள்பாற்
போய்முன்பு காணவேண்டும்
ஆமிக வளங்கள்சிங் காபுரி விளங்கவரு
மருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (89)

கலவியிற் கோக்கோகலீலை கூறியது

நாடுமுட லிழையுமா லிங்கன மதோரைந்து
நண்ணுமித முதரபான
நல்லசுவை பதினொன்று மயிர்தநிலை பதினைந்து
நகநகக் குறிகளேழுங்
கூறுதந் தக்குறிக ளெட்டுமுயர் பரவைபோற்
குரலோசை யெட்டுமிருகைக்
குவிதாட னங்களிரு நான்குமுறை கரணங்கள்
கூறுநாற் பத்தெட்டுமே
மூடுகல விப்போக மெய்ம்முயக் கீரெட்டு
முறமூநாற் றிருபதுடனே

யோராறு மொழிகின்ற கொக்கோக விதமறிந்
தூடலோ டினிதாகவே
யாடவரு மங்கையரு மனுபவித் திடவின்ப
மருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (90)

பெரும்பாலு நோய்கள் வாராவகை கூறியது

எட்டுநா ளைக்கிரு முழுக்காடொவ் வோர்பட்ச
மிருகண் கலிக்கமிடுவோர்
எத்தாக மதிதொறும் பித்தநீ ரெல்லா
மெடுத்திட மருந்துகொள்வோர்
திட்டமா யெண்ணான்கு நாளினுக் கொருகாற்
றிருந்திழை புணர்ச்சிசெய்வோர்
செப்புமொரு மூன்றுமா தத்திலகு நசியமது
சீருடன் செய்துகொள்வோர்
வட்டமா மூவிரு மதிக்கொரு விரேசனம்
வாங்காம லேவாங்குவோர்
வயிறுபசி கண்டுண்ணு வோர்களுக் கொருநோயும்
வாராது மிகுதியாக
அட்டமா சித்திமுன் னிட்டமது ரேசனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (91)

தீயோர் தேடு பொருள் போம் வழி கூறியது

வையகந் தன்னிலே தீயோர்க ளீட்டுபொருள்
வம்பருக் காம்பிணிக்காம்
வாயோட்ட மாகவே பேயோட்டு பூசாரி
மார்கடஞ் செலவினுக்காங்

கையகங் கொண்டகொலை பாதகர்க் காம்படைக்
கன்னமிடு கள்ளருக்காங்
கஞ்சா மயக்கபினி சாராய மாசுனங்
கடியகட் குடியருக்காம்
மெய்யகஞ் சிறிதிலாப் பொய்வழக் கதுபேசும்
வீணருக் காந்தழற்காம்
வேசையர்க் காம்பூத மூசுமண் ணுக்காகும்
வேந்தர்தண் டத்தினுக்காம்
அய்யனே துய்யனே செய்யவெழின் மெய்யனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (92)

நல்லோர் பொருட் பயன்படுமோறு கூறியது

சேற்கடற் றாரணியி னல்லோர்க ளீட்டுபொரு
டேவால யங்களுக்காந்
தேவாபி டேகமா ராதனைக் காமையர்
திகழ்சமா ராதனைக்கா
நூற்கடற் கரைகண்ட புலவர்கட் காமௌன
நுவலுமெய்ஞ் ஞானியர்க்காம்
நோற்குமா தவமுடைய பேர்க்காம் பசிக்கன
நுகர்ச்சிக்கு முதவலாகும்
நாற்கிளரும் வேதநெறி வேள்விகட் காஞ்சுருணா
நண்ணுதா னங்களுக்கா
நற்றொண்டர் பாகவதர் தங்களுக் காம்புரியு
நாலெட் டறங்களுக்காம்
ஆற்கணுல் வர்க்குமுன் னருள்பரஞ் சோதியே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (93)

### பிரயாணத்துக்கு ராசி பலன் கூறியது

மேடலக் கினமதனி லூர்ப்பயண மாகாது
 விறிடப நலமுள்ளதாம்
மிதுனத்தி லேசெலுங் காரியமெ திர்ப்படு
 மென்கடக மரசர்சேவை
நாடருஞ் சிங்கத்தி லாதாய மாங்கன்னி
 நளிர்ச்சுரங் காணுந்துலாம்
நற்பொருள் கிடைக்கும் விருச்சிகம் பிணியினு
 னலிவுட னடுக்கமுண்டாங்
கோடுறுந் தனுசுசத் துருஜயம் மகரமது
 கொடியபய மாங்கும்பமோ
கொடியர்தண் டனையெய்து மீனமமை யாற்பயங்
 கொண்டயாத் திரைசெய்காலத்
தாடுவே யுருதோளி பங்கவிஃ துண்மையா
 மருள்பெறு வசந்தராயர்
அண்ணுவி னிற்றுதிசெ யுண்ணு முலைக்குரிய
 வண்ணு மலைத்தேவனே. (94)

### முக்குணத் தியல்பு கூறியது

ஞானமரு டவமேன்மை வாய்மைபொறை மோனமொடு
 நவைசெயைம் பொறியடக்கல்
நற்கரும வியல்புநெறி சாந்தமுயர் கல்வியிவை
 நல்லசாத் விகருணமாம்
ஈனமறு தானமன வூக்கந் தவந்தரும
 மெழில்கல்வி கேள்விஞானம்
இசைவீர சௌரிய மலங்கார மிவையே
 யிராசத குணத்தியல்பாந்
தானுறு நெடுந்துயி லொழுக்கமுத னீதிவழு
 தாழ்வுஞ் சமாதிகோபந்

தாவுகொலை பேருண்டி சோம்புபொய் காமமிவை
தாமத குணத்தன்மையாம்
ஆனமுத மைந்தாடு மந்திவண் ணத்தனை
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (95)

நவக்கிரகதானங் கூறியது

பானுவுக் கீந்திடுந் தானமது கன்றீன்ற
பசுவாகு மதிதனக்குப்
பானிறச் சங்குசெவ் வாய்க்குச் சிவப்பெருது
பைம்புதற் குச்செம்பொனும்
வானியல் வியாழந் தனக்குவெண் பட்டாடை
மாசுக்கி ரற்குவெள்ளி
மருவிய சனிக்குமிவை கரியநிற மாயிலகு
மயிடமா லெருமைக்கடா
தானிய விராகுவுக் கச்சங் கருப்புடைத்
தானவெள் ளாட்டுக்கடா
தக்கசெங் கேதுவுக் கோதரிய மதயானை
சாற்றுமறை யோர்க்களித்தல்
ஆனது நவக்கிரக தானவிதி யீதென்ப
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (96)

நவக்கிரகவுருவுந் திசையுங் கூறியது

நடுவட்ட மாமிரவி யுருவிருக் கின்றநிலை
நாடுமக் கினிமூலைதா
ஞற்சதுர மதியுறுக் காற்றிசைத் திரிகோண
நாணிலம கன்வடிவமாம்

வடுவிலீ சன்றிசைப் பாணவடி வம்புதன்
வடதிசைத் தீர்க்கசதுரம்
மருவுபொன் கீழ்த்திசைப் பஞ்சகோ ணத்துரு
வயங்குநீர் தருசுக்கிரன்
மிடையுமேற் றிசைதனுப் போலுருச் சனிநிருதி
மேவுசூர்ப் பாகாரமாய்
மேவுவனி ராகுவட மேற்றிசைத் துவசமென
வெங்கேது தங்குமிடமாம்
அடையுமொன் பதுகிரக வடிவமுந் திசையுமீ
தருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (97)

நவதானியமுஞ் சமித்துங் கூறியது

சூரியன் கோதுமை செஞ்சாலி சோமனுந்
துவரைசெவ் வாய்தனக்காஞ்
சொல்லரிய புந்திக்கு நற்பசும் பயறதாந்
தூய்வியா ழந்தனக்கு
வேரியங் கடலையாம் வெள்ளிக்கு மொச்சையாம்
மேவிய சனிக்கெள்ளதாம்
வெற்றிகொ ளிராகுவுக் கானமா டங்கேது
வினைகாண நவதானிய
நாரிய லெருக்குப் பலாசலங் கருங்காலி
நாயுருவி யச்சுவத்தம்
நல்லத்தி வன்னிகூர்ப் புல்லறுகு தர்ப்பையிவை
நவசமித் தாகுமென்றே
டாரிய முணர்ந்தமே லவரீது விதியென்ப
ரருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (98)

மூவர் தேவாரத்தொகை கூறியது

பன்னருந் திருஞான சம்பந்தர் செந்தமிழ்ப்
பதிகமீ ரெண்ணாயிரம்
பண்பான சுந்தர ரிசைத்ததே வாரமுப்
பஃதுமே லேழாயிரம்
நன்னுதற் றிலகவதி யாரொடுந் தோன்றுதிரு
நாவினுக் கரசர்சொன்ன
நற்றமிழ்ப் பதிகநாற் பத்தொன்ப தாயிர
நாடுமிம் மூவர்மொழியுட்
பின்னரெண் ணூற்றுறு பத்துநாற் பதிகமிப்
பேருலகு தனில்விளங்கும்
பேசுமிரு நூற்றேழு பத்தைந்து சிவதலப்
பெருமைசேர் பதிகமாகும்
அன்னதிரு முறையோதி நின்னடிப் பூசைசெய்
தருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வணணா மலைத்தேவனே. (99)

சிற்றின்பப் பேரின்ப அட்டாங்கயோகங் கூறியது

வனிதை பஞ்சணையாறு சுவைபோச னங்கந்த
மருவுசித் திரவஸ்திரம்
பாகுமணி யிழையணித் தயிலதாம் பூலமெண்
வகையதே சிற்றின்பமாந்
திருமணி விபூதிருத் ராக்கபஞ் சாக்கரந்
தீர்த்தம்பிர சாதமாசான்

றெரிசன மிலிங்கசங் கமமெட்டு மன்பருட்
டெளிதரும் பேரின்பமாந்
தனியியம நியமமா தனபிரா ணயாம
தற்பிரத்தி யாகாரமாம்
தாரணை தியானஞ்ச மாதியிவ் வெட்டுமே
சாற்றுமட் டாங்கயோகம்
அனவரத நடனமிடு வளருக பதத்தனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (100)

நாலு யுகத்திலும் பூசை செய்தவர்களைக் கூறியது

தீதிலா துயர்கிரே தாயுகந் தன்னிலே
செங்கனற் சோதிமலையாந்
திருமால யன்முத லிமையோர்கண் மறையிறைற்
சிவதரும மேபுரிந்தார்
நீதிமா மணிதிரே தாயுகத் தாகம
நெறித்தபோ தனர்பூசை
நிதிதுவா பரமதில் வச்சிராங் கதனின்ற
நிருபனும் வீரசம்பு
நாதனே கலியில்வல் லாளபிர புடதேவ
ராமர்தரு மஞ்சகாப்த
நவில்சாயி ரத்தேழு நூறுமெழு பத்துமே
ணடுபில வங்கவருட
மாதியாய் நின்றதல தருமகர்த் தாவான
வருள்பெறு வசந்தராயர்

அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (101)

அவை யடக்கங் கூறியது

பரிமளந் தோய்பிதழி மாலையொடு மணமிலாப்
பச்சிளம் புல்லறுகினைப்
பழுதென்று தள்ளாம லீசனுள மகிழ்வொடும்
படர்சடையி லேற்றபடியால்
பிரவுமா சையினு னுரைத்தவிச் சதகமது
மிக்கபுன் சொல்லாயினும்
மேதினி யெலாம்புக ழிலக்கண மிலக்கிய
மிகத்தெளிந் தறிநாவலர்
பரவுநின் புகழ்தலப் பெருமையின் றுதியிருப்
பதனு லிகழ்ந்திடாமற்
படியுள நிறைந்தன்பு கொடுபெரி துவந்தருட்
பாலித்து மேற்கொள்ளுவார்
அரியயனொ டிந்திரன் பூசித்த வீசனே
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே. (102)

வாழி கூறியது

சந்ததமு மோதுநான் மறைவாழி யாகந்
தளிர்க்கும் பசுக்கள்வாழி
தரணிகா வலர்வாழி மனுநீதி வாழிமுத்
தமிழ்வாழி வேள்விதனிலே

வந்தெழுந் தெய்வீக மன்னவன் வாழியவன்
மதலைமெய்ப் பொருளையனார்
மைந்தர்வழி வந்தவர்கள் வாழிகுக முனிவாழி
மாதவ நிறைந்துவாழி
சுந்தர மிருந்தவுண் ணாமலைத் தாய்வாழி
சோதிப்ர காசமாகத்
தோன்றுமண் ணாமலைப் பரமனார் வாழிமெய்த்
துணைமனோன் மணியும்வாழி
யந்தணர்கள் வாழியெழில் சிங்கபுரி வாழிமெய்
யருள்பெறு வசந்தராயர்
அண்ணாவி னிற்றுதிசெ யுண்ணா முலைக்குரிய
வண்ணா மலைத்தேவனே.

அண்ணாமலைச் சதகம்

முற்றிற்று.

---

Second Edition] 1927 [1000 Copies

ஓம்

மஹா கணபதி துணை

# பர்த்ருஹரி சிங்கார சதகம்


தமிழ்ப் பண்டிதர்

ஸ்ரீமாந் ம. மாணிக்கவாசகம் பிள்ளை

அவர்கள் செய்யுள் வடிவமாக மொழிபெயர்த்த மூலமும்,

ஷையார் இயற்றிய தெளிபொருள் விளக்க உரையும்.



மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87, தம்புசெட்டி வீதி, சென்னை.

1925

விலை அணா 3

பர்த்ருஹரி சிங்கார சதகத்தின்

# விஷய அட்டவணை



அரிச்சந்திர புராண வசனம்: அரிச்சந்திர புராண மூலத்தை அநுசரித்துத் தமிழில் நூதனமாக வசனப் படுத்தப்பட்ட அரிய நூல்; இனிய நடையில் கதை விரிவாக அமைந்தது: விலை ரூபா 1-8-0

அருணாசல புராண வசனம்: அடியார்களின் பாவத்தைப் போக்கும் திருவண்ணாமலை ஸ்ரீ அருணாசலேசுவரரின்மீது பாடப்பட்டுள்ள ஷை புராணத்தின் கருத்தை எல்லோரும் எளிதில் அறிந்துணருமாறு, இனிய நடையில் வசன ரூபமாக இயற்றப் பெற்றது: விலை ரூபா 1

பிரபோத சந்திரோதய வசனம் என்னும் மெய்ஞ்ஞான விளக்கம்: விலை ரூபா 1

பிரபுலிங்கலீலை வசனம்: கவிச் சக்ரவர்த்தியாகிய துறைமங்கலம் சிவப்பிரகாச ஸ்வாமிகளியற்றிய அரிய நூலின் தமிழ் வசனம்: விலை ரூபா 1

ஸ்ரீ பக்தலீலாம்ருத வசனம்: 82 பக்தர்களின் திவ்விய சரித்திரம்: விலை ரூபா 3

வேதப்பொருள் விளக்கம்: ருக் யஜுர், சாம, அதர்வணம் ஆகிய நான்கு வேதங்களிலுள்ள முக்கிய விஷயங்கள் அடங்கியது: விலை அணா 12. வேதப்பொருள் ஸாரஸங்கிரகம்: அணா 4

பட்டினத்துப் பிள்ளையார் என்னும் திருவெண்காட்டடிகள் சரித்திரம் (வசனம்): விலை அணா 12

ஸ்ரீ பகவத்கீதை வசனம்: ஸ்ரீ கிருஷ்ண பகவான் அர்ச்சுனனுக்கு உபதேசித்த திவ்ய கீதையின் தமிழ் வசனம்: ரூபா 1-8-0

மெய்பொருள் விளக்க வினாவிடையும், சைவசமய ஆசௌச வினாவிடையும்: விலை அணா 8

வீரசைவ வினாவிடை: இதில் வீரசைவ மதத்தின் சமயாசார இலக்கணங்கள் யாவும் விரிவாக எடுத்துக் கூறப்பட்டுள்ளன: அணா 5




உ

பரமபதி துணை

பர்த்ருஹரி

# சிங்கார சதகம்

## மூலமும் உரையும்

மன்மத வணக்கம்

(வெண்பா)

*யாவனொருவன் அயன்முதன்முத் தேவரைப்பூ*
*ஏவதனால் வென்றே இறுமாக்குந்—தேவனந்த*
*மன்மதனை வந்திப்பேன் மன்னுஞ்சிங் காரப்பேர்*
*துன்னுசத கம்பொலியச் சூழ்ந்து.*

(உரை) சிருஷ்டி, திதி, சம்மாரம் என்னும் முத்தொழிலை யும் செய்ய வல்லவர்களானாலும் பிரமன் விஷ்ணு சிவன்முதலிய முத்தேவர்களையும் தன்னுடைய பூவம்பால் சரசுவதி முதலிய மூன்று பெண்களுக்கும் முறையே அடிமைகளாக்கி வெற்றிகொ ண்டு களித்திருக்கும் தேவனெவன்? அந்தத்தேவனும் மன்மதனை இந்தச் சிங்காரசதக மிடையூறின்றி முடியும்படி தியானித்து வந்தனஞ் செய்கின்றேன்.

(விசேஷவுரை) மன்மதனுருடைய புஷ்பபாண மகத்து வத்தால் சிவன் பார்வதியைத் தனது அரையுடலிலும், விஷ்ணு இலக்குமியைத் தனது மார்பிலும், பிரமன் சரசுவதியைத் தனது நாவிலும் வைத்துக்கொண்டிருப்பதே இங்குக் குறிக்கப்பட்டது.()

## 1-வது அதிகாரம்

# பெண்கள் பெருமை

(வெண்பா)

புன்னகையால் கைகள் புரள்வதனால் நாணத்தால்
மன்னுமச்சத் தால்முகத்தால் வாட்கண்ணால்—இன்மொழி
போலி வெறுப்பொயிலால் பூவையர்கள் ஆடவரை [யால்
மார்வியற் றிப்பிணிப்பார் மற்று.

(உரை) புன் சிரிப்பாலும், கைகளைப் புரட்டுவதனாலும், கூச்சத்தாலும், பயத்தாலும், முக நயத்தாலும், வாள்போற் கூரிய கடைக்கட் பார்வையாலும், நய மொழியாலும், போலி வெறுப்புரையாலும், சொகுசாலும், இன்னும் பல விதத்தாலும் பெண்கள் ஆண்மக்களை மயக்கித் தம் வசப்படுத்துவார்கள். (2)

(வெண்பா)

அரைக்கண் கடைக்கண் அரும்பார்வை பைய
உரைக்குமொழி நாண முயர்ந்து—நிரைக்கின்ற
புன்னகைஒய் யாரம் பொருந்துநடை மாதர்க்குப்
பொன்னகைபோ லுள்ள பொருள்.

(உரை) கடைக்கண்ணால் அரைப்பார்வை பார்த்தல், இனிமையாய் ஈனசுரத்தோடு பேசுதல், நாண நிறைந்த புன்னகை, சிங்காரமாய்க் குலுக்குநடை முதலியவைகள் பெண்களுக்கு இயற்கையாயுள்ள பொன்னகைபோற் சிறந்த பொருள்களாம். (இவைகளால் அவர்கள் ஆடவரை வசப்படுத்துவார்கள்.) (3)

(கலி வெண்பா)

கருவிழியை மேலேற்றிக் காட்டுவாள் ஓர்சார்
உருவளைந்து வீழ்ந்திடுவாள் ஓர்சார்—திருமடந்தை

ஒக்குமிவள் நாணால் ஒருசார் தலைவளைப்பாள்
மிக்கஒயில் ஓர்சார் விளக்குவாள்—தக்கமுகச்
செந்தா மரையைத் தெரிவிப்பாள் ஓர்சார்கண்
அந்தா மரைநீல மாமென்று—சந்தேகம்
கொள்ளத் திருப்புவாள் கோலம் இதுவென்று
விள்ளப் புகுவதெலாம் வீண்.

(உரை) திருமகளுக்குச் சமானமான இவள் தன் கண்ணிற் கறுப்புவிழியை மேலேற்றி யோரிடத்தில் காட்டுவாள்; ஓரிடத்தில் தன் உருவம் துவண்டு வீழ்வாள்; ஓரிடத்தில் வெட்கத்தால் தலை குனிவாள்; ஓரிடத்தில் மிகுந்த ஒயிலால் தன் சொகுசைக் காட்டு வாள். ஓரிடத்தில் தன் முகத்தாமரையைக் காட்டுவாள்; ஓரிடத் தில் தன் கண்களைக் கண்டோர் நீலமலரோ என்று சந்தேகங் கொள்ளும்படி திருப்புவாள். ஆகையால், பெண்களின் கோலத் தை விளம்புதல் வீணாகும் (அரிது என்றபடி.) (4)

(வெண்பா)

மதிமண் டலமுகமும் வாரிசநேர் கண்ணும்
மதிபொன்போல் மேனி வனப்பும்—சுதிவண்டை
வெல்லும் அளகமும் வேழநிகர் மார்பகமும்
ஒல்லும் இனிய உரைவழக்கும்—நல்ல
செயற்கையுள்ள இந்தச் சேயிழைக்கு நீங்கா
இயற்கையா யுள்ள எழில்.

(உரை) சந்திரமண்டலம்போல் முகமும், தாமரைபோற் கண்களும், உயர்வாக மதிக்கக்கூடிய தங்கம்போல் மேனி நிற மும், கீதம் பாடும் வண்டை வெல்லும் கூந்தலும், யானை மத் தகத்தையொத்த மார்பிடமும், இனிமையாகிய வார்த்தை வழக்க

மும், நற்குண நற்செய்கையுள்ள இந்த மங்கைக்குப் பிறவி தொட்டு இயற்கையாயுள்ள அலங்காரங்களாம். (5)

(வெண்பா)

முகத்திற் சிறுநகைப்பு மொய்கலக வாட்கண்
சுகத்திற் சிறந்ததீஞ் சொற்கள்—உகக்குமிடை
அங்கைப் பிடிநடையிங் காமிவற்றில் யாதுசிறு
மங்கைக்கீ யாது வனப்பு.

(உரை) முகத்திலுள்ள புன்னகை, கலக விழிகள், காதுக்கினிய மதுரமொழிகள், அழகிய துதிக்கையையுடைய பெண் யானையைப் போன்ற ஒய்யாரநடை முதலியவைகளில் இடை யழகும் இளம்வயது முள்ள இம் மங்கைக்கு அழகு தாராதது எது? (எல்லாம் அழகாகவே இருக்கும்.)

(வி - ரை) 'உகக்குமிடை அங்கைப்பிடி' என்பது 'அழகிய கைப்பிடி யளவு' என்றும் பொருள் தருவது காண்க. (6)

(கலிவெண்பா)

நாகரிகர் தம்வயதில் நாடத் தகுவதெது
மோகமுடன் மங்கை முகமதியம்—யோகமுடன்
மோத்தற் குரியவையில் முக்கியமர் யுள்ளதெது
ஏத்தற் குரியமங்கை யின்னுயிர்ப்பாஞ்—சோத்திரத்தில்
மேன்மையாய்க் கேட்பதெது மெல்லியலின் கண்டமொழி
பான்மையர் யுண்பதெது பாவையிதழ்த்—தேன்மதுரம்
தீண்டத் தகுபொருளில் திவ்வியமாய் உள்ளதெது
காண்டற் கரியவெழிற் கன்னியுடல்—வேண்டியென்றும்
சிந்தனைசெய் தக்கதெது தேன்மொழியின் ஒய்யாரம்
வந்தனைசெய் தக்கதவள் வாய்ப்பு.

(உரை) நாகரிகபுருஷர் நல்ல வயதில் ஆவலாய் நாடிக் காணத்தக்க தெது? மங்கைப்பருவப் பெண்ணின் மதிமுகம். சந்தோஷமாய்ப் மோக்கக்கூடியவைகளில் முக்கியமாயுள்ள தெது? புகழ்தற்கரிய பூவையின் சுகந்த வாடை. காதில் விசேஷமாய்க் கேட்பதெது? அவளுடைய கற்கண்டு போன்ற இன்சொல். மேலாக உண்பதெது? மெல்லியலின் உதட்டில் ஊறும் தீந்தேன். தீண்டத்தக்க பொருளில் சிறந்த தெது? காணுதற்கரிய கன்னிகையின் திருமேனி. எக்காலத்தும் விரும்பிச் சிந்திக்கக்கூடிய தெது? இலங்கிழையின் ஐயாஉ உருவம். ஆகையால், அப்படிப்பட்டவளுடைய வாழ்க்கையை உகந்து நாம் வந்தனஞ் செய்யவேண்டும். (7)

(வெண்பா)

நாற்சிலம்பாற் கைவளையால் காஞ்சியாற் கல்லென்று
மேற்கிளம்பு மோசை வெருட்டியமான்—போற்கட்
கடைப்பார்வை யால்மாதர் கட்டிப் பிடிப்பார்
தடைப்படா தாடவரைத் தாம்.

(உரை) காலி லணிந்த சிலம்பாலும், கையி லணிந்த வளையாலும், இடையி லணிந்த மேகலாபரணத்தாலும், மேலெழும் ஓசையால் மருண்ட மான்போன்ற தமது கட்கடைப் பார்வையால் மாதர்கள் ஆடவரைத் தடையில்லாமற் கட்டிவிடுவார்கள். (ஆடவர்களில் யார்தாம் மாதர்களின் மருண்ட மான் கண்வலையில் அகப்படார்கள்?) (8)

(வெண்பா)

குங்குமத்தின் சாந்து குமுகுமென்று தான்மணக்கத்
தங்குமுத்தின் மாலை தளதளென்ன—நங்கைமலர்ப்
பாதச்சிலம் பொலிக்கப் பார்மேல் எவர்மயங்கார்
காதற் பெருக்கிற் கலந்து.

(உரை) குங்குமச் சாந்து குமுகுமென்று மணக்கவும், மார்பிற் றங்கிய முத்துமாலை தளதளவென்று ஒளிவீசி ஆடவும், பூப்போல் மெல்லிய பாதச்சிலம்பு கல்கல்லென்று ஒலிக்கவும் நங்கை நடக்கையில் இவ் வையகத்தில் யார்தாம் காதல் வெள்ளத்தில் வீழ்ந்தாழ்ந்து மயங்கார்? (யதீந்திரர்களையும் பெண்கள் தம் வசப்படுத்திக்கொள்வார்கள்.) (9)

(வெண்பா)

மெல்லியலார் பெண்களெலாம் மெய்வலியில் லாரென்று
சொல்லுவார் பாவாணர் சும்மாதாம்—வல்லசுரர்
தம்மைவென்ற இந்திரனைத் தாம்வென்றார் மாதரெனில்
அம்மவவர் போல்வலியார் யார்.

(உரை) "பெண்களெல்லாம் மிருதுவானவர்கள், சரீரபலம் இல்லாதவர்கள்" என்று பாவாணர் சும்மா சொல்லுவார்களன்றி உண்மையல்ல. பலமுள்ள அரக்கரை வென்ற இந்திரனையும் பெண்கள் மயக்கித் தம் வசப்படுத்தி வென்றார்கள் என்றால் அவர்களைப் போல் பலமுள்ளவர்கள் இவ் வுலகில் வேறு யார் இருக்கின்றார்கள்? (இல்லை என்றபடி.) (10)

(வெண்பா)

பெண்களுக்காண் மக்கள் பெருஞ்சே வகரோபெண்
கண்களுக்குட் பட்டுக் கருத்தாயப்—பெண்களுக்குக்
குற்றேவல் செய்குவார் கோணு தவர்நிரம்பக்
கற்றோரே யாருனுங் காத்து.

(உரை) பெண்களுக்கு ஆண்கள் பெரிய வேலைக்காரர்களோ, என்னவோ? பெண்களுடைய கண்வலைக் குள்பட்ட ஆண்கள் நன்றாய் வாசித்தவர்களானாலும் மனமுவந்து, அந்தப் பெண்களுக்குக்

ற்றேவல் கோணமற் செய்து காப்பார்கள். (பெண்களின் கடைக்
ண் பார்வையின் மகத்துவம் இது.) (11)

(கலிவேண்பா)

பெண்மணிநின் கேசம் பிறழா தொழுங்கர்கும்
ண்மணிகள் வேதக் கருத்துடைய—பண்மணக்கும்
வாய்ப்பொறிதான் தூயகுண வாய்ப்புடைய தாகும்நின்
ரய்ப்புடைய மார்பில் இருப்பாக— ஆய்ப்புடைய
மாமுனிவர்க் காதாரம் மன்னும் மடந்தாய்நின்
நேமநிலை சாந்த நிலையிவ்வா—ருமெனினும்
மோகம் பெருக்கியெம்மை மூடர்க ளாக்குவதால்
தேகம் நிலைகுலைந்து சீர்கெட்டுப்—போக
உறுதி யிறுதியாய் ஓடுகின்ற தெப்படியோர்
நிறங்கரிய கூந்தல் நெறிந்து—செறிந்து
முடிந்திருக்கும் வாயில் முறுவல் ஒழுங்காய்ப்
படிந்திருக்கும் காதளவிற் பாய்ந்து—முடிந்திருக்கும்
கண்கள்நின் பால்வீடு கட்டுமுத் தாரத்தால்
ஒண்மை மிகுந்திருக்கும் உண்மையினல்—எண்மையாய்
ஓங்கும் அநுராகம் உன்னுடம்பால் எங்களுக்கு
ஈங்கிறும்பூ தல்ல இது.

(உரை) ஏ பெண்மணீ! உன் கூந்தல் குலையாமல் மெத்த ஒழுங்காய்ப் படிந்திருக்கின்றது; உன் கண்மணிகள் வேதோபநிஷத்தின் கருத்தை அடக்கிக்கொண் டிருக்கின்றன. உன்னுடைய திருவாய் பரிசுத்த குணகணங்களைப் பொருந்தியிருக்கின்றது. உனது மார்பில் இசைந்து பொருந்திய இருப்பான பால் வீடுகள் மாமுனிவர்க்குக் காயசித்தியாதாரமா யிருக்கின்றன. ஆனாலும், அவைகள் மோகத்தைப் பெருக்கி யெங்களை மூடர்கள்

ஆக்கிவிடுகின்றன. ஆகையால், நாங்கள் சரீரநிலை குலைந்து தாறுமாருய்ச் சீர் கெடுகின்ரும். எங்கள் வைராக்கியமெல்லாம் போய் விடுகின்றது. இது எப்படி என்று ஆச்சரியமா யிருக்கின்றது. ஆனாலும், ஒருவாறு காரணஞ் சொல்லுகிறேன். உன்னுடைய கரிய நிறக் கூந்தல் நெறிந்து செறிந்து முடிந்து அழகாய் விளங்குகின்றது. வாயிற் பற்கள் வரிசையாய் அமைந்திருக்கின்றன. மார்பிற் பால்வீடு முத்தாரத்தழகு மிகுந்து தோன்றுகின்றன. இந்த உண்மையினுல் உன் உடம்பு எங்களுக்கு மிகுந்த அநுராகத்தை உண்டாக்குகின்றது. ஆகையால், நாங்கள் வைராக்கியந் தப்பி வாழ்வது அதிசயம் அன்று. (12)

(வெண்பா)

உலகில்வில் லாளிகள் உண்மையாய் வில்லில்
இலகும் சரந்தொடுத் தெய்வார்—நிலையாய்நீ
கண்ணுக் கெட்டாவெங் கருத்தே இலக்காயுன்
பண்பிற் குறித்தெய்வாய் பார்த்து.

(உரை) உலகத்தில் வில் வித்தையிற் சிறந்தோர் விளக்கமான வில்லில் அம்பு தொடுத்துக் கண்ணுக்குத் தோற்றும் பொருளை எய்வார்கள். நீயோ ஒரு நிலையா உன்கண்ணுக் கெட்டாத எம் மனதே இலக்காக உனது அழகாதி குணங்களால் எய்கின்ருய்! (இது அதிசயம் என்றபடி.) (13)

(வெண்பா)

பகலிரவாக் காலத்தில் பானுமதி மீன்கள்
மிகவிருந்து மானேர் விழியாள்—அகன்றதனுல்
எங்குமிருள் மூடி யிருக்கின் றதுதோழா!
சங்கடத்தி லாழ்வேன் தவித்து.

(உரை) "பகலில் வெளிச்சந் தர சூரியனும், இரவில் சந்திரனும் நக்ஷத்திரங்களும் மிகுதியா யிருந்தும் மான்விழித் தேன்மொழியாகிய என் காதலி அகன்றதனால், எங்கும் இருள்மூடியிருக்கின்றபடி நான் சங்கடப்பட்டுத் தவிக்கின்றேன். ஆ, என் தோழா!" என்று காதலனொருவன் தன் தோழனோடு சொல்லிக் கொண்டான். (14)

(வெண்பா)

திரண்டுருண்ட மார்பும் தீரக் கறுத்த
இரண்டு விழியும் இதழும்—வெருண்டென்னை
வாடச் செய்தாலும் வகையாகச் செய்திடுக
நீடச் சிறுத்தவிடை நேராக—மூடிப்
பொதுவிடத்தி லேயிருந்தும் பூண்டென்னை வாட்டும்
இதுவென்ன ஞாயமோ இங்கு.

(உரை) திரண்டுருண்ட மார்பும், மெத்தக் கருமையான இரண்டு கண்களும், உதடும் நான் மருண்டு வாடும்படி வருத்தினாலும் வருத்தட்டும். மெத்தச் சிறுத்து மறைந்துள்ள இடையானது நேராக மூடிப் பொதுவிடத்திலிருந்தும் என்னை ஓரவஞ்சனை மேற்கொண்டு வருத்தும் இது என்ன ஞாயமோ, இங்கு எனக்குத் தெரியவில்லை. (ஏ, காதலீ! உன்னை நான் பெறாததனால், இவ் வங்கங்கள் என்னை வருத்துகின்றன. ஆகையால், நீ கடைக்கணித்துக் காப்பாயாக என்றபடி.) (15)

(வெண்பா)

முகஞ்சந் திரகாந்த மொய்நீலங் கண்கள்
தகும்பதும ராகங்கை தான்பெற்—றகமகிழ்ந்திப்
பெண்மணியென் கண்மணிபோல் பீடார் மணிமாய்க்
கண்ணெதிரே தோன்றுங் கலந்து.

(உரை) சந்திரகாந்த மணிபோன்ற முகத்தையும், முழுநீல மணிபோன்ற கண்களையும், தகுதியான பதுமராக மணிபோன்ற கைகளையும் பெற்றதனால் மனமகிழ்ந்து, இந்தப் பெண்கள் சிகாமணியார் என் கண்மணிபோல், பெருமை பொருந்திய மணிமயமாய் என் கண்ணெதிரிற் கலந்து தோன்றுவார். (காக்ஷி.) (16)

(வெண்பா)

மார்பிற் குருவாம் வதனத்திற் சந்திரனும்
சீர்பாதந் தன்னிற் றிகழ்சநியாம்—ஏர்கூர்
கிளிமொழியார் தோற்றம் கிரகவட்டம் போலும்
களிமொழியார் ஆவார் கலந்து.

(உரை) மார்பிடம் சுவர்க்கம்போன் றுயர்ந்திருப்பதால், குரு ஸ்தானமாம்; முகம் சந்திர ஸ்தானமாம்; பாதம் மந்தகதியாய் நடப்பதால் சநி ஸ்தானமாம். ஆகையால், இந்தக் கிளியொழியார் என்னெதிரில் கிரகவட்டம்போல் தோன்றி வெருள்கின்றார். (இனிக் களி மொழியாராய் என்னைக் கலந்துநிற்பார்.) (17)

(வெண்பா)

மார்பு பருத்திருந்தென் மான்கண் கறுத்திருந்தென்
சீர்சால் முகந்தான் தெளிந்திருந்தென்—தேர்மனமே!
சும்மா கிடைக்குமோ சுந்தரியின் கூட்டுறவு
அம்மா தவஞ்செய் அறிந்து.

(உரை) மார்பு பருத்திருக்கிற தென்றும், கண்கள் கருத்திருக்கின்றன என்றும், முகம் தெளிந்து சிறந்திருக்கிறதென்றும் நீ வியந்தென்ன பிரயோஜனம்? ஓ, மனமே! சுந்தரியின் கூட்டுறவு உனக்குச் சும்மா கிடைக்குமா? இதை அறிந்து நீ தவஞ் செய். (அப்போது கிடைக்கும். இல்லாவிட்டால் கிடைக்காது என்றபடி.) (18)

(வெண்பா)

அலங்கார சேஷ்டையிவ் வஞ்சனமான் கண்ணி
அலங்கார மாய்ச்செய்வா ளந்தோ—அலங்கார
மங்கைப் பருவமிந்த மாந்தளிர் மேனிக்குப்
பொங்குமழ கீயுமிப் போது.

(உரை) இம் மை தீட்டிய மான்கண்ணி, சிங்கார சேஷ்டை சிறப்பாகச் செய்கின்றாள்; சிங்கார மங்கைப் பருவம் இந்த மாந்தளிர் மேனிக்கு இப்போது மிகுந்த அழகைத் தருகின்றது. (இப்போதுதான் சிங்கார சேஷ்டை செய்யத் தொடங்கினாள் என்றபடி.) (19)

(வெண்பா)

மான்விழியின் தேன்மொழிகள் மாமதுர மாமவற்றால்
தான்கொண்ட காதலைத் தான்விளக்கும்—மீன்விழிதான்
சிங்கார மாகச் சிறந்திருப்பாள் காமுகர்க்
கிங்கா தரமா யிருந்து.

. (உரை) மான் போன்ற விழியுடைய இம் மங்கையர்க்கரசியின் தேன் மொழிகள், மிகவுந் தித்திப்பானவைகள். அவைகளால் இவள் தான் கொண்ட காதலைத் தானே தெரிவிக்கிறாள். இந்த மீனாக்ஷி, காமுகர்க்கு ஆதாரமாய் அலங்காரமாய்ச் சிறந்திருக்கின்றாள். (20)

## 2-வது அதிகாரம்

## கூடற் சிறப்பு

(விரகதாபத்தால் வாடின மேனியுடன் தனித்து ஒரு மங்கை வனத்தில் வந்தாள்.)

(வெண்பா)

வந்தாளோர் மங்கை வனத்தில் நிலவெறிக்க
நொந்தாள் இடையில் நுடங்குந்தன்—முன்றனை
கொண்டுதன்னை மூடினாள் கோல மரநிழலைக்
கண்டுநின்று கொண்டாள் கரந்து.

(உரை) வனத்தில் மங்கை யொருத்தி வந்து நிலவெறிக்கக் கண்டு வருந்தினாள். அது தன்மேற் படாமல் தடுக்கத் தன் முன்றானையால் தன்னை மூடிக்கொண்டாள். அங்குள்ள அழகான மர நிழலைக் கண்டு அதில் மாறி மாறி நிலவுக்கு ஒளிந்து நின்று கொண்டிருந்தாள். (21)

(வெண்பா)

பாரா திருக்குமட்டும் பார்க்கவரு மோவென்று
கோராநிற் போம்பார்த்தால் கூடலை—நேராதோ
மங்கையென்போம் நேரின் மனமொத் திணைபிரியா
திங்கிருக்க வெண்ணுவோம் யாம்.

(உரை) மங்கையை நாம் பாராதிருக்குமட்டும், அவள் நாம் பார்க்க வருவாளோ என்று கோருவோம்; பார்த்தால், அவள் நம்மோடு கூடலைச் சம்மதியாளோ என்று எண்ணுவோம்; அதுவுங் கைகூடினால், அவளோடு மனமொத்து இணை பிரியாமல் என்றும் இருக்கமாட்டோமா என்று விரும்புவோம். (22)

(வெண்பா)

மல்லிகைப்பூ மாலை மகிழ்ந்தணிந்து மாமணச்சாந்
தொல்லு முடலில் உகந்துகொண்டு—நல்லமங்கை
தன்னைத்தன் மார்பில் தழுவுவோன் இவ்வுலகில்
மன்னுசுவர்க் கங்காண்பான் வாழ்ந்து.

(உரை) மல்லிகைப்பூ மாலையை மகிழ்ச்சியுடன் சூடி, சிறந்த மணம் வீசும் செஞ்சந்தனத்தை யுடலிற் பூசி, எழில் மிகுந்த ஏந்திழையை இறுகத் தன் மார்பிற் றழுவிக்கொள்வோன் இவ் வுலகில் சுவர்க்கங் கண்டு வாழ்வோன் ஆவான். (23)

(வெண்பா)

காதல் வளர்ந்து கருதரிய நாணமச்சம்
ஆதல் நிறைந்து அறிவுமிகுந்—தோதல்
அலங்கார மாக அனைத்தின்பம் நல்கல்
மலங்காத மங்கை வழக்கு.

(உரை) உண்மைக் காதல் அதிகரித்தல், எண்ணுதற்கரிய நாணமும் அச்சமும் நிறைந்த அறிவு மிகுந்து நாயகனுக்கு உறுதி கூறல், அழகாகப் பெண்சுக மனைத்தும் காதலனுக்குக் கொடுத்தல், இவைகள் அழகு முதலியவைகளிற் கெடாத மங்கையின் வழக்காகும். (24)

(வெண்பா)

ஆனந்த வாரிதியில் ஆழ்ந்து பரவசமாய்
ஊனந் தவிர்ந்தமங்கை ஒண்டொடியைத்—தானந்தா
வைப்பாகப் பெற்றுமலர் வாயமுதம் உண்பானை
ஒப்பாரார் வையகத்தில் ஓது.

(உரை) ஆனந்த சாகரத்தில் ஆழ்ந்து பரவசமாய் ஊன மின்றி, குணங்குலங் குறிகளிற் சிறந்த மங்கைப் பருவத்து மாண்

புள்ள நாயகியைப் பொன்போற் பெற்று, அவளுடைய மலர் வாய்த் தேனை மாந்தும் ஆண்மகனுக்கு இவ் வுலகில் யார் நிகரா வார்கள்? (இல்லை என்றபடி.) (25)

(வெண்பா)

கண்கள் செருகிக் கருதுசுர தத்தில்ஆண்
பெண்கள் நுகரும் பெருஞ்சுகமே— கண்காண்
சுகாநு பவமென்று சொல்லுவா ரன்னோர்
மகாநு பவமா மதித்து.

(உரை) இளம் பருவத்து மங்கையும் ஆண்மகனும் கூடற் சமயத்தில், கண்கள் செருகி அரைக்கண் பார்வையால் அனுபவிக்கும் ஆநந்தத்தையே பரமாநந்தமாகப் பாவித்துக் கண்கண்ட சுகமென்று சொல்லுவார்கள். (26)

(வெண்பா)

ஆண்கள் கிழமாய் அதிகமூத் தாலுலகில்
மாண்மதன் கேளிசெய்வார் வாய்ந்தென்னல்—வீண்மொழி
பெண்கள் தனம்வீழ்ந்து பேரிளம்பெண் ஆனக்கால் [யே
மண்ணில் அதற்குதவார் மற்று.

(உரை) ஆண்கள் கிழமாய் அதிக மூத்தாலும் உலகத்திற் சிறந்த மன்மதக் கிரீடை செய்வார்கள் என்று சொல்லுதலும், பெண்கள் தனஞ் சரிந்து பேரிளம்பெண்களானல் சுரதலீலைக்கு உதவார்களென்று சொல்லி விதிக்காமையும் ஒழுங்கல்ல. (27)

(வெண்பா)

ஆசை கடலாம் அதனுழுங் காண்பாரார்
தேசு பெறுமிளமை தேயுமுன்பே—மாசுகத்தைக்

காணுவார் நல்லறிவோர் காதலியும் நானுமெங்கள்
ஏனுலாம் வீடடைவோம் இன்று.

(உரை) ஆசை சமுத்திரம் போலாம்; அதன் ஆழங் காண யாராலாகும்? இளமை மாறுமுன்பே புத்திமான்கள் சுரத சுகத்தைக் காண்பார்கள். ஆகையால், நானும் என் காதலியும் எங்கள் வீட்டைச் சேர்ந்து (இப்போதே சுகாநுபவங் காண்போம்.) (28)

(வெண்பா)

இளமைபே ராசைக் கிருப்பிடமாம் பற்பல்
அளவிலாத் தீவினைக் காதாரம்—உளமலிமெய்ஞ்
ஞான வொளிக்கிருளாம் நண்ணுதுய ரக்கடலா
மேனுமிது வேறிறந்த திங்கு.

(உரை) இளம்பிராயம் (யௌவனம்) பேராசைக்கு இருப்பிடமாகும்; அளவற்ற பல பாவங்களுக்கு ஆதாரமாகும்; மனத்தில் உண்மை ஞானத்தை மூடும் இருளாகும்; பொருந்து துன்பக் கடலுமாகும். ஆனாலும், இதுபோலச் சிறந்த பொருள் உலகத்தில் வேறு ஒன்றும் இல்லை. (29)

(வெண்பா)

மன்மதனை வந்தித்து மன்னும் சுகாநுபவம்
தன்னை வளர்க்கின்ற தாயாகிப்—பொன்னைநிகர்
மங்கையருக் கின்பம் வழங்கிளமை வாய்ந்தெவனோ
இங்கொருவன் உத்தமனென் பேன்.

(உரை) மன்மதனைப் பூசித்து அனுபவிக்கும் சுரத சுகானுபவத்தை வளர்க்குந் தாய்போன்றது இளம்பிராயம். இன்னும் அதுவே இலக்குமிபோல் அழகு நிரம்பிய மங்கைமார் கண்களுக்கு

இன்பம் அளிக்கும். இப்படிப்பட்ட இளமையைப் பெற்றோரில் எவனோ ஒருவன்தான் உத்தமனாயிருப்பவன். (30)

(வெண்பா)

தாமரைக்கண் மங்கை தனைக்கண்ட பண்டிதரும்
தாழுலுத்தர் பாலலுத்துத் தாழ்ந்தாலும்—ஓமென்றிப்
பொற்றொடியைப் பெற்றால் புகழ்பூண்போம் என்றெண்ணி
யுற்றுவகை பூப்பார் உகந்து.

(உரை) தாமரைக் கண்ணியைக் கண்ட பண்டிதர்களும் தாங்கள் உலுத்தரை யடுத்து மனமழிந்து வாழ்ந்திருந்தாலும் 'சரி' என்று விரும்பி, "இப் பொன் வளையை நாம் பெற்றோமானால், புகழ் அடைவோம்" என்று எண்ணிச் சந்தோஷமடைந்து தம் நிலையை மறப்பார்கள். (31)

(வெண்பா)

கயிலாச மர்மலைமேற் கண்மூடி வாழும்
இயலாரும் யோகியரும் இன்ப—ஓயிலாரும்
மங்கையைக் கண்டளவில் மாமோக மெய்துவார்
தங்கள் தவமிழப்பார் தாம்.

(உரை) கயிலாசமலைமேல் கண் மூடி யோகத்திருக்கும் உத்தமர்களும் இன்பரஸச் சாயலுள்ள மங்கைப்பருவ மாதைக் கண்டவுடன் தங்கள் தவங்கள் இழந்து பெருமோகத்தில் ஆழ்வார்கள். (பெண்கள் இல்லையானால் எல்லாருந் தவஞ் செய்யலாம்.) (32)

(வெண்பா)

மாதர்கள் மூலமாய் மன்னுசமு சாரத்தில்
ஏதமுடன் கூடி இருப்பதன்றி—மாதர்கள்

இன்றேல் சமுசாரம் இன்றாம் அதைவிடுதல்
அன்றே வெகுசுலப மாம்.

(உரை) பெண்கள் மூலமாய்ப் பொருந்திய சமுசாரத்திற் கூடிக் கஷ்டத்தோடிருக்கவேண்டு மன்றி, மாதர்கள் இல்லையானல் சமுசாரம் இல்லையாம். அப்போதே அதை விடுதல் வெகு சுலபமாகும். (33)

---

3-வது அதிகாரம்

## இருபக்கச் சிறப்பு

(பெண்களின் உறவு துறவு என்னும் இருபக்க வர்ணனை)

(வெண்பா)

துறவை விரும்பினல் தோய்வாய் வனத்தில்
உறவை விரும்பினல் ஓங்கில்—லறமுகந்து
தாம்பூல மங்கைக்குத் தந்துமகிழ் வாய்மைந்தா!
ஓம்பி இதைநீ உணர்.

(உரை) மங்கையைத் துறக்க விரும்பினல் மைந்தனே! நீ, வனஞ் சென்று தவஞ் செய். அவளோடு கூடியிருக்க விரும்பினல், அவளுக்குத் தாம்பூலம் ஆய்ந்து மடித்துக் கொடுத்து இல்லறத்தில் உகந்து வாழ். இதை நீ தேர்ந்தறிவாயாக. (34)

(வெண்பா)

பிறர்க்குதவி செய்தல் பெரும்புண் ணியமாம்
தறைக்குள் அதுசமு சாரம்—சிறக்கச்செய்
சேயிழைசேர்ந் தேயர்கும் சிற்றின்பம் சின்னீர
தாயினுங் கைவிடலா கா.

(உரை) பிறர்க்கு உபகாரம் புரிதலே பெரும் புண்ணியமாகும். இந்தப் பூலோகத்தில் அது சமுசாரம் சரியாய்ச் செய்யக்கூடிய கற்புடைய மங்கையின் சேர்க்கையாலேயே கைகூடும். ஆகையால், சிற்றின்பம் முதலில் அற்பசுகந் தருவதாலும் அதை நீ கைவிடக் கூடாது. (35)

(வெண்பா)

எதுசெய்வீர் பண்டிதர்காள் இங்குளமா தங்கப்
புதுநிதம்பங் கோருவிரா பூமேல்—விதுதவழ்மா
தங்க நிதம்பம் தனைக்கோரு வீராநீர்
இங்கெனக்குச் சொல்வீர் இசைந்து.

(உரை) ஏ, பண்டிதர்காள்! உலகில் நீவிர் நாட்டிலுள்ள மாது அங்க நிதம்பத்தை இச்சிப்பீரா? சந்திரன் தவழும் மாதங்க (மலை) நிதம்பத்தை (இடத்தை) இச்சிப்பீரா? எது செய்வீர்கள்? எனக்கு விடை கூறுங்கள்! (36)

(வி - ரை) மாதங்கம்=மாது+அங்கம்; மலை.
நிதம்பம்=மலையிடம்
நிதம்பம்=தொடைக்கும் இடைக்கும் நடுவிடம்.

(வெண்பா)

தத்துவந்தேர் ஞானந் தமக்கில்லை யாருமேல்
நித்தியமும் மாதர் நிதம்பமே—முத்தியென்று
கொள்ளச் சரியாகும் கூறுசமு சாரத்தில்
கொள்ளத் தகுமிரண்டு கூறு.

(உரை) சமுசாரத்தி லிருந்தும் உண்மை யாராய்ச்சி ஒன்று, மாதர் நிதம்ப இச்சை ஒன்று. இவ் விரண்டில் முன்னைய தில்லையேல் பின்னையதே பெரும்பற்றாக் கொள்ளல் சரியாகும். கஷ்ட

மென்று கூறும் சமுசாரத்தில் இந்த இரண்டு விதங்களும் கொள்ளத் தக்கவைகளாகும். (37)

(வெண்பா)

குளித்தால் கங்கை குளிக்க சுகத்திற்
களித்தால் மடமங்கை காதல்—அளிக்கவிருந்
தன்னவ ளோடுசமு சாரத்தில் யோக்கியமாய்
மன்னி யிருக்க மகிழ்ந்து.

(உரை) துறவியாய்ப் பாவ நீக்கவேண்டிக் குளித்தால் கங்கையிற் குளி. சமுசார சுகானுபவம் வேண்டினால் உண்மைக் காதலையளிக்கும் உத்தமியோடு கூடி ஒருமுத்தமீ யென்று நாடி யோக்கியமாய்ப் பொருந்தி யிருக்கக்கடவாய். (38)

(வெண்பா)

மார்பின் பளுவால் வணங்குமிடை மங்கையரைச்
சேர்ந்திருந்து வாழ்வதொன்று சோரமற்—சேர்வரிய
காட்டகத்தில் வாழ்வதொன்று காதலுடன் ஏதேனும்
வீட்டகத்தில் இச்சைவைத்து வேண்டு.

(உரை) வீட்டகத்தில் (இல்லற வீட்டில்) இச்சை வைத்தவன் மார்பின் பளுவால் வணங்கு மிடையுள்ள மங்கையரைச் சேர்ந்து வாழக்கடவன். வீட்டகத்தில் (மோக்ஷவீட்டில்) இச்சை வைத்தவன் துறந்து சென்று காட்டகத்தில் வாழக்கடவன். (39)

(வி - ரை) வீடு=இல்=இகசுக வாழ்க்கை வீடு.
வீடு=மோக்ஷம்=பரசுக வீடு.

(வெண்பா)

பற்றுற்ற போதுலகில் பாவையர்கள் நேசம்போல்
உற்ற சுகந்தருவ தொன்றில்லை—பற்றற்ற

பின்ன ரதுபோல் பெரும்பீழை காரணமாம்
என்ன பொருளும் இல.

(உரை) (வைராக்கியம் இன்மையால்,) ஆசை அதிகரித்த போது இவ் வுலகில் பெண்களோடு கூடி வாழும் வாழ்க்கையைப் போலப் பொருந்திய இன்பந் தரவல்லது வேறொரு பொருளும் இல்லை. (வைராக்கியம் உண்மையால்,) ஆசை யற்றபிறகு அப் பெண்ணாசையைப் போலப் பெருந் துன்பகாரணமாகிய பொருள்கள் எவையும் இல்லை. (40)

---

4-வது அதிகாரம்

## பெண்களின் வல்லமை

(வெண்பா)

தோற்பதுமை போலுந் துடியிடையைக் கண்டக்கால்
நாற்சதுரப் பாவுணர்ந்த நாவலனும்—ஏற்புடைய
தேன்மொழியே! மீன்விழியே! சீதேவி யேயென்று
தான்துதிப்பான் பெண்மயக்கத் தால்.

(உரை) தோல்பொம்மை போன்ற பெண்ணொருத்தியைக் கண்ட கவிஞனாகிய பண்டிதனும் 'எனக்கு உகந்த தேன்மொழிப் பாவையே! மீன்விழிப் பூவையே! சீதேவியே! மாதேவியே!' என்று துதிப்பான் என்றால், பெண்மயக்கத்தின் வல்லமையே வல்லமை! (41)

(வெண்பா)

கண்டால் மயக்கும் கருத்தில் உறநினைத்துக்
கொண்டால் வருத்துமுற்றுக் கூடினால்—அண்டாத
சோகமுண் டாக்கும் துடியிடைமெய் யன்னவளைப்
போகமுண் டாக்கு மெனல்பொய்.

(உரை) உடுக்கை இடையுடைய மங்கையின் மேனி: கண்டால் மயக்கும்; மனத்திற் பொருந்த நினைத்துக்கொண்டால் வருத்தும்; தொட்டுக் கூடினுல் பெருஞ் சோக முண்டாக்கும். ஆகையால், அப்படிப்பட்டவளை நாம் சுகம் கொடுப்பவள் என்பதெல்லாம் சுத்தப் பொய். (42)

(வெண்பா)

கண்ணுக் கெதிரிலிருக் கின்றமட்டும் காரிகைதான்
எண்ணற் கரியவின்பம் ஈயுமால்—கண்ணுக்குத்
தோன்ருத போதுவிடம் தோய்ந்ததுபோ லேதுன்பம்
தான்றருவாள் கூட்டுறவைத் தள்.

(உரை) கண்ணுக் கெதிரி லிருக்கின்றவரையிலுமே சுந்தரி அளவற்ற இன்பத்தைத் தருவாள். கண்ணுக்கு மறைவாயிருந்தால் விஷம் பாய்ந்ததுபோலத் துன்பத்தைக் கொடுப்பாள். அப்பேர்ப்பட்டவளுடைய உறவைத் தள். (43)

(வெண்பா)

பெண்ணன்றி வேறு பெரிய விடமமுதம்
மண்ணுலகி லில்லை மனமொத்து—நண்ணுகின்ற
உள்ளன்பி லாதாளே ஓங்குவிட மாரமுதம்
உள்ளன் புடையாளென் றோர்.

(உரை) பெண்ணே பெரு விடமாம்; பெண்ணே பேரமுதமாம். அவள் அன்றி வேறு விடமும் இல்லை; அமுதமுங் கிடையாது. கணவனோடு பொருந்தும் உள்ளன்பிலாதவளே உயிரை வாங்க ஓங்கும் விடமாம்; உள்ளன்புடையவளே பொருந்திய அமுதமென்று தெரிந்துகொள். (44)

(வெண்பா)

வஞ்சனைக்குக் கொள்கலனும் மாநரக ஊர்வழியாம்
எஞ்சா அமுத மெனும்விடமாம்— அஞ்சா
மனம்படைத்த மாதரெனும் மாயயந்தி ரங்கள்
தினம்படைத்தான் என்பிரமன் தேர்ந்து.

(உரை) வஞ்சனையை யிட்டுவைக்கும் பாத்திரம்; நரக நகரத்திற்குச் செல்லும் வழி; குறைவில்லாத அமுதமென்று பேரிட்டழைக்கும் விஷம். ஆகையால், அஞ்சா நெஞ்சுடையவர்களாகிய மாதரென்னும் மாய யந்திரங்களைப் பிரமன் கை தேர்ந்து, விடாமல் என் படைத்தானோ தெரியாது. (45)

(வெண்பா)

விவேக மெனும்புருஷன் மெய்யுணர்ந்துங் கெட்ட
விவேகியாய் மாதுமெய்யை வேண்டித்—துவேஷமின்றித்
தாமரைபொன் சந்திரனோர் தையலின்கண் மேனிமுகம்
ஆமெனத்தான் மோசம்போ வான்.

(உரை) விவேகம் என்னும் ஒருவன் தத்துவந் தேர்ந்தோனாயினும் மாதர்களைக் கண்டளவிற் கெட்டு, அவிவேகியாய் அவர்களை விரும்பிக் கொஞ்சமேனுந் துவேஷமின்றிப் புலவர் புகழ்தலை நம்பித் தையலின் கண் மேனி முகம் முறையே தாமரை பொன் சந்திரனும் என்று மோசம் போகின்றான். (இது வியப்பு என்றபடி.)

(வி-ரை) தாமரை-கண்; பொன்-மேனி; சந்திரன்-முகம்; நிரனிறைப் பொருள்கோள். (46)

(வெண்பா)

வண்டுகள் வேலையின்றி வாரிசத்தின் செந்நிறத்தைக்
கண்டுழலு மாறுபோற் காமுகர்கள்—பெண்டுகளின்
கட்கடையின் நோக்கமொயில் கண்டவைக ளின்மயங்கிக்
கெட்டுத் தவிப்பார் கிடந்து.

(உரை) வண்டுகள் தமக்கு வேறு வேலை யின்றித் தாமரை மலரின் செந்நிறத்தைக் கண்டு அலைந்து திரிகிறபடி, காமம் பிடித்த ஆண்மக்கள், பெண்மக்களுடைய கடைக்கட் பார்வை ஒயில் முத லியவைகள் அவர்களுக் கியற்கையென் றுணராமல், அவைகள், தம்மைக் குறித்தனவென் றெண்ணி மதிமோசம் போய், அவர்க ளின் மயக்கத்திற் கிடந்து, வேறு வேலை யின்றிக் கேடுகெட்டுத் தவிப்பார்கள். (47)

(வெண்பா)

வயதில் முழுமதிபோல் வாய்ந்துமுது மைக்கண்
இயலுநுங்கு சூர்பனங்காய் என்னப்—பயிலுமுகங்
கொண்டமங்கை சேர்க்கை கொடிது கொடிதந்தோ
தண்டாத் துயரந் தரும்.

(உரை) இளமையிற் பூரணச் சந்திரன்போல் அமைந்து முது மையில் நுங்கு சூர்ந்த பனங்காய்போல் கண் குழிந்து ஆழ்ந்த முகங் கொள்ளும் பெண்களின் சேர்க்கை பெரிதும் துயரந் தருவதால் மிகவுங் கொடிது. (48)

(வெண்பா)

பெண்டுக ளென்கின்ற போரற்றில் மூழ்கினுற்
கொண்டுசெமு சாரக் குரைகடலிற்—றண்டாமல்
தள்ளியுனை மாய்த்துவிடும் சாக்கிரதை யாயதைநீ
எள்ளிவிட்டு நீங்கி இரு.

(உரை) பெண்மக்கள் என்கின்ற பெரிய நதியிற் குளித்தால், அது உன்னை அடித்துக்கொண்டு போய், சமுசார சாகரத்தில் தவறாமல் தள்ளிக் கொன்றுவிடும். ஆகையால், அதி சாக்கிரதையாய் அதை நீ இகழ்ந்துவிட்டு அப்பாலே இரு. (49)

(வெண்பா)

ஒருவ னிடத்தில் ஒருவாறு பேசி
ஒருவ னிடத்திற்கண் ஓட்டி—ஒருவன்
இடத்தில் மனஞ்செலுத்தும் ஏந்திழைமார் அன்பு
படைக்க ஒருவனிலை பார்.

(உரை) ஒருவனிடத்தில் ஒருவிதமாய்ப் பேசுவார்கள்; ஒருவனிடத்தில் பார்வையைச் செலுத்துவார்கள்; ஒருவனிடத்தில் மனம் வைத்திருப்பார்கள். ஆகையால், மாதர் உண்மை யன்பு வைத்திருப்பவன் ஒருவனும் இல்லை. இதை நீ எண்ணிப் பார். (50)

(வெண்பா)

கண்களெனும்விடத்தைக் காட்டி யுனையாட்டும்
பெண்களெனும் பாம்பைப் பிரிந்தோடு—மண்வளையில்
மற்றையராத் தீண்டின் மருந்துண்டு மங்கையரா
உற்றவராத் தீண்டினில்லை ஒன்று.

(உரை) கண்களென்னும் விஷத்தைக் காட்டி உன்னை யாட்டுவிக்கும் பெண்களென்னும் பாம்புகளை விட்டு அப்பாலோடிப் போ! ஏனென்றால், புற்றில் வாழும் மற்றைப் பாம்பு கடித்தால் மந்திரவாதிகளிடத்தில் மாற்று மருந்துண்டு. மங்கையராகப் பொருந்தியுள்ள பாம்புகள் கடித்தால் அதை மாற்ற யாதொரு மருந்துங் கிடையாது.

(வி - ரை) புற்றுப்பாம்பை நீ பிடித்து ஆட்டுகிறாய்; பெண்களென்னும் பாம்பு உன்னைப் பிடித்து ஆட்டுகின்றன. (51)

(வெண்பா)

குடும்பக் கடலிற் குளிக்குமாண் மக்கள்
நெடும்பெரிய மீன்கள் நிசமாய்த்—துடியிடையார்
ஆந்தூண்டி லின்கண் அழகா மிரையைநச்சிச்
சாந்திறத்தா லாமெனநீ சாற்று.

(உரை) சமுசார சாகரத்தில் மூழ்கி வாழும் ஆண்மக்கள், உடுக்கையிடை மாதர் என்னுந் தூண்டிலில் அவர் அழகென்னும் இரையை விரும்பிச் சென்று, அதனில் அகப்பட்டுச் சாவதால், பெரிய மீன்களுக்குச் சமானமா யிருக்கிறார்கள் என்று நீ நிச்சயமாய்ச் சொல்.

(வி - ரை) சமுசாரத்தில் ஆண்மக்களாம் மீன்கள் பெண்களென்னுந் தூண்டிலுக்குத் தப்பிப் பிழைக்க வழிதேட வேண்டும். (52)

(வெண்பா)

பெண்களுடம் பென்னும் பெருங்காட்டில் மார்பென்னுங்
கண்ணகன்ற மேடு கலந்திருக்கும்—உண்ணிலவி
மன்மதனாங் கள்ளன் மகிழ்ந்திருக்கின் றான்மனமே!
நின்னைவலிப் பான்போகேல் நீ.

(உரை) பெண்களுடைய உடம்பாகிய காட்டில் அவர்கள் மார்பாகிய பெருமேடு செறிந்திருக்கின்றது. அதற்குள் மறைந்து மன்மதனாங் கள்ளன் மகிழ்ந்திருக்கின்றான். ஓ மனமே! நீ அங்கே போனால் உன்னை யவன் இழுத்துக்கொண்டு போய்விடுவான். ஆகையால், நீ அங்குப் போகாதே. (53)

(வெண்பா)

*உண்மையராத் தீண்டின் ஒருதீங்கும் இல்லைகருங்*
*கண்மை யணிந்துவளர் காரிகையார்—பெண்மைதிகழ்*
*பாம்பு கடிக்கின் பலதீங்கும் உண்டாகும்*
*ஓம்புவா ரில்லை உனை.*

(உரை) உண்மையாகவே உன்னைப் பாம்பு கடித்தாலும் மணி மந்திர ஔஷதங்களால் விஷந் தீரும்; அதனால் ஒரு தீங்கும் இல்லை. கருமையாகிய கண் மை தீட்டி மிகுந்த அழகுடைய பெண்களென்னும் பாம்பு கடிக்கின் பல தீங்கும் உண்டாகும். உன்னைக் காப்பார் ஒருவரும் இல்லை. (54)

(வெண்பா)

*பஞ்சேந் திரியங்கள் பற்பலவா றென்னையிந்த*
*நஞ்சே யனையவெழில் நங்கையின்பத்—தஞ்சாமல்*
*வீழ்த்தி வருத்தும் விதமுணர்ந்தேன் என்னையவை*
*தாழ்த்துஞ்சூ தேசூது தாம்.*

(உரை) மெய், வாய், கண், மூக்கு, செவி யென்னும் ஐம் பொறிகளும் பலவிதமாய் என்னை யிந்த விஷம் போன்ற அழகுடைய மங்கை யின்பத்தில் சற்றேனும் அஞ்சாமல் தள்ளி வருத்துந் தன்மையை உணர்ந்தேன். என்னை யவைகள் வாழவைப்பது போல் தாழவைக்கும் தந்திரமே தந்திரம்! (அதை நான் இப்போதே கண்டுகொண்டேன்.) (55)

(வெண்பா)

*மணிமந்தி ரௌஷதத்தில் மாறுப்பெண் மோகம்*
*தணியா மயக்கந் தருமே—பிணிபோலக்*
*கால்கைகள் சோரவிரு கண்சுழலச் சித்தத்தில்*
*மால்பெருக்கும் இல்லையொரு மாற்று.*

(உரை) மணி மந்திரம் ஔஷதம் என்னும் மும்மை வழியா லும் தீராத பெண் ஆசை குறையாத மயக்கத்தைக் கொடுக்கும்; கைகால்கள் சோர்வடையக் கண்களைச் சுழற்றும். மனமயக்கை வளர்க்கும். இதற்கு மாற்றில்லை. (ஆகையால், நான் என்ன செய் வேன்?) (56)

(வெண்பா)

பிறவிக் குருடன் பெருங்குஷ்ட ரோகி
உறவுக்குந் தன்மனம் ஒத்துப்—பெறுவாள்
பணமதனால் வேசையின் பாழுறவைச் சான்றோர்
பிணமுயக்க மென்பார் பிரித்து.

(உரை) பிறவிக்குருடன் பெரிய குஷ்டரோகி முதலியோர்க ளுடைய உறவுக்குஞ் சம்மதப்பட்டுப் பணம் பெறும் வேசையின் பாழான உறவு கீழானது; பிணத்தோடு சேர்வதுபோ லாகும் என்று சான்றோர் அதைக் குலமகள் உறவினின்று வேறு பிரித் துக் கூறுவார்கள். (ஆகையால், புத்திமான் விலைமாதரைக் கண் ணாலே பார்க்கவுங் கூசுவான்.) (57)

(வெண்பா)

மதன நெருப்பில் வடிவாஞ் சமிதை
புதன முடன்விலைப் பாவை—விதம்விதமாய்
இட்டெரிக்கின் றாளதிற்றம் யௌவனம்பொன் னாமிழுதை
விட்டெரிக்கின் றார்கள் விடர்.

(உரை) மதனுக்கினி மயமாகிய விலைமாது தன் அழகென் னும் சமிதையை அந்த அக்கினியில் பத்திரமா யிட்டுப் பலவித மாய் எரிக்கின்றாள்; அதில் விடபுருஷர் (காமுகர்) தமது இளமை பொன் என்னும் நெய்யை விட்டு வளர்க்கின்றார்கள். (58)

(வெண்பா)

குலஹீனன் வஞ்சகன் குண்டன் வெறியன்
உலகில் எவனும் உயர்ந்தோன்—கலகவிழி
வேசைக்கா வானதனால் மேற்குலத்தோன் சேர்ந்தவள்
ஆசைக்கா ளாகான் அழிந்து.

(உரை) தாழ்ந்த குலத்தோன், சூதன், கலகப்பிரியன், குடி வெறியன், இன்னும் உலகில் தாழ்ந்தோன் எவனும், கலகக் கண்ணை யுடைய விலைமகட்கு உயர்குலத்தோ னவான். ஆகையால், உயர் குலத்தோன் அவளைச் சேர்ந்து மானமழிந்து அவளுடைய ஆசைக்கு ஆளாகான். (59)

(வெண்பா)

வாக்கில் அமுதாம் மனத்தில் விஷமிருந்து
தேக்குமாம் வேசையர்க்குத் தேர்ந்திதனைப்—போக்கிலிகள்
ஆகும் விடர்கள் அவரிதழ்த்தேன் உண்டுரத்தைச்
சோகமுடன் குத்துவார் தோய்ந்து.

(உரை) வேசையர்க்கு வாக்கில் அமுத மிருக்குமாம்; மனத்தில் விஷமிருந்து தேக்குமாம். அதை யறிந்த போக்கிலிகளாகிய காமுகர்கள் அவர்களுடைய உதட்டில் ஊறும் தேனை உண்டு, மார்பை மயக்கத்தோடு கூடிப் பிசைந்து குத்துவார்கள். (60)

---

## 5-வது அதிகாரம்

# போலித் துறவு

(வெண்பா)

காதளவா நீண்டவிழி கட்டழகி ஞேடிளமை
ஊதி யகன்மார் புடையமங்கை—மீதெவனிங்
கிச்சைவையான் அன்னுன் இகபர சாதனங்கள்
நிச்சயமாய்ப் பெற்றுய்வான் நேர்ந்து.

(உரை) காதளவு நீண்ட கண்கள், மிகுந்த அழகு, இளம் பிராயம், வீங்கி யகன்ற மார்பு இவைகளையுடைய மங்கைப் பருவத்துப் பெண்ணைக் கண்டு அவள்மீது எவன் ஆசைவைத்து வாடானே, அவன் இகலோக பரலோக சுகசாதனங்கள் வரப்பெறும் புண்ணியவானுய்க் கடைத்தேறுவான். (61)

(வெண்பா)

ஒயிலாியுன் கண்பார்வை ஓட்டியெமை வாட்ட
இயலாதுன் ஞல்நங்காய் இன்னும்—மயலாலே
வாடோம் முதுமையுற்ரேம் வன்காட் டகஞ்சேர்வோம்
நீடோம்பே ராசை நிலைத்து.

(உரை) ஏ, பெண்மையிற் சிறந்த மாதே! உன் கண்பார்வையை அழகாய் எங்கள்மேல் செலுத்தி வருத்த இன்னும் உன்னுல் முடியாது. ஏனென்ருல், நாங்கள் பெண் மயலாலே வாடமாட்டோம்; வயது முதிர்ந்து மூத்தோம்; சுடுங்காட்டில் தவஞ்செய்யச் செல்லுவோம். இனிப் பேராசையில் நிலைத்து நிற்கமாட்டோம். (62)

(வெண்பா)

பாங்கா! இப் பைங்தொடிதன் பானற்கண் பார்வையினால்
ஈங்கெம்மை வாட்டுமிது வென்னேயோ—நாங்கள்
இவள்சாய லுக்குருகோம் இன்பத்தை நீத்தோம்
இவளெமையேன் பார்ப்ப தினி.

(உரை) "பாங்கனே! இந்தப் பைங்தொடி மான் மருண்டு தனது நீலக்கண் பார்வையால் இப்போது எங்களை வருத்துங் காரணம் என்ன? நாங்கள் இவள் இளமயிற் சாயலுக்கு உருகமாட்டோம்; சிற்றின்பம் வெற்றின்ப மென்று வெறுத்துவிட்டோம். இன்னும் இவளேனோ எங்களைப் பார்த்தபடி யிருக்கவேண்டும்."

(வெண்பா)

பூங்குயிலும் மன்மதனும் பூண்டெம்மை வாட்டுகின்ற
தீங்குகள்தாம் என்ன இனிச் செய்யுமெமை—நாங்கள்
மலைவில்லிக் கன்புசெய்வோம் மன்மதா! நின்காசு
செலவில்லை அப்பாலே செல்.

(உரை) "அழகான குயிலும் மன்மதனுங் கூடி வருத்துவதனால் நேரிடுகின்ற கெடுதிகள் எம்மை இனி என்ன செய்யும்? (ஒன்றுஞ்செய்யா.) நாங்கள் முன்போலில்லை. குன்றவில்லியாகிய சிவனடியா ராகிவிட்டோம். ஏ, மன்மதா! நின் காசு இனி எம்பாற் செல்லாது. அடா அப்பாலே போ!" என்றார் ஒரு துறவி. (64)

(வெண்பா)

அன்பாய் மனங்கலந்த ஆண்பெண் அகன்றிருந்தும்
இன்பாய் அருகில் இருப்பவராம்—வன்பாய்
மனம்பிரிந்த மக்கள் மருவியிருந் தாலும்
இனம்பிரிந்தா ராவர் ரிழிந்து.

(உரை) அன்பின் உறுதியால் மனங் கலந்த ஆண்பெண்கள் தூர இருந்தாலும் சந்தோஷமாய் அருகிலிருந்து வாழ்பவர்களுக்குச் சமானமாவார்கள்; உள்ளன்பில்லாமல் மனம் வேறுபட்ட ஆணும் பெண்ணும் கூடியிருந்தாலும் அக் கூட்டத்திற் பிரிந்து மனமழிந்து தாழ்ந்து வாழ்பவர்களுக்குச் சமான மாவார்கள். (65)

(வெண்பா)

இனியென் தலைவி யிருந்தென் இறந்தென்
இனிநான் துறவி யிதனால்—இனிநானும்
வீட்டிலிருந் தாலென் வெளியிலிருந் தென்னென்றோர்
பாட்டையிற்போ வோன்சொன்னான் பார்த்து.

(உரை) "இனி என் காதலி யிருந்தென்ன? இறந்தென்ன? இனி நான் முன்போலின்றித் துறவியானேன். ஆகையால், இனி நான் வீட்டுக்குள் இருந்தாலென்ன? வெளியிலிருந்தா லென்ன?" என்று ஒரு பாட்டைசாரி (வழிப்போக்கன்) யோசித்துப் பார்த்துச் சொன்னான். (அதுபோலவே அவன் தன் வீட்டுக்குப் போகாமல் இருந்தான்.) (66)

(வெண்பா)

பெண்ணாசையிற் றீர்ந்து பெருங்கருணை யன்பறிவோ
டுண்ணாடிக் கூடி யொழுகுங்கள்—பெண்ணாசை
போக்காதாம் உம்மைப் பெருநரக வேதனையிற்
றீர்க்காது பாவச் செயிர்.

(உரை) பெண்ணாசையை விட்டுப் பெரிய ஜீவகாருணியம் அன்பு ஞானம் என்னும் முப்பெருஞ் சற்குணப் பெண்களோடு கூடி வாழுங்கள். (பால் வீடாகிய மார்பையும் இடையையும் உடைய) பெண்ணாசை உங்களை நரகவேதனையினின்றும் நீக்குமா, பாவங்களாகிய குற்றங்களுக்குப் பரிகாரமாமா? (ஆகாது.)

(வி - ரை) கருணை, அன்பு, ஞானம் என்பன முறையே தாய், தங்கை, மனைவி போல்வனவாம். (67)

(வெண்பா)

எவன்யோக நிஷ்டையில் ஈடுபட்ட ஞானி
அவன்பெண் முகமார்பில் ஆசை—உவந்துவையான்
நிஷ்டையி லேயே நிலைத்திருந்து பித்தனென
இஷ்டம்போல் வாழ்வான் இருந்து.

(உரை) எவன் யோகசமாதி கைகூடி உயர்ந்த ஞானியாயிருக்கின்றானோ, அவன் பெண்களின் முகம், மார்பு முதலியவைகளில் மயங்கி ஆசை வைக்கமாட்டான். நிஷ்டையிலேயே நிலையாயிருந்து பித்தனைப்போலத் தன் இஷ்டப்படி இருந்து வாழ்நாளைக் கழிப்பான். (68)

(வெண்பா)

மன்மதன்றன் மாயத்தால் மாநிலமெல் லாமெனக்குத்
துன்புதரும் பெண்ணுருவாய்த் தோற்றியதால்—பின்பு
ஞானமெனு மைதீட்டி நான்பார்க்கின் றேன்பிரம [ய்ஞ்
ஊனமிலாச் சோதி உரு.

(உரை) மன்மத விகாரத்தால் இந்தப் பூலோகமெல்லாம் எனக்குத் *துன்பந் தரும் பெண்ணுருவாய்த் தோற்றியது. பிறகு நான் ஞானமை தீட்டிப் பார்க்கின்றபோது எங்கும் குறைவற்ற பரப்பிரமஜோதி சொரூபத்தைக் காண்கின்றேன். (69)

(வெண்பா)

பண்டிதனே யானாலும் பைந்தோடியார் தம்முருவைக்
கண்டுமயங் காதமட்டும் கௌரவமாய்—விண்டுநன்மை

* துன்பந் தரும் என்றது துறவு பூண்ட பிறகு.

தீது பகுத்தறியும் தீபனூ வான்மயங்கின்
ஓதவனுந் தீர்வான் உணர்வு.

(உரை) பண்டிதனுயினும் பாவையர் வடிவத்தைக் கண்டு மயங்காதிருக்கும்வரையில் பெருமையோடு நன்மை தீமை பகுத்தறியும் ஞானியாயிருப்பான்; அப்படி மயங்கினுல், யாவரும் புகழ்ந்தேத்தும் அவனும் அறிவில்லாதவ ைவான். (70)

(வெண்பா)

பண்டிதர்கள் பேச்சுப் பரமவே தாந்தந்தாம்
ஒண்டொடியார் மோகம் ஒழியார்கள்—கண்டுமொழித்
தொண்டையிதழ்க் காரிகையார் தோற்றந் தனையுலகிற்
கண்டவனும் அப்பாற்போ கான்.

(உரை) பண்டிதர்கள் பேச்சுமட்டும் பரமவேதாந்தமாக இருக்கும்; அவர்கள், பெண்ணுசையை ஒழியார்கள். இந்தப் பூலோகத்தில், கற்கண்டு போன்ற சொல்லையும் கோவைக்கனி போன்ற உதட்டையும் உடைய பெண்களைக் கண்டுவிட்டு யாரும் தூரத்திற் போய்விடமாட்டான். (சமீபத்திற் சேர முயலுவான் என்றபடி.)

(வெண்பா)

போலிவித்து வான்கள் புனையிழையார் நேசத்தைக்
கேலியாய் வீணே கிளத்துவார்—கோலியரு
மாதவஞ்செய் தாலுமிவர் வானுலகில் வாழரம்பை
மாதரையே சேர்வார் மதித்து.

(உரை) போலி வித்துவான்கள் "அலங்கார ஆபரணமணிந்த மாதர்நேசங் கூடாது" என்று அவர்களைப் பரிகாசஞ் செய்து வீண் பேச்சுப் பேசுவார்கள். (தவமே தகுதி யென்பார்கள்.) தவம் பூண்டு செய்தாலும் அவர்கள் அதன் பலனுகத் தேவலோக

மாதரைமய மதுத்துச் சேர்வார்கள். (இதுவே விதி. இதற் கென் செய்வார்கள்?) (72)

(வெண்பா)

ஆனை மதத்தை அடக்கி அதற்குமேல்
ஊனமில்சிங் கத்தை ஒடுக்குவார்—மானவர்கள்
மன்மதனார் வல்லமையை மாற்றுவா ரில்லையென்பேன்
என்னவிடை சொல்வார் இதற்கு.

(உரை) மானவர்கள் ஆனை மதத்தையும் அடக்குவார்கள்; அதற்குமேல் சிங்கத்தையும் ஒடுக்குவார்கள். மன்மதன் வல்லமையை மாற்றுகிறவர்கள் ஒருவரும் இல்லையென்று சொல்வேன். இதற்கு யார் என்ன விடை சொல்வார்களோ தெரியவில்லை. (73)

(வெண்பா)

எதுவரையில் ஆடவன்மே லேந்திழைகண் பாயா
ததுவரையில் நல்லவன் ஆவான்—அதுவரையில்
ஐம்புலனை வெல்லுவான் ஆன்றோர்க் கடங்குவான்
பம்பியவஞ் செய்யான் பரிந்து.

(உரை) எதுவரையில் ஆண்மகன்மேல் பெண்பிள்ளையின் விழியம்பு பாயாதோ, அதுவரையில் அவன் நல்லவனா யிருப்பான்; ஐம்புலனை அடக்கி ஆளுவான்; பெரியோர்க்கு அடங்கி நடப்பான்; நெருங்கிச் சென்று தகாத காரியங்களை விரும்பிச் செய்யமாட்டான். (74)

(வெண்பா)

மனத்தி லொருகருமம் மைவிழியார் செய்ய
நினைத்தால் அதனை நிறுத்த—அனைத்துலகும்
செய்து திகழ்பிரம தேவனுக்கு மாகாது
மெய்யிதுமெய் மூக்காலு மெய்,

(உரை) மை தீட்டிய நெடுங்கண் மாதர்கள் ஒரு காரியத்தைச் செய்யவேண்டு மென்று தீர்மானித்தால், அதைத் தடுக்கப் பிரமதேவனாலு முடியாது; இது முக்காலும் உண்மையாம். (75)

(வெண்பா)

மதன நெருப்புடலில் மன்னு திருந்தால்
விதனமின்றி யாரும் வியன்பண்—டிதனுவர்ன்
அற்புதவா னுவான் அருங்குலவா னுவானோர்
சற்குணவா னுவான் தழைத்து.

(உரை) மன்மத விகார நெருப்பு ஒருவனுடைய உடம்பிற் பற்று திருந்தால், அவன் எவனானாலும் பெரிய பண்டிதன் ஆவான்; மகத்துவ முடையவனாவான்; உயர் குடியிற் பிறந்தவனாவான்; குடும்பம் வளர்ந்து நற்குணம் உடையவன் ஆவான். (76)

(வெண்பா)

நாரியர்வேற் கண்கள் நரககபா டந்திறக்கும்
பேரியலுங் கோல்போற் பிறங்குவதால்— நாரியர்வாழ்
வோங்குசமு சார ஒலிகடலி லாழ்ந்தவர்க்குள்
தீங்கின்றி வாழ்ந்தவனார் செப்பு.

(உரை) பெண்களின் வேற்கண்கள் நரகவாயிற் கதவைத் திறக்கும் பெரிய கோல்போல் விளங்குவதனால், அவர்களுடைய வாழ்வாகிய சமுசார சாகரத்தில் வீழ்ந்து ஆழ்ந்த ஆண்மக்களில் தீங்கில்லாமல் வாழ்ந்தவன் யாவன்? நீ சொல்வாயாக. (77)

(வெண்பா)

உணங்கி முடமாய் ஒருகண் குருடாய்
அணங்கி னலிந்தகல்வா யாகி—வணங்கினவால்
அற்றநாய் பெண்ணாய்பின் அன்பாயோ டுங்காமற்
குற்றவன்மை யாரறிவார் ஓர்ந்து.

(உரை) சரீரம் மெலிந்து, கால் ஊனமாய், ஒருகண் தெரியாமல், நோயால் வாடி, திறந்த வாயுடையதாய், வளைந்த வால் அறுந்த ஆண் நாய், பெண்ணையைக் கண்டவுடன் அதன் பின் அன்பாய் ஓடும். ஆகையால், மன்மதன் வல்லமையை யாரால் ஆராய்ந்து அறிவதற்கு ஆகும்? (78)

(வெண்பா)

மன்மதன்வென் றிக்கொடியாம் மங்கையரை நிந்தித்துத்
துன்மதிசேர் மாந்தர் துறப்பார்கள்— அன்னவரை
மன்மதன்கோ பித்து ம்ழித்துமயிர் நீட்டிவிடும்
ஜென்மதண்டஞ் செய்வான் தெரிந்து.

(உரை) மன்மதனுடைய வெற்றிக்கொடி போன்ற மாதர்களைத் துஷ்டபுத்தியுள்ள ஆண்மக்களே துறந்துவிடுவார்கள். அப்படிச் செய்யும் அவர்களை மன்மதன் கோபித்து, அவர்களுடைய தலை மயிரை மழித்து மொட்டைத் தம்பிரான்களாக்கியும், அதை வளர்த்து நீட்டிச் சடைத் தம்பிரான்களாக்கியும் ஜன்மதண்டனை தெரிந்து செய்வான். (79)

(கலிவெண்பா)

பராசனுங் கோசிகனும் பைந்தொடியார் தம்மால்
தராதலத்திற் பீடழிந்த தன்மை— அராவணிந்த
ஈசன் பெருமையிழந் திடழிந்த தன்மையிவை
தேசமெங்கு நன்றாய்த் தெரிந்தவைதாம்—வாசத்
தயிர்பானெய் யோடன்னம் தக்கபடி யுண்போன்
செயிர்சேர் புலனடக்கஞ் செய்து—மயலறுத்தல்
ஆகாது குன்றம் அலைமேல் மிதக்குதலும்
ஆகாத வாறென் றறி.

(உரை) பராசர முனிவனும் விசுவாமித்திரனும் முறையே மச்சகந்தி மேனகை என்னும் மாதரால் இவ் வுலகில் மானமழிந்த தன்மையும், அரவாபரணனாகிய சிவன் தாருகாவனத்து முனிவர் மனைவியரால் பெருமையிழந்த மாண்பும் இந்தப் பூலோகமெங்கு நன்றாய்த் தெரிந்த விஷயங்கள்தாம். வாசனையான கட்டித் தயிர் பால் நெய்யோடு அன்னத்தைத் தக்கபடி உண்ணும் ஒருவன், குற்றமுள்ள ஐம்புலனடக்கிப் பெண்மயக்கத்தைப் போக்குதல் மலை, அலையில் மிதக்குதல் ஆகாது போலவே, ஆகாத காரியமாம். (80)

---

6-வது அதிகாரம்

## இளவேனிற் காலச் சிறப்பு

(வெண்பா)

இளவேனில் வந்தவுடன் எல்லாம் அழகாய்க்
களகளவென் றேங்குமந்தக் காற்று—குளுகுளுவென்
றின்பமாய் வீசும் இளங்குயில்மாக் கோடுகளில்
இன்பமாய்க் கூவும் இருந்து.

(உரை) இளவேனிற் காலம் வந்தவுடன் எங்கெங்கும் சோலைகளும் பிறவும் அழகாய்த் தளிர்த்துக் களகளவென்று விளங்கும். மந்தமாருதமாகிய தென்றற் காற்று, குளுகுளு வென்று இன்பமாய் வீசும். இளங்குயில்கள் மாமரக் கிளைகளின்மேல் அழகாயிருந்து செவிக் கின்பமாய்க் கூவும். (81)

(வெண்பா)

மாவின் இளந்தளிரால் மந்த இள மாருதத்தால்
கூவு குயிலின் குரலாலே—மேவுமிள

வேனில் விரகரை வீட்டுமகா லத்திலமு
தேனும் விடமாம் இழிந்து.

(உரை) மாமரத்தின் கொழுந்திலைகளாலும், மெதுவாய்ச் சில்லென்று வீசும் தென்றற் காற்றாலும், கூவுகின்ற குயிலின் குரலாலும், இளவேனிற் காலமானது, காமுகரை வருத்தும். அகாலத்திற் கிடைத்த அமுதமும் தாழ்ந்த விஷமாய்விடும். (82)

(வெண்பா)

கூவு குயிற்குரலால் கோதகன்ற வெண்ணிலவால்
பாவு கொடிபடர்ந்த பந்தலால்—மேவிரவிற்
பாவனார் கூட்டுறவாற் பன்னுசுகந் துன்னுவார்
மாவேனி லிற்சிலரே வாய்ந்து.

(உரை) கூவுகின்ற குயிலின் குரலாலும், மாசற்ற வெண்ணிலவாலும், பரவிப்படர் கொடியின் பந்தலாலும், பாவாணரோடு சொன்னயம் பேசிக் கூடியிருத்தலாலும் இரவிற் பொருந்திய சுகானுபவஞ் செய்பவர்கள் வேனிற்காலத்தில் சிலரே யாவரர். (83)

(வெண்பா)

குயிற்பேடு மாமலரைக் கூறுமவி சென்று
வெயிற்கொதுங்கிப் பார்த்திருக்கும் வேனில்—இயற்கையினு
வாகை மலரை வழிப்போக்கன் மேல்வாரி
ஓகையொடு தென்றலிறைக் கும்.

(உரை) பெட்டைக் குயில் மாமலர்க் கொத்துக்களை யாக பலியென்று எண்ணி வெய்யிலுக் கொதுங்கிப் பார்த்திருக்கும். இது இளவேனிலின் இயற்கை விசேடம். தென்றற் காற்று வாகைமலரை வாரி வழிப்போக்கன்மேல் உல்லாசமாய் இறைக்கும்.

(வி - ரை) மாம்பூ யாகபலி யென்றால், மாந்தளிர் யாகாக்கினி. காமுகர்களுடைய விரகாக்கினியே யாகாக்கினி; அதில் இடும் ஆகுதியே மாமலர். (84)

(வெண்பா)

சக்களத்திக் காய்ச்சலால் தாங்கொண்ட கோபத்தை
மிக்க விளந்தென்றல் வீசுவதால்—மைக்குழலார்
மாற்றுவார் தங்கணவர் மன்னுமிடத் திற்செல்வார்
காற்றிற்கும் உண்டோர் கனம்.

(உரை) மாற்றாள்மேல் தாங்கொண்ட காய்ச்சலால், கணவன்மேல் கொண்ட கோபத்தைக் கருங்கூந்தல் மாதர், மிகவும் இனிய தென்றற்காற்று வீசுவதால், மாற்றித் தங்கணவர் தங்கியுள்ள இடத்திற்குச் செல்லுவார். இதனால் கண்ணுக்குத் தோன்றாத காற்றுக்கும் கோபமாற்றும் வல்லமை உண்டு என்பது புலப்படுகின்றது. (85)

(வெண்பா)

மாமரத்தீம் பூக்கள் மணம்வீசும் வண்டுகள்தாம்
காமாப்பூந் தேனைக் களித்துண்ணும்—பாமரருங்
காற்றின்ப நாடிப்பூங் காவனத்திற் சேர்ந்திருக்கத்
தோற்றுமிள வேனிற் சுகம்.

(உரை) மாமரத்தினுடைய தேனமர் மலர்கள் மணம் வீசும்; வண்டுகள் சோலைகளிலுள்ள மலர்களின் தேனை உண்டு களிக்கும்; மூடர்களுங் காற்றுச்சுகத்தை விரும்பிப் பூஞ்சோலையிற் சேர்ந்திருப்பார்கள். இப்படி இளவேனிற் சுகம் விளங்கியிருக்கும். (86)

## 7-வது அதிகாரம்

## முதுவேனிற் காலச் சிறப்பு

(வெண்பா)

புதுச்சந் தனமும் புனையிழையார் கூட்டும்
மதுச்சிந்து காவும் மதியும்—வெதுப்பையற
மாற்றுமிளந் தென்றலும் மல்லிகையும் மாளிகையுந்
தோற்றுமுது வேனிற் சுகம்.

(உரை) நறுமணங் கமழும் சந்தனமும், ஆபரணமணிந்த மங்கையரைக் கூடியிருத்தலும், தேன் சொரியும் பூஞ்சோலையும், சந்திரனும், வெதுவெதுப்பை மாற்றும் இளந்தென்றற் காற்றும், மல்லிகை மலரும், உப்பரிகையும் முதுவேனிலில் சுகந்தருவனவாம். (87)

(வெண்பா)

நல்லமணங் கொண்ட நறுமலரின் மாலிகையும்
சில்லெனுங்கால் வீசுஞ் சிவிறியும்—சொல்லரிய
வெண்ணிலவும் ஓதுமுது வேனிலின்கண் மங்கையரும்
புண்ணியர்க்கே எய்தும் பொருள்.

(உரை) நல்லமணம் வீசும் புதுப்பூமாலையும், சில்லென்று காற்று வீசும் விசிறியும், புகழ்தற்கரிய புது வெண்ணிலவும், மங்கைப் பருவத்துப் பெண்களும், உயர்வாகப் பேசும் முதுவேனிற் பருவத்தில், புண்ணியஞ்செய்தவர்களுக்கே கிடைக்கும் பொருள்களாம். (88)

(வெண்பா)

சுண்ணவெள்ளை தீற்றுச் சுவர்சூழ் உபரிகையும்
வெண்ணிலவும் சுந்தரஞ்சேர் மெல்லியலும்— நண்ணுமணப்

பொற்சுண்ணத் தூளும் பொருந்துமுது வேனிலின்கண்
நற்றவர்க்கென் செய்யு நலிவு.

(உரை) சுண்ணும்பு வெள்ளை பூசின சுவர்கள் சூழ்ந்த உப்பரிகையும், வெண்ணிலாவும், சுந்தரவதியான மங்கையும், வாசனை பொருந்திய பொற் சுண்ணப்பொடியும், முதுவேனிற் காலத்தில் நல்ல தவசிகளாகிய துறவிகளை வருத்தா. (இல்லறத்தாரையே வருத்தும் என்றபடி.) (89)

---

## 8-வது அதிகாரம்

## கார் காலச் சிறப்பு

(வெண்பா)

மல்லிகையின் பூமணக்கும் மன்மதற்கு வாழ்வுதரும்
சொல்லும் பயோதரங்கள் தோயுமிக—நல்ல
தெனினுங்கார் காலம் இலங்கிழையார் போல
கனிவாய்த் தராது களிப்பு.

(உரை) மல்லிகைப்பூ மணப்பதாலும், மன்மதற்கு வாழ்வைத் தருவதாலும், புகழ்ந்தோதும் (பால் வீடாகிய மார்பு) மேகங்கள் பொருந்தியிருப்பதாலும், கார்காலம் ஆபரணம் அணிந்த பெண்களைப் போன்றது; இன்பந்தருவது. ஆனாலும், அவர்களைப்போல அவ்வளவு மனங் கனிந்த மகிழ்ச்சி தராது. (90)

(வெண்பா)

மயிலகவும் காட்டுமலர் மல்லிகையின் வாசம்
பயிலும்புற் றீசல் பறக்கும்—வெயின்மூடி
மேகஞ் செறியுமிவை மெத்தக் களிப்பெவர்க்கும்
ஆகுங்கார் காலத் தமைப்பு.

(உரை) மயில்கள் ஆடும்; காட்டு மல்லிகை மலர் மணம் வீசும்; புற்றில் ஈசல் பறக்கும்; வெயிலை மேகம் மூடி மந்தாரமா யிருக்கும். இவைகள் யார்க்கும் இன்பந் தரும் கார் காலத்துப் பொருந்திய விசேடங்களாம். (91)

(வெண்பா)

மேகமயில் புற்றுகளின் மேற்காளான் மூன்றூனும்
சோகமுறு வார்விரகர் சொல்லுங்கால்—வேகமாய்
மேலோடி ஆடி விரிந்துகார் காலத்தில்
மாலாடச் செய்யுமவை வாய்ந்து.

(உரை) மேகம், மயில், புற்றின்மேற் பூத்த காளான் ஆகிய மூன்றூனும் விரகர்கள் சோகமுற்று வருந்துவார்கள். மேகம் அவர்கள், மேல் நோக்கும்போது கவிந்தோடியும்; மயில் அவர்கள், நடுவில் மலைப்பிரதேசங்களைப் பார்க்கும்போது ஆடியும்; காளான் அவர்கள், கீழே பூமியைக் கவனிக்கும்போது பூத்தும், கார் கதிற் பொருந்தி அவர்களுக்கு விரகவேதனையை உண்டாக்குகின்றன. (92)

(வெண்பா)

மின்ன லொருபால் மிகுபே ரிடியொருபால்
மன்னுசெந் தாழை மணமொருபால்—துன்னுமயில்
ஆட லொருபால் அமைந்தகார் காலத்தில்
கூடலையார் கொள்ளார் குறித்து.

(உரை) மின்னல்கள் ஒருபக்கம், மிகுந்த ஓசையுடைய பேரிடிகள் ஒருபக்கம், பொருந்திய மகிழம்பூ வாசனை ஒரு பக்கம், நெருங்கிய மயில்களின் ஆட்டம் ஒரு பக்கம், விளங்கியுள்ள

கார் காலத்தில் காதலர்களிற் கூடியிருப்பதை விரும்பாதவர்கள் யாவர்? (93)

(வெண்பா)

பேரிடி யோடு பெருமேகஞ் சூழ்ந்திருண்ட
கார்காலத் தூறல் கவிந்துமின்னல்—ஊருங்கால்
கூடியுள் ளார்மகிழ்வார் கூடாத காதலர்கள்
ஊடி யுளமழிவார் ஓய்ந்து.

(உரை) பேரிடிகளோடு பெருங் கருமேகஞ் செறிந்த கார் காலத் தூறல்மழை மின்னல்களில், கூடியுள்ள கணவன் மனைவியர் குதுகுலிப்பார்கள். கூடாதவர்கள் ஊடிப் பிரிந்திருந்து மனம் வாடி வருந்துவார்கள். (94)

(வெண்பா)

வாடை மழையால் வருந்துகின்ற பைந்தொடியார்
மேடையை விட்டிறங்கார் மெய்ந்நடுங்கி—ஆடவரைக்
கட்டித் தழுவுவார் கார்காலத் தன்னவரோ
டொட்டி யுறுவார் உவந்து.

(உரை) வாடைக் காற்று கொண்டுவரும் குளிர் மழையால் வருந்துகின்ற மாதர்கள் மாடியை விட்டுக் கீழிறங்காமல் உடல் நடுங்கிக் கா[illegible]வரைக் கட்டித் தழுவிக்கொண்டு, கார்காலத்தில் அவர்களோடு [illegible] தாஷமாய்ச் சேர்ந்து பிரியாமல் இருப்பார்கள். (95)

9-வது அதிகாரம்

## மழைக் காலச் சிறப்பு

(வெண்பா)

இரவிற் சுரத இளைப்பொழிய மங்கை
சாதமுடன் கொண்டுவந்து தந்த—இரதமுள்ள
தண்ணீரைக் *கர்க்கரிக்காய் தன்னொடுமா ரிக்காலத்
துண்பவனே தன்னியனென் றோது.

(உரை) இரவில் நுகர்ந்த சுரதத்தா லுண்டாகிய இளைப்பு நீங்கும்படி, மங்கை யொருத்தி மனமுவந்து கொண்டுவந்து தந்த உருசியுள்ள குளிர்நீரைக் கக்கரிக்காயுடன் (வெள்ளரிக்காயுடன்) மாரிக்காலத்தில் மகிழ்ந் துண்பவனே பாக்கியவானாவான். (96)

---

10-வது அதிகாரம்

## முன்பனிக் காலச் சிறப்பு

(வெண்பா)

முன்பனியில் ஆடவர்கள் மொய்குழலார் தம்மோடு
துன்பொழிய †மஞ்சிட்டித் தூசுகட்டி—இன்பமுடன்
குங்குமச் சாந்தணிந்து கூடி மகிழ்வார்கள்
அங்கமுறு தாம்பூலந் துய்த்து.

---

* கர்க்கரிக்காய்=என்பது கக்கரிக் காயென்றும், வெள்ளரிக் காயென்றும் வழங்குகிறது.

† மஞ்சிட்டி=ஒருவிதச் சாயவேர்.

(உரை) முன்பனியில் ஆண்மக்கள் நெருங்கிய கூந்தல் மாதரோடு துன்ப நீங்க மஞ்சிட்டிச் சாயந் தோய்த்த ஆடை யணிந்து, இன்பத்தோடு குங்குமச் சந்தனம் பூசித் தாம்பூலந் தின்று கூடிக் களிப்பார்கள். (97)

(வெண்பா)

மந்தார மாலிகையும் வாய்விரியு மொட்டுகளில்
வந்திருந்து தேனுண்ணும் வண்டுகளும்—நந்தாமற்
சேர்ந்திருக்கும் முன்பனியில் சேயிழையார் தம்மோடு
சேர்ந்திருப்போன் தேவனெனச் செப்பு.

(உரை) மந்தாரமலர் மாலையும், வாய் விரியத் தொடங்கும் அரும்புகளில் படிந்திருந்து தேனை உண்ணும் வண்டுகளும் கொடாமற் பொருந்தி யிருக்கும் முன்பனிக் காலத்தில், அழகான ஆபரணம் அணிந்த அரிவையரோடு கூடியிருப்பவன் மனிதனாயினும் தேவனுக்குச் சமானமாவான் என்று சொல். (98)

---

## 11-வது அதிகாரம்

## பின்பனிக் காலச் சிறப்பு

(வெண்பா)

பின்பனிக் காலத்தில் பெய்வளையார் மேல்வீசி
அன்புடன் முத்தந்தந் தாடையவிழ்த்—தன்னவர்தம்
மெய்யைக் குலுக்கி மிகவசைத்து நாயகர்போல்
கையைப் பிடித்தாட்டுங் காற்று.

(உரை) பின்பனிக் காலத்தில் காற்று, வளைய லணிந்த மாதர்கள்மேல் வீசி, அவர்களுக்குக் குளிர்ச்சியாய் முத்தங் கொடு

த்து, அவர்களுடைய ஆடையைத் தளர்த்தி, தேகத்தை அசைத்துக் குலுக்கி, அவர்களுடைய நாயகர்போல் கையைப் பிடித்து ஆட்டும்.

(99)

(வெண்பா)

காரிகையார் தம்மேல் கடுமை யுடன் மோதி
வேரிமலர்க் கண்கள் விழிக்காமல்—ஏரியலும்
கூந்தல் குலையவும் கூறை யவிழவும்
காந்துமாம் பின்பனியிற் காற்று.

(உரை) பின்பனிக் காற்று, பெண்கள்மேல் வேகமாய் மோதி, அவர்களுடைய தாமரைமலர்க் கண்களை விழிக்கவொட்டாமற் செய்து, கூந்தலைக் குலைத்து, ஆடையை அவிழ்த்து அலங்கோலஞ் செய்து கோபிக்கும்.

(100)

பர்த்ருஹரி சிங்கார சதகம் உரை

முற்றுப்பெற்றது.

---

FIRST EDITION] [1000 Coi

உ

பரமபதி துணை

பர்த்ருஹரி சிங்கார சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

பர்த்ருஹரி சிங்கார சதகத்தின்
செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

---

ஓம்

மஹா கணபதி துணை

# பர்த்ருஹரி நீதி சதகம்

தமிழ்ப் பண்டிதர்

ஸ்ரீமாந் ம. மாணிக்கவாசகம் பிள்ளை

அவர்கள் செய்யுள் வடிவமாக மொழிபெயர்த்த மூலமும்,

டையார் இயற்றிய தெளிபொருள் விளக்க உரையும்.

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலை,

87. தம்புசெட்டி வீதி, சென்னை.

1925

விலை அணா 3

பர்த்ருஹரி நீதி சதகத்தின்

# விஷய அட்டவணை



ரிப்பன் புஸ்தகசாலை, 87, தம்புசெட்டி வீதி, சென்னை

**ஸ்ரீ விவேகாநந்த விஜயம்:** *ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளின் திவ்விய சரித்திரமும், அவர் செய்த அற்புதமான பிரசங்கத் திரட்டும்: விலை ரூபா 1-12-0*

---

**ஸ்ரீ ராமகிருஷ்ண விஜயம்:** *ஸ்ரீ விவேகாநந்த ஸ்வாமிகளின் குருமூர்த்தியாகிய ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் திவ்விய சரித்திரமும், கதாமிர்தமும், உபதேச வாக்கியங்களும்: ரூபா 1-4-0*

---

**ஸ்ரீ சங்கர விஜயம்:** *ஆதி சங்கராசாரியர் திவ்விய சரித்திரம் (ஸ்ரீ சங்கரர், ஸ்ரீ சாரதாம்பாள் படங்களுடன்) ரூபா 1-4-0*

---

**ஸ்ரீ ராமாநுஜ விஜயம்:** *விசிஷ்டாத்வைத மத ஸ்தாபகராகிய ஸ்ரீ ராமாநுஜாசார்யரின் விரிவான சரித்திரம்: விலை ரூபா 2*

---

**ஸ்ரீ மாத்வ விஜயம்:** *ஸ்ரீ மத்வாசாரியரின் விரிவான சரித்திரம் (படத்துடன்) விலை ரூபா 1*

---

**ஸ்ரீ ராமகிருஷ்ணர் விரிவான சரித்திரம்:** *ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சரின் ஜனனமுதல் மஹா சமாதி வரையில் உள்ள விரிவான சரித்திரம்: விலை ரூபா 2*

---

**ஸ்ரீ ராமகிருஷ்ணரின் விரிவான உபதேச ரத்நங்கள்:** *ரூபா 2*

---

**ஸ்ரீ விவேகாநந்தர் விரிவான சரித்திரம்:** *ஸ்வாமிகளைப்பற்றி இதுவரையில் தமிழில் வெளிவராத அநேக அற்புத சம்பவங்கள் காட்டப்பட்டுள்ள புதிய நூல்: விலை ரூபா 2*

---

**திவ்விய தேச யாத்திரையின் சரித்திரம்:** *அரிய தேசமாகிய நமது இந்தியாவிலுள்ள திவ்விய ஸ்தல, திவ்விய தீர்த்த, திவ்விய பர்வதாதிகளின் மஹிமையும் விசேஷங்களும்: முதல் பாகம் (வட தேசங்கள்) விலை ரூபா 2*

---

**தக்ஷிண இந்தியா சரித்திரம்:** *ஷை 2-ம் பாகம் (தென் தேசங்கள்) விலை ரூபா 5*

---

**சிவக்ஷேத்ர விளக்கம்:** *சிவக்ஷேத்ராலய மஹாத்மிய விளக்கமும்: விலை ரூபா 1-8-0*

உ

பரமபதி துணை

# பர்த்ருஹரி நீதிசதகம்

## மூலமும் உரையும்

பரப்ரஹ்ம வணக்கம்

(வெண்பா)

கால அளவுங் கருதரிய தேசத்தின்
மூல அளவு முடிவுமின்றி—ஞாலமெங்கும்
ஞானு நுபவத்தால் நாடுசுயஞ் சோதிமயந்
தானும் பொருளெமக்குச் சார்பு.

(உரை) கால தேச அளவு முடிவு மின்றி ஞானமயமாய், சாதுக்க ளெல்லாம் ஞானுநுபவத்தால் நாடுகின்ற சாந்த சுயஞ் சோதிமயந் தானுகிய பரம்பொரு ளெமக்குத் துணை. (ஆகையால், அதனை வந்திக்கின்ரோம்.) (1)

முதல் அதிகாரம்

### மூர்க்கர்

(வெண்பா)

தெரிந்தார் அருவருத்தார் செல்வஞ் சிறந்தார்
திரிந்தார் அகந்தை செறிந்து—பிரிந்தார்கீழ்
மக்களுக்குக் கேட்கு மதியில்லை ஆகலினென்
சொற்க ளடங்கினவே சோர்ந்து.

(உரை) தெரிந்தார் அருவருத்தார்கள். கல்வி பொருட் செல்வங்களில் மிகுந்தவர்கள் கர்வத்தால் மனம் வேறுபட்டார்கள். இவர்களின் வேறாகிய கீழ்மக்களுக்குக் கேட்கும் அத்தனை அறிவில்லை. ஆகையால், என் சொற்கள் சோர்ந்து எனக்குள்ளேயே அடங்கிப் போயின. (2)

(வெண்பா)

தெரியார்க் கெளிதில் தெரித்தலாம் நன்றாய்த்
தெரிந்தார்க்கும் ஒப்பத் தெரித்தல்—அரிதன்றால்
அற்ப மதியால் அனைத்துமுணர்ந் தோமென்னும்
அற்பருக்கார் சொல்வார் அறிவு.

(உரை) தெரியாதவர்களுக்குச் சுலபமாய்த் தெரிவிக்கலாம். நன்றாய்த் தெரிந்தவர்களுக்கும் ஒப்பும்படி தெரிவித்தல் அருமையல்ல. (இன்னுஞ் சுலபம்.) அற்ப அறிவால், 'எல்லாம் அறிந்து விட்டோம்' என்று இறுமாந்திருக்கும் அற்பருக்கு அறிவு சொல்ல யாராலாகும்? (பிரமதேவனாலும் முடியாது என்றபடி.) (3)

(வெண்பா)

முதலைப்பன் மணியு முயன்று பெறலாம்
சிதலையில்லிற் பாம்பைச் சிரத்தற்—புதமலர்த்தார்
ஆக்கி அலைவீசும் ஆர்கலியைத் தாண்டலாம்
மூர்க்கனைச்சீ ராக்கலா மோ.

(உரை) முதலைவாய்ப் பற்களின் நடுவிலுள்ள மாணிக்கத்தையேனும் முயற்சி செய்து வெளியில் வரப் பெறலாம். கறையான் புற்றில் (சீறும்) பாம்பையேனும் அற்புதமான மலர்மாலையாக்கித் (தலையிற் சூடலாம்). அலை வீசும் கடலையேனும் தாண்டலாம். ஆனால், மூர்க்கனை (மனந் திருப்பிச்) சீராக்க முடியுமோ? (முடியாது.) (4)

(வெண்பா)

எண்ணெய் மணலில் எடுக்கலாம் கானலைத்
தண்ணீர் குடிக்கச் சமைக்கலாம்—எண்ணிலாக்
கான முயற்கோடு காணலாங் கற்பிலா
ஈனனைச்சீ ராக்கலா மோ.

(உரை) மணலில் எண்ணெய் முயன்று எடுக்கலாம். கானலைத் தண்ணீராக் குடிக்கச் செய்துகொள்ளலாம். கணக்கற்ற காட்டு முயற்கொம்பைக் கண்டுகொண்டு வரலாம். அன்றி, நல்லொழுக்க மில்லாத மூடனைச் சீராக்க யாராலாகும்? (ஆகாது.) (5)

(வெண்பா)

வாகை மலரால் வயிரங் குடையலாம்
மாகமல நூலால் மதகரியை—யூகமுடன்
கட்டலாம் தேனுற் கடலுப்பைப் போக்கலாம்
மட்டியைச்சீ ராக்கலா மா.

(உரை) மெல்லிய வாகைப்பூவால் வயிரத்தைத் தொளைக்கலாம் (என்றெண்ணுகிறவனும்), சிறந்த தாமரை நூலால் மத யானையைத் தந்திரமாய்க் கட்டலாம் (என்றெண்ணுகிறவனும்), ஒரு தேன் துளியால் கடல் நீரின் உப்பைக் கழிக்கலாம் (என்றெண்ணுகிறவனும், நல்ல சொல்லால் மடையனைச் சீர்திருத்த முயல்பவனும் சரியாவார்கள்); ஆனால், மடையனைச் சீராக்க முடியுமா? (முடியாது.) (6)

(வெண்பா)

மூடா றியர்மைதனை மூடுவதற் கேபிரமன்
பீடுபெறு மோனம் பிறப்பித்தான்—மூடரெலாம்
மூதுணர்ந்தோர் முன்னிலையில் மோனஞ்சா தித்தலே
நீதிலமு கூகுஞ் சிறந்து.

(உரை) பிரமன், மூடர்களுடைய அறியாமையை மூடி வைப்பதற்கே, (பெருமை பொருந்திய) மௌனத்தை உண்டாக்கினான். (ஆகையால்) மூடரெல்லாம், பண்டிதர்களுக் கெதிரில் மௌனமா யிருத்தலே, (குற்றமற்றுச் சிறந்த) அழகாகும். (7)

(வெண்பா)

கொஞ்ச மதியானன் குஞ்சரம்போ லேமாந்து
விஞ்சும் விவேகியென மேவினேன்—மிஞ்சுமதி
உத்தமர்பாற் பெற்றபின்னர் உள்ளகந்தை விட்டறிந்தேன்
எத்தனைநான் மூடனென் று.

(உரை) நான் கொஞ்சம் அறிவுடையவனா யிருந்ததனால் (அப்பொழுது) (மத) யானையைப்போல் இறுமாந்து, நிறைந்த அறிவாளி (நானே) யென்றெண்ணி விளங்கினேன். (பிறகு) பெரியோர்களிடத்தில் நிறைந்த அறிவைச் சிறிது சிறுதாய்ப் பெற்று, (அப்பொழுதே) என் இறுமாப்பைத் தொலைத்துவிட்(3) (மூர்க்கனாகிய) நான் எத்தனை அறிவில்லாதவனென்று தெரி கொண்டேன். (

(வெண்பா)

புழுத்த கழுதையின் புல்லெலும்மை நாய்தன்
கழுத்தைமிக நீட்டிக் கடிக்கும்—வழுத்துஞ்சீர்த்
தேவேந் திரன்வரினுந் தேராது கீழுயிர்கள்
ஆவாவா புன்மையுண ரா.

(உரை) புழுத்துத் துர்நாற்றம் வீசும் கழுதையின் பசையற்ற வெள்ளெலும்பை, நாய் அதிக ஆசையாய்த் தன் கழுத்தை நீட்டிக் கடிக்கும். (அப்போது அதனருகில்) எல்லாரும் புகழும் சிறப்பையுடைய தேவேந்திரன் வந்து நின்றாலும், (அதை) அறி

ந்து கூசாது. அற்பப் பிராணிகள் அந்தோ! (தாம் கொண்ட பொருளின் உயர்வு) தாழ்வை மதியா. (9)

(வெண்பா)

ஆகாய கங்கை அரன்முடியில் வந்ததற்பின்
வாகா யிமய மலையிடத்தில்—ஓகோவித் [தோர்
தொல்லுலகில் பாதலத்தில் தோய்ந்ததுதம் வைப்பிழந்
பல்விதமாம் பாடுபடு வார்.

(உரை) ஆகாயத்தி லிருந்த கங்கையாறு சிவன் முடியில் வந்தது; அங்கிருந்து நேராய் இமயமலைக்கு வந்தது; அங்கிருந்து இந்தப் பழமையான பூலோகத்துக்கு வந்தது; அங்கிருந்து பாதாளத்திற் பாய்ந்தது. (உயர் நிலையிலிருந்து) அதை யிழந்தவர்கள், இப்படியே பலவிதமான பாடு படுவார்கள். (10)

(வெண்பா)

அங்கிக்குத் தண்ணீர் அருக்கற்குக் கைக்குடையாம்
பொங்குகரிக் கங்குசமாம் போரேற்றுக்—கிங்கொருகோல்
நோயரவுக் கோடதியாம் நொய்யமன மூர்க்கரைநாம்
தூய்மைசெயற் கில்லைமருந் து.

(உரை) நெருப்புக்குத் தண்ணீரும், சூரிய வெப்பத்துக்குக் கைக்குடையும், மதயானைக்கு அங்குசமும், சண்டை செய்யும் எருதுக்கும் (கழுதைமுதலியவைகளுக்கும்) தடியும், நோய்க்கும் பாம்பு விஷத்துக்கும் மூலிகை (மருந்து மந்திர) முதலியவைகளும் மாற்றுகளாக நூல்களிற் குறித்திருக்கின்றன. ஆனால், அற்ப புத்தியுடைய மூர்க்கரை நாம் பரிசுத்தவான்களாக்குவதற்கு (எந்த சாஸ்திரத்திலும்) மருந்து இல்லை. (11)

## 2-வது அதிகாரம்

## கல்வி

(வெண்பா)

மணியருமை யோராரன் மதிப்பைக் குறைத்தால்
மணிக்குக் குறைவு வருமோ—அணிபொருள்யாப்
பாசிரியன் தான்வருந்த யார்மதியா னேனுமந்த
ஆசிரியற் கேதுகுறை யாம்.

(உரை) (எழுத்துஞ் சொல்லும் உணர்ந்ததன் பயனாக) அணியிலக்கணம், பொருளிலக்கணம், யாப்பிலக்கண (முதலிய ஐந்திலக்கணங்களையும் ஐயந்திரிபற வுணர்ந்து, நன்மாணாக்கர்க்கு நயமாகக் கற்பிக்க வல்ல பண்டிதனாகிய) நல்லாசிரியனை, எந்தச் செல்வன் அவமதித்து வருத்தினாலும் (அது அவனுடைய அறியாமையை விளக்குமேயன்றி) அந்த ஆசிரியன் திறமைக்கு ஒரு குறைவும் தராது. மாணிக்கத்தின் அருமை யறியாத வர்த்தகன், அதைக் குறைவாக மதித்ததனாலேயே அதற்குக் குறைவு வாராதல்லவா? (12)

(வெண்பா)

அணிபொருள்சொல் கற்றானை ஆதரியான் தானே
திணிபேதை யென்னத் தெரிக்கும்—கணிகொள்
மணிக்குமதி யில்லான் மதிப்பைக் குறைத்தால்
மணிக்குத்தாழ் வுண்டோ மதி.

(உரை) அணியிலக்கணம் பொருளிலக்கணம் உணர்ந்து, நன்றாய்ப் பேசும் சொல்லிலக்கணத்தால் மாணவர்க்குப் போதிக்கக் கற்ற பெரும் புலவனை, எந்தச் செல்வனாவது, ஆதரியாமல் ஏழையாய் வருந்தவிட்டிருந்தால், அது, அந்தப் பணக்காரனையே பலத்த பாமரனெனத் தெரிவிக்கும். மதிப்பேறின மாணிக்

கத்திற்கு, மதிப்பறியா வர்த்தகன் மதிப்பைக் குறைத்தால், அதற்குக் குறைவு வருமோ? நீ எண்ணிப் பார். (13)

(வெண்பா)

கள்ளன் கொடுபோகான் கல்விச்செல் வத்தையது
கொள்ளைகொள்ள இன்பங் கொடுக்குமே—அள்ளக்
குறையா தழியாது கூர்ந்ததுபெற் றோரைத்
தறையாளு வோனுமொவ்வான் சால்பு.

(உரை) கல்விச்செல்வத்தைக் கள்ளன் கொண்டு போக மாட்டான்; அது பொருட்செல்வத்தைப்போ லின்றி, என்றும் அழியாத பேரின்பத்தைக் கொடுக்கும்; அள்ளிக் கொடுக்கக் குறையாமல் வளரும்; என்றென்றும் அழியாது. இப்படிப்பட்ட கல்விச்செல்வர்களைச் சாதாரண பொருட்செல்வர்களாகிய அரசர்களும் பெருமையிற் சம மாகமாட்டார்கள். என்றால், அவர்களுக்குச் சமானர் இப் பூலோகத்தில் வேறு யார் இருக்கின்றார்கள்?

(வெண்பா)

உண்மைவித்து வான்களைநீ உல்லிங் கனஞ்செய்யேல்
எண்மையதன் ஞர்க்குன் இருநிதியம்—நண்ணுமதைக்
கண்டுன்பாற் சேரார் கரியையொரு தாமரைநூற்
கொண்டுகட்ட லாகுமோ கூறு.

(உரை) ஏட! உண்மைப் புலவர்களை நீ சந்தேகித்து அவமதிக்காதே! (உன் பணத்தைப் பார்த்து உன்னை அவர்கள் மதிப்பார்களென்று எண்ணதே!) உன் பணம் அவர்களுக்கு ஒரு சிறு துரும்புபோல் அற்பமானது. அதைக் கண்டவர்கள் தாமே உன்னைத் தேடி வந்து சேரமாட்டார்கள். மதம் பொழியும் யானையைத் தாமரை நூலாற் கட்டச் சாத்தியமாகுமா? நீ சொல்! (15)

(வெண்பா)

அயன்சினந்தால் அன்னத்தை அந்தா மரைமேல்
வியந்திருத்தா னன்றியதன் மேன்மைச்—சுயங்குணமாம்
நீரினின்றும் பால்பிரிக்கும் நேர்மைதனை மாற்றுவனோ
தேரினிது வித்வான் திறம்.

(உரை) பிரமனுக்கு அன்னத்தின்மேல் கோப மூண்டால், அழகிய தாமரைமேல் அதை வாழ்ந்திருக்கவொட்டான். அன்றி, அதன் இயற்கைக் குணமாகிய நீரிற் பாற் பிரிக்கும் அருங்குணத்தை அகற்ற அவனால் ஆகாது அல்லவா? ஆராயுங்கால், அரும் புலவன் தன்மையும் இதுவேயாகும். (16)

(வெண்பா)

ஆரமுந் தோளணியும் ஆண்பிள்ளை பூண்பதேன்?
சாரசந்த னத்தைத் தடவுவதேன்?—வாரிக்
குடுமியிற்பூச் சூடுவதேன்? கோலமவை யல்ல
நடுசபையில் வாக்கழகே நன்று.

(உரை) ஆண்பிள்ளைக்கு ஆரமும் மாலையும் எதற்கு தோளணியுங் காதணியுங் கையணியும் என்னத்திற்கு? மணமுள்ள சந்தனந் தடவுவதேன்? குடுமியைச் சீவிப் பூ முடிப்ப தெதற்காக? அவையெல்லாம் அழகல்ல; அழிந்துபோகும். (நடுச் சபையில் வாக்கழகே நல்லது; என்றும் அழியாப் பெருமை தருவது. ()

(வெண்பா)

கல்வியே பூணாகும் கல்வியே வைப்பாகும்
கல்வியே பேரின்பங் கற்பிக்கும்—கல்வியே
மன்னன் மதிப்பாம் மகதேவ னுங்குருவாம்
துன்னுசுற்ற மாருந் தொடர்ந்து.

(உரை) கல்வியே ஆபரணமாம். கல்வியே புதைத்து வைக்கும் பொருளாகும். கல்வியே பேரின்பங் காண்பிக்கும் (குருவாகும்.) கல்வியே பரதேச மன்னனுக்கு மதிப்புண்டாக்கும். கல்வியே பரமாத்மா. கல்வியே குலகுரு. கல்வியே நெருங்கித் தொடர்ந்து வரும் சுற்றம். (பணம் இப்படி அன்று; ஆகையால், படிப்பில்லான் விலங்கு போல்வான்.) (18)

(வெண்பா)

பொறுமையே சட்டை பொறாமை பகைவர்
வெறுமைமனத் தாயத்தார் வெந்தீ—மறுவிலா
நேசர் மருந்து நிலவுலகிற் பொல்லாத
நீச ரரவம் நிசம்.

(உரை) பொறுமையே கவசமாகும்; (ஆகையால், வேறு கவசம் வேண்டியதில்லை.) பொறாமையே பகைவர்; (ஆகையால், வேறு பகைவர் வேண்டியதில்லை.) தாயத்தாரே நெருப்பு; (ஆகையால், வேறு நெருப்பு வேண்டியதில்லை.) நேசர் நோயைப் போக்கும் மருந்து; (ஆகையால், வேறு மருந்து வேண்டியதில்லை.) துஷ்டர்கள் பாம்பு; (ஆகையால், வேறு பாம்பு வேண்டியதில்லை.) பொறுமையைக் கொள்ளவேண்டும். பொறாமையைத் தள்ளவேண்டும். தாயத்தாரிடத்தில் சாக்கிரதையாய் வாழவேண்டும். இஷ்டரோ டிணங்கவேண்டும். துஷ்டரோடு பிணங்கவேண்டும். இதுவே கற்றதனாலாய பயன்.) (19)

(வெண்பா)

உறவோர்க்குக் கண்ணோட்டம் ஊழியர்க்கி ரக்கம்
மறவோர்க்கு வன்மை வழங்கல்—அறவோர்க்கு
மெய்யன்பு பாராளும் வேந்தர்க் கனுசரணை
கைவல்ய மாகுங் கணக்கு.

(உரை) சுற்றத்தார்க்குத் தாக்ஷிணியம்; வேலையாட்களுக்கு இரக்கம்; துஷ்டர்களுக்கு வன்மை; நல்லவர்களுக்கு உள்ளன்பு. பூமியை யாளும் வேந்தர்களுக்கு ஒற்றுமை. இவைகள் கற்றவர்கள் கைகண்ட விஷயங்கள். (20)

(வெண்பா)

படித்தோர்க் கொழுங்கு பகைவர்க்கு வீரம்
முடித்தோர்க் கடக்கம் முறையாம்—துடித்தவிடைப்
பெண்களுக்குத் திட்டம் பெரிதுங்கை யாடுவார்
கண்களுக்கு மேல்பெற்றார் கண்.

(உரை) கற்றோர்க்கு நன்மை; பகைவர்க்கு வீரம்; முடிந்த ஞானிகளுக்கு அடக்கம்; உடுக்கையிடைப் பெண்களுக்குத் திட்டம்; இவைகளைக் கண்களுக்குமேற் கண்ணாகிய கல்விக்கண்ணைப் பெற்றவர்கள் முறைமையாகக் கையாடுவார்கள். (21)

(கலிவெண்பா)

உண்மையுரைப் பிக்கும் உயர்மதியை யுண்டாக்கும்
ஒண்மைதிகழ் மானத்தை ஓங்குவிக்கும்—எண்மை
மறத்தை யழிக்கும் மனத்தைக் கொழிக்கும்
புறத்தெங்குங் கீர்த்திபொலி விக்கும்—திறத்தபல
சொல்லியென் மேலோர் தொடர்புபோல் நன்மைசெய
வல்லதொன் றெங்குமிலை மற்று.

(உரை) பெரியார் நேசம் உண்மையே பேசுவிக்கும்; (மந்த மதியைப் போக்கி) உயர்ந்த மதியை உண்டாக்கும்; நல்ல பெருமையை வளர்க்கும்; தாழ்வான பாவ காரியங்களை நீக்கும்; மனத்தைச் சீராக்கும்; வெளியி லெங்கெங்கும் புகழை விளக்கும்; பல திறமான வார்த்தைகளைப் பேசி யென்னபலன்? அதுபோல,

நன்மை செய்யவல்ல வேறொரு பொருள் எவ் வுலகினும் இல்லை. (பெரியோர்-கற்றார்.) (22)

(வெண்பா)

உள்ள துரைக்கின்ற ஒண்கவியாற் பாவாணர்
எள்ளரும் மரணபவம் இன்றியே—விள்ளரிய
சத்தியமா ஞானியர்போல் தாவாத கீர்த்தியொடு
நித்தியமா வாழ்வார் நிசம்.

(உரை) உள்ளதுள்ளபடி யெடுத்துரைத்துக் கவிபாடுவதாற் புலவர், கேவலமான பிறப்பிறப்பில்லாமல், சொல்லற்கரிய உண்மை ஞானயோகியர்போல, கெடாத (கவிகளாகிய) புகழுடம் போடு என்றும் அழியாமல் பல்லூழி வாழ்வார்கள். இது முக்காலும் உண்மையாம். (23)

---

3-வது அதிகாரம்

## வீரம்

(வெண்பா)

சிங்கம் பசித்தாலும் தீரவிளைத் தோய்ந்தாலும
மங்கியுடல் வாடி மடிந்தாலும்—பொங்குமத [லைத்
யானையையே கொல்லவெண்ணும் அன்றியுலர் வைக்கோ
தீனியெனத் தின்னுமோ சென்று.

(உரை) சிங்கம் பசித்தாலும், மிகவும் இளைத்துப் குன்றினாலும், உடல் மேனி யழிந்து வருந்தி இறந்தாலும், மதம் பொழியும் யானையையே கொன்று தின்ன நினைக்கும். அல்லாமல், உலர்ந்த வைக்கோலைத் தீனியென எண்ணிச் சென்று தின்னுமோ? (24)

(பஃறொடை வெண்பா)

சாரமிலா வெள்ளெலும்பைத் தான்கண்டு சந்தோஷம்
கூருநாய் அங்கதனால் கொண்டபசி தீராது
சேரநரி வாழ்ந்தாலும் சிங்கம் அதைவிட்டுத்
தூரவன மதனில் தூங்குமத யானைதனைக்
கோரநகத் தாலே கொல்லும் அதுபோல,
பார வறுமைபல பாய்ந்தாலும் மாந்தர்தந்
தாரதம்மி யப்படியே தக்கபலன் வேட்பதன்றி
ஆரவே றொன்றையெண் ணார்.

(உரை) நாய், பசையற்ற வெள்ளெலும்பைக் கண்டவுடனே சந்தோஷங் கொள்ளும்; அன்றி, அதனால் பசி தீராது. சிங்கம், தனக்கெதிரில் நரி வாழ்ந்தாலும் அதை விட்டுத் தூரத்திலுள்ள காட்டில் வாழும் யானையையே தன்னுடைய கூரிய நகத்தாற் கொல்லும். ஆகையால், பெரிய பல சங்கடம் நேரிட்டாலும் மனிதர்கள் தங்கள் தாரதாத்துக்குத் தக்க பலனையே விரும்புவார்கள். அன்றித் தகாத வேறொரு பொருளைக் கோரமாட்டார்கள். (25

(கலிவெண்பா)

தவளமிடு கின்றவனைக் காணுநாய் வாலைத்
துவள மிகவாட்டுந் துள்ளுந்—தவளநிறப்
பல்லைவயிற் றைக்காட்டும் பார்மேல் விழுமெழும்
எல்லையிலா ஏழ்மை இயற்றுமே—சொல்லரிய
யானைமதங் கொண்டதனால் யாரையும்பா ராமலே
மானமுற வீரமுடன் மாவேவாட்டி—தானளிக்கும்
பெருங்கவளந் தின்று பெருமையாய் வாழும்
இரும்புவியின் தன்மை இது.

(உரை) எச்சிற்கவளஞ் சிறிது தருபவனைக் காணுகின்ற நாய், தன் வாலைக் குழைத்து விரைவாய் ஆட்டும்; துள்ளிக் குதிக்கும்;

வெள்ளைப் பல்லை வெளியிற் காட்டும்; வயிற்றை ஒடுக்கும்; பூமிமேல் விழும்; எழுந்தோடும். இப்படி அநேக எழ்மையைச் செய்து இச் சகத்தில் இச்சகமாய் வாழும். சொல்லற்கரிய பெரிய யானை, தன் மதத்தால் யாரையுஞ் சட்டைசெய்யாமலே, சிறந்த வீரத்தோடு, மாவோட்டி அருமை பாராட்டிக் கொடுக்கின்ற பெருங் கவளந் தின்று பெருமையாய் வாழும். இப் புவியில் மாந்தரிலும் இத் தகையர் உளர். (26)

(வெண்பா)

பிறப்பிறப்புச் சேர்குடும்பப் பேராழி தன்னிற்
பிறந்தும் இறைவாப் பெரிய—திறைமுடையோன்
யாவனெனிற் கீர்த்தி எவனாற் குலமெல்லாம்
மேவுமவ னென்று விளம்பு.

(உரை) பிறப்பு இறப்பு என்னும் பெருங் காற்றிற் சுழலும் சமுசார சக்கரத்தில் (தோன்றினர் அநேகர்) அப்படித் தோன்றி யும் அழியாத பெருந்தன்மை யுடையான் எவனென்னில், எவனாற் குலமடங்கலும் கீர்த்தி பெற்று விளங்குமோ அவனே அப்படிப் பிறந்தவனென்று சொல். (27)

(வெண்பா)

பூவைப்போல் வல்ல புருஷன் தனக்கெவரும்
ஆவலாய்ச் சென்னியணி யாக்கலொன்று—தாவிலா
மாவனத்தி லேயிருந்து மட்கலொன்று வேறுவித
மாவதில்லை ஆவதில்லை யாம்.

(உரை) வல்லவனுக்கு, மணமுள்ள மலரைப்போல, எல்லா ரும் சிரசா வகிப்பது ஒன்று. அன்றி, அரும் பெருங் காட்டிலே மட்குதல் ஒன்று. இவ் விரண்டி லொன்றன்றி வேறு வழி யில்லை. (28)

(வெண்பா)

குருமுதலாம் ஐந்தாறு கோள்க ளிருந்தும்
கிருகணத்தில் ராகுபெருங் கீர்த்தி—மருவுதற்குச்
சூரியனை யேதான் தொடர்ந்து பிடிக்கின்ற
காரியத்தைத் தேருங்கள் கண்டு.

(உரை) குருமுதலாகிய ஐந்தாறு கிரகங்க ளிருந்தும், அவைகளி லொன்றைப் பற்றாமல், கிரகணகாலத்தில் கீர்த்தியை விரும்பின இராகு, தேசோமயனாகிய சூரியனையே பிடிக்கிறான். இதை ஆராய்ந்து பாருங்கள். (29)

பஃறொடை வெண்பா

சேடன் படத்தால் செகமெலாந் தாங்குகின்றான்
சேடனைத் தாங்கித் திகழ்கின்றான் கூர்மனுந்தான்
மூடு பிரளயத்தில் முன்வரா கன்தனக்கோர்
ஓடு திகழ் கூர்மன் ஒடுங்குவான் ஆகையினால்
பீடுபெறு மேலோர் பெருந்தகைமைக் கெந்நாளுந்
தேடுமள வில்லையெனத் தேர்.

(உரை) ஆதிசேஷன் தனது படங்களால் பதினான்கு உலகங்களையுந் தாங்குகின்றான். அவனை ஆதிகூர்ம மூர்த்தி, தமது முதுகில் சுமக்கின்றான். பிரளய காலத்தில் அப்படிப்பட்ட ஆதிகூர்மன், ஆதி வராகனுக்கு அடங்குகின்றான். ஆகையால், பெருமையிற் சிறந்த ஞானிகளின் சிறப்புக்கு எப்போதும் அளவில்லை என்று தெரிந்துகொள். (30)

(வெண்பா)

தேவேந் திரன்குலிசத் தீயால்வே மைநாகன்
தீர்வா இமவானுந் தந்தையைவிட்—டோவாது

வாழ ஒளித்தான்தண் வாரி தியில் மற்றிதுவும்
சூழத் தகுவதோ சொல்.

(உரை) இமாசல குமாரனுகிய மைநாகனுக்குத் தேவேந்திரனுடைய வச்சிராயுதக் கொடு நெருப்பால் தானுந் தந்தையோடு சாவதே சரியன்றி, நெருப்பில் வேகுந் தந்தையை விட்டுத் தான் மட்டும் கெடாமல் வாழும்படி சமுத்திரத்தில் ஒளித்துக்கொண்டது தகுதியான யோசனையா? நீ சொல்வாயாக. (31)

(வெண்பா)

சூரியகாந் தக்கல்லுஞ் சூரியவெப் பந்தன்மேற்
சேரின் எரியுந் திறமதனுல்—பாரில்
ஒளியார் பிறர்செய் உபத்திரவம் ஆற்ற
ஒளியார் பொறுப்பார் உயர்ந்து.

(உரை) சூரியகாந்தக்கல் அசேதனமானுலும் சூரிய வெப்பம் தன்மேற் பட்டால் எரிந்து விழுந்தன்மையால், பூலோகத்தில் கீர்த்தியுள்ளவர்கள் பிறர் செய்யும் வேதனையைச் சகிக்கப் பின்னிடையார்கள்; மேன்மையுடன் பொறுத்துக்கொள்வார்கள். (32)

(வெண்பா)

சிங்கஞ் சிறிதேனுஞ் சிந்துரமேற் பாய்வதற்குப்
பங்கமுறு தோடுகின்ற பான்மைபோல்—இங்குப்
பலமுளார் அஞ்சார் பராக்கிரமத் திற்குக்
குலவுவய தில்லையெனக் கூறு.

(உரை) சிங்கஞ் சிறியதானுலும் பெரிய மதயானைமேற் பாய்வதற்கு, அஞ்சாமல் ஓடுந் தன்மைபோல, இவ் வுலகில் சௌர்ய பலமுள்ளவர்கள் எதற்கும் அஞ்சார். வல்லமைக்கு வயது முதலானவைகள் இல்லை யென்று சொல்வாயாக. (33)

## 4-வது அதிகாரம்

## பொருள்

### கலிவெண்பா

*சாதி யிழிந்தென்ன சற்குணந் தாழ்ந்தென்ன*
*ஓது மொழுக்கம் ஒழிந்தென்ன—தீதில்*
*குடிமடிந் தாலென்ன கொண்டதொரு வீரம்*
*முடிந்தழிந் தாலென்ன மூவா—நெடுஞ்செல்வம்*
*பெற்றிருந்தாற போதும் பெறுவிட்டால் மேற்சொன்ன*
*சற்குணமெ லாமிருந்தும் தாழ்வுண்டாம்—புற்குமவை*
*ஒவ்வாப் புகழான் உலகவழக் கென்றென்றும்*
*இவ்வா றிருக்கும் இயல்பு.*

(உரை) *சாதி பாதாளத்தில் ஆழ்ந்தாலென்ன? அதைக்காட்டிலும் சற்குணந் தாழ்ந்தா லென்ன? ஒழுக்கம் அடியோடு ஒழிந்தா லென்ன? குற்றமற்ற வமிசம் அழிந்தா லென்ன? உயிராகக் கொள்ளும் வீரம் கழிந்தாலென்ன? மிகப் பெரிய செல்வம் பெற்றால் அதுவே போதும் (அதனால் வாழ்வு வரும்). அது பெறுவிட்டால், மேற்சொன்ன சுகுணங்களெல்லா மிருந்தும் தாழ்வு வரும். அவைகள் புகழாற் புற்குஞ் சமான மாகமாட்டா. (இஃது இவ் வுலக இயற்கை வழக்கு).* (34)

### (பஃறொடை வெண்பா)

*உலகிற் பணமுள்ளான் ஒங்குகுல முள்ளான்*
*அலகில் புலமையுள்ளான ஆனகலை ஞான*
*நிலவியுள்ளான் நீதி நெறியுள்ளான் சங்கப்*
*புலமையுள்ளான் பேரழகு பூண்டுள்ளான் என்று*
*பலராற் புகழப் படுவான் பணத்தான்*
*பல்குணத்தான் என்பதனைப் பார்.*

(உரை) உலகத்தில் பணமுள்ளவனே "குலவிசிட்டன்; பெரும் புலவன்; கலைஞானி; நீதிமான்; சபாபதி; அழகன்" என்று பலரால் புகழப்படுவான். பணம் ஒன்றிருந்தால் மேற்சொன்ன குணம் பல இல்லாவிடினும் இருப்பவனாக எண்ணுவார்கள். இதை நீ எண்ணிப் பார். (35)

(கலிவெண்பா)

மன்னன் மதியில்லா மந்திரியால் மாஞானி
துன்னுசங்கத் தாலே சுதன்செல்வந்—தன்னாலோர்
வேதியன் வேத மறப்பால் விளங்குகுலம்
தீதுசெறி மைந்தனால் சீரொழுக்கம்—நீதியிலாத்
தீநட்பால் நாணம் தியங்குமது பானத்தால்
ஆனபயிர் மேற்பார்வை யற்றதனால்—தூநட்பு
தேசாந் தரவாழ்க்கை செய்வதால் மெய்க்காதல்
மாசாந்த மற்ற மனமதனால்—தேசார்
பெருஞ்செல்வம் நீதியில்லாப் பேதமையால் நீர்மை
சுருங்குமென்று நீயறிந்து சொல்.

(உரை) மதியற்ற மந்திரியால் அரசனும், துர்ச்சங்கத்தால் சிறந்த ஞானியும், செல்வங் கொடுப்பதால் மைந்தனும், வேத பாராயண மறப்பால் பிராமணனும், கெட்ட பிள்ளையால் நல்ல குலமும், ஒழுங்கற்ற கெட்ட சகவாசத்தால் சிறந்த ஒழுக்கமும், மயங்கு மதுபானத்தால் நாணமும், மேற்பார்வை யற்றதனால் இட்ட பயிரும், தேசாந்தர வாழ்க்கை செய்வதனால் சிநேகமும், பொறுமையின்மையால் உண்மைக் காதலும், நீதி யில்லாமையால் பெருஞ் செல்வமும் நிலையழியும். (36)

(கலிவெண்பா)

பணத்தழிவுக் கோரருஞ்சற் பாத்திர தானம்
கணக்கின்றித் தானுகர்தல் காணு— இணக்கமற்ற
கள்ளன் எடுத்தலென்று காசினியிற் கண்டவழி
உள்ளபடி மூன்று உணர்ந்தெவருங்—கொள்ளுவதால்
முன்னிரண்டிற் செல்லவிடான் மூன்றும் வழியதனில்
அன்ன திழப்பான் அயர்ந்து.

(உரை) பொருளழிவிற்கு நல்வழியில் வழங்கல், கணக்கில்லாமல் தானனுபவித்தல், மறைந்து வாழுந் திருடன் அபகரித்தல் என்று உலகி லெவருங் கண்டுகொண்ட வழி மூன்று. ஆகையால், மயங்கி முன்னிரண்டு வழிகளிற் செலவிடாதவன் மூன்றும் வழியில் அதை இழந்துவிடுவான். (37)

பஃறொடை வெண்பா

சாணை கடைமணியுஞ் சத்திரந்தேய் கைக்கழுந்து
பேணுமதி சூரனும் பீடார் மதம்பொழிந்து
மாணுமுடல் வாடுகரு வாரணமுங் கார்த்திகையிற்
காணுமணல் மேடுதிகழ் காறும் பூரணையில்
வாணிலவும் நல்வழியில் வாய்ந்ததரு மந்தன்னில்
நாணுதலில் செல்வனும் நன்று.

(உரை) சாணைக்கல்லிற் கடைந்த மணியும், சத்திராயுதந் தேய்த்த கைத்தழும்பேறின வீரனும், சிறந்த மததாரை பொழிந்ததனால் பெரிய சரீரம் வாடின காரானையும், கார்த்திகை மாதத்தில் மணல்மேடு செறிந்த காட்டாறும், பூரணையில் வெண்ணிலாவும், நல்வழியிற் செலவிட்டுச் சிறந்த பிரபுவும் நன்றாய் விளங்குவார்கள். (38)

(வெண்பா)

நாழி யரிசெனினும் நல்குரவின் மேன்மையால்
ஆழி யெனக்கொண்ட ஆணமகன்தான்—வாழிமிகு
செல்வனு னக்கால் செகந்துரும்பா எண்ணுமெனில்
ஒல்லுந்தாழ் வேதுயர்வே து.

(குறள்)

சமயத்திற் கேற்றபடி தாழ்வும் உயர்வும்
அமையும் பொருள்களுக்கெல் லாம்.

(குறள்)

தாழ்ந்த துயரும் உயர்ந்தது தாழுமெனில்
சூழ்ந்துபொருள் கொள்க துணிந்து.

(உரை) நாழிதானிய மாளுலும் வறுமையின் விசேஷத்தால், அதை ஆழிபோற் பெரிதாக மதித்த புருடனொருவன், பிறகு செல்வனுனல் பூலோகத்தையே துரும்பென மதிப்பான். என்றூல், உயர்வேது? தாழ்வேது? சமயம்போற் பொருள்கள் உயர்வென்றும் தாழ்வென்றும் சொல்லப்படுகின்றன. ஒருகால் தாழ்ந்தது மற்றொருகால் உயரும்; அதுவே மறுகால் தாழும். (ஆகையால், ஆராய்ந்து பொருள்களைக் கொள்ளக்கடவர்.)

இங்கு நாழி யென்பது சிற்றளவு. மூலத்தில் 'பிடி' என்றிருக்கின்றது; ஒரு படியென்று கொள்ளற்க. (39)

(வெண்பா)

காசினியாங் காராம் பசுப்பால் கறப்பதெனின்
ஆசிலர் வேந்தனே ஆன்கன்றை—நேசமுடன்
உண்பிப் பதுபோல் உலகளிக்க கற்பகம்போல்
மண்மார் துனக்களிப்பாள் வாழ்வு.

(உரை) பூமியென்னுங் காமதேனுவின் பாலாகிய செல்வத்தை நீ கறக்கவேண்டினால், ஓ அரசனே! பசு தன் கன்றைப் போஷிப்பதுபோலக் குடிமக்களைக் காப்பாற்றக்கடவாய். அப்படி நீ காப்பாற்றினால், மண்மகள் கற்பகவிருக்ஷம்போல உனக்குச் சகல வாழ்வையுந் தருவாள். (40)

(கலிவெண்பா)

சில்லிடத்து மன்னீதி சீராருஞ் சத்தியமாய்ச்
சில்லிடத்த சத்தியம் சேர்ந்ததாய்ச்—சில்லிடத்தில்
காதுக் கினிதாய்க் கடினமாய்ச் சில்லிடத்தில்
ஓதுநிஷ் டூரமாய் ஓரிடத்தில்—தீதில்
கருணையாய் ஓரிடத்தில் காதல் பொருள்மேல்
மருவுவதாய் ஓரிடத்தில் மற்றும்—ஒருபால்
பொருட்செலவு செய்வதாய்ப் பூண்டொருபால் செய்வித்
திருப்பதாய் ஓரிடத்தில் செல்வம்—பெருக்குவதாய்ப்
பற்பலநா லாறுசேர் பாலாறு மாறுபோல்
நிற்பதாம் என்றுணர்க நீ.

(உரை) அரசநீதி சிலவிடத்தில் சத்தியமாய், சிலவிடத்தில் அசத்தியமாய், சிலவிடத்தில் செவிக்கினிமையாய், சிலவிடத்தில் கடினமாய், சிலவிடத்தில் நிஷ்டூரமாய், ஓரிடத்தில் கிருபையாய், ஓரிடத்தில் பொருளை விரும்புவதாய், ஓரிடத்தில் பொருட்செலவு செய்வதாய், ஓரிடத்தில் பொருட்செலவு செய்விப்பதாய், ஓரிடத்தில் பொருள் சேகரிப்பதாய், பற்பல இடத்திலிருந்து நாலாறு பாய்வதால் ஒரு பாலாறுவதுபோல விளங்கும் என்று நீ அறியக்கடவாய்.

தெலுங்கில் பாலாறு என்பது இல்லையாயினும் ஆற்றுக்கு நீர் வரவுஞ் செலவு மிருப்பதால் உவமானமாகக் கொள்க. (41)

(வெண்பா)

அருந்தண்டம் நற்கீர்த்தி அந்தணரைக் காத்தல்
பெருந்தானம் போகம் பிரியம்—மருவுமொரு
நட்பா தரவாறு நற்குணமில் லாவரசன்
கட்சேவை செய்தென்ன காண்.

(உரை) பொல்லாரைத் தண்டித்தல், நல்ல புகழ், அந்தணரைக் காத்தல், சற்பாத்திர தானம், சுகானுபவம், பிரிய நண்பரைக் காத்தல் ஆகிய ஆறு நற்குணம் இல்லா அரச சேவையால் இலாபம் இல்லை. (42)

(வெண்பா)

கிட்டத்தி லுள்ள கிணற்றின் முகந்தாலும்
எட்டிக் கடலில் எடுத்தாலும்—ஒட்டுநீர்
ஒன்றேயா மேருவினும் ஊழின் படியன்றி
இன்றேயாம் பொன்வருவாய் எண்.

(உரை) பிரமதேவன் எழுதினபடியன்றிப் பொன்மலையாகிய மேருவிற்சென் றெடுத்தாலும் அதிகங் கிடைக்காது. அதன்படி அதிகமேனும் குறைவேனும் தூரத்தி லிருந்தாலும் கிடைக்கும். ஆகையால், பணக்காரரிடத்தில் ஏழ்மையைக் காட்டி இரப்பதிற் பயனில்லை). குடமெடுத்துக் கிட்டத்திலுள்ள கிணற்றில் முகந்தாலும் தூரத்திலுள்ள கடலில் முகந்தாலும் அது கொள்ளுநீர் ஒன்றே யாகும்.

(வி-ரை) "ஆழ வமுக்கி முகக்கினும் ஆழ்கடனீர்,"

என்னும் அவ்வை நீதியும்,

"பரியினு மாகாவாம் பாலல்ல வுய்த்துச்
சொரியினும் போகா தம."

என்னும் திருக்குறள் நீதியும் இங்கே கவனிக்கற்பாலன. (43)

---

## 5-வது அதிகாரம்

## தீயோர்

(வெண்பா)

காரண மில்லாக் கலகம் தயையின்மை
சீரணவு நல்லோர்பாற் பேர்பகைமை—ஏரணவும்
சுற்றம் வெறுத்தல் துயர்சேர் பிறனுடைமை
பற்றிவை தீயோர்தம் பண்பு.

(உரை) காரண மில்லாமற் கலகஞ் செய்தலும், தயையில்லாமையும், சிறந்த நற்குணமுடைய பெரியோரைப் பகைத்தலும், சுற்றத்தாரை வெறுத்தலும், துயரங் கொடுக்கக்கூடிய பிறன்மனைப் புகுதலும் ஆகிய இவைகளெல்லாம் துஷ்டர்களுடைய குணங்களாம். (44)

(வெண்பா)

அரவின் தலையில் அருமணியுண் டேனும்
விரவும் பயத்தால் விலக்க—விரைகுவபோல்
தீயவர்பாற் கல்வி சிறந்தாலும் மற்றவரை
நீயகன்று தூரத்தில் நில்.

(உரை) பாம்பின் தலையில் மாணிக்கம் இருந்தாலும் அதைக் கண்டவுடன் பயந்து அப்புறப்படுத்த அவசரப்படுவார்கள். (அதுபோல) துஷ்டரிடத்தில் கல்வி மேன்மை யிருந்தாலும் அவரை விட்டு அப்பாலே போ. (45)

(வெண்பா)

மானியை மந்தனென்றும் மாதவனை டம்பனென்றும்
ஆன பிறப்பொழுக்கம் ஆதரிப்—போனை
கருணையிலான் என்றுமின்சொல் காட்டுவோன் தன்னைத்
திருணனென்றும் ஏசுவர்தீ யார்.

(உரை) மானியை மந்தபுத்தி யுடையவனென்றும், மதவசீலனை டம்பாசாரி யென்றும், உயர்வான பிறப்பாசாரத்தைப் பின்பற்றுவோனை இரக்கமில்லாதவன் என்றும், இனிமையாகப் பேசுபவனை அற்பனென்றும் (இன்னும் பலவாறு) துஷ்டர்கள் நிந்திப்பார்கள். (ஆகையால், அவர்களுக்கது இயற்கை.) ()

(கலிவெண்பா)

பேராசை தீது பிசினக் குணத்தாலே
தீராத பாவஞ் செறியுமே—நேரான
உண்மை யிருந்தால் உயர்தவமேன் தூயமனத்
தன்மையிருந் தாலேன் தலந்தொழுதல்—ஒண்மைமிகு
நன்மை யிருந்தால் நலம்பெறலாம் நல்லபெருந்
தன்மையிருந் தாலழகேன் தக்கவித்தை—வன்மை
இருந்தால் தனமேன் இழிந்தவப கீர்த்தி
இருந்தால் இறப்பேன் இயம்பு.

(உரை) பேராசை பொல்லாது; (அஃதிருந்தால் வேறொரு கெட்டகுணம் வேண்டியதில்லை). பிசினத் தன்மையால் தீராத பாவம் சேரும். உண்மை பேசினால் வேறு செய்தவம் வேண்டியதில்லை. பரிசுத்தமான சாந்தமனம் இருந்தால் தீர்த்த யாத்திரை செய்ய வேண்டியதில்லை. ஒழுங்கான நல்ல குணம் இருந்தால் எடுத்த காரிய முடிப்பதற்கு வேறொருவருடைய உதவி வேண்டியதில்லை). பலன் கிடைக்கும் பெருந்தன்மை யிருந்தால் அழகு

வேண்டியதில்லை. தகுந்த கல்வி ஞானம் இருந்தால் வேறு தனம் வேண்டியதில்லை. தாழ்வான அபகீர்த்தி இருந்தால் வேறு சாவு, வேண்டுவதில்லை. நீ சொல்வாயாக. (47)

(கலிவெண்பா)

பகனிலா மங்கைப் பருவப்பெண் கல்விச்
சுகமிலா ஆணழகன் தோன்றுஞ்—சகமூலாம்
பொன்னாசை மன்னன் பொருந்துவறு மைக்குணவான்
மன்னுசெல்வன் தன்பால் மருவுதுட்டன்—பொன்னிவளர்
தாமரை யில்லாத் தடாகம் இவரெழுவர்
நாமனை நையவிருப் பார்.

(உரை) பகலில் ஒளியிழந்த சந்திரனும், மங்கைப்பருவம் அடைந்தும் கலியாணம் ஆகாத பெண்ணும், கல்விச்சுகம் தெரியாத ஆண் அழகனும், உலகடங்கலும் கைப்பற்றவேண்டுமென்னும் பொன்னாசையுள்ள அரசனும், நித்தியதரித்திரனாகிய உத்தமனும், பணக்காரனிடத்திற் சேர்ந்த துஷ்டனும், இலக்குமி வாழும் தாமரை யில்லாக் குளமும், ஆகிய இந்த ஏழுபேரும் நாம் மனம் வருந்த இருப்பவர்கள் (என்பது என்னெண்ணம்.) (48)

(வெண்பா)

அதிகோபங் கொள்ளும் அரசர் இடத்தில்
மதியோன் எவனும் மருவான்—விதிசேர்
மகஞ்செய்வோன் தன்னையங்கி வாட்டத் தொடங்கின்
முகங்கால் தெரியாது முன்பு.

(உரை) அதிக கோபங் கொள்ளும் அரசரிடத்தில், (விரும்பிப்) புத்திமான் எவனும் பொருந்தமாட்டான். விதிப்படி யாகஞ் செய்பவனை நெருப்பு எரிக்கத்தொடங்கின் அதற்கு அவனுடைய முகங்கால் தெரியாமல் வாட்டும். (49)

(கலிவெண்பா)

பேசா திருந்தால் பெருமூமை யென்று நன்றாய்ப்
பேசினால் வாயாடிப் பேதையென்றும்—ஆசையுடன்
ஒட்டியிருந் தாலச்சம் உட்பயமில் லானென்றும்
எட்டியிருந் தாலெதற்கும் இல்லாத—மட்டியென்றும்
நெஞ்சம் பொறுத்தால் நிலைத்த மூடனென்றும்
கொஞ்சம்பொ றானேல் குலவீனன்—வஞ்சனென்றும்
பேரார் துரைகளெல்லாம் பேசுவர்தஞ் சேவகனை
ஆராயுங் காலவர்பால் ஆராலும்—சீராகச்
சேவித்த லாகா சிறந்ததவ மாதவர்க்கும்
பாவிக்க லாகாதாம் பண்பு.

(உரை) பேசாதிருந்தால் ஊமை யென்றும், நன்றாய்ப் பேசினால் வாயாடி மூடனென்றும், ஆசையோடு அருகி லிருந்தால் அச்சம் பயம் அற்றவ னென்றும், தூரத்தி லிருந்தால் எதற்கும் உதவாத மட்டி யென்றும், மனம் பொறுத்திருந்தால் மூடனென்றும், கொஞ்சம் அவசரப்பட்டால் இழிகுலத்து வஞ்சகன் என்றும், பெரிய துரைகளெல்லாம் தமது சேவகனைப் பேசி ஏசுவார்கள். ஆகையால், அவர்களிடத்தில் சேவிக்க ஆராலும் ஆகாது. சிறந்த முனிவர்க்கும் அவர்களை இன்னதென் றறிந்து நடக்க முடியாது. (50)

(நேரிசை வெண்பா)

துஷ்டரைச் சேர்ந்து சுவேச்சையாய் வாழ்ந்துகுணச்
சிஷ்டரை நீக்கிச் சிறப்பாக்கிக்—கஷ்டமுடன்
இத்தனைநாள் தானுகர்ந்த இல்லா மையைமறந்த
மத்தரையார் சேர்வார் மதித்து.

(உரை) துஷ்டர்களைச் சேர்த்துக்கொண்டு, தம்மிச்சை போல் சிறப்பாக வாழ்ந்து, சற்குண சாதுக்களைச் சேர்க்காமல் நீக்கி, இதுவரையில் தாங்கள் கஷ்டத்தோடு அநுபவித்த தரித்திரத்தை மறந்த மூடர்களை மதித்து யார் சேர்வார்கள்? அப்படிச் சேர்ந்தாலும் சுகம் உண்டாகாது. (51)

(வெண்பா)

காலை நிழல்போலக் கயவர் செயுநட்புச்
சாலமிக நீண்டழியுஞ் சான்ரூர்தம்—சீலமுள
நட்புச் சிறிதெனினும் நன்மாலை நீழல்போல்
திட்பமுடன் வளருஞ் சேர்ந்து.

(உரை) காலையில் சூரியன் நிழல்போல, மூடர் செய்யு நட்பு மிகவும் நீண்டிருந்தும் குறைந் தழியும். பெரியோருடைய அரிய நட்பு முதலிற் சிறிதெனினும் சாயங்காலத்தில் சூரியன் நிழல்போலப் பலம் பெற்று வளரும். (52)

(வெண்பா)

புல்லுண்மா னுக்கும் புனலுண்மீ னுக்குநன்செய்
நெல்லுண்ணு நல்ல நிறைகுணற்கும்—பல்லுண்
புலியுஞ் சிரற்புள்ளும் பூரியரும் கொன்னே
வலிய பகையாகு வார்.

(உரை) பிறர்க்குத் துன்பஞ் செய்யாமலே புல்லைத் தின்னும் மானுக்கும், நல்ல ஜலத்தைக் குடித்துப் பிழைக்கும் மீனுக்கும், நன்செய்ப் பயிராகிய நெல்லரிசிச் சோறுண்டு சாந்த நிறைந்து வாழும் நற்குணவானுக்கும், பல்லால் கொடுமை புரியும் புலியும், சிச்சிலிக் குருவியும், துஷ்டர்களும் முறையே யாதொரு காரணமும் இல்லாமற் பெரும் பகையாவார்கள். (53)

---

## 6-வது அதிகாரம்

## நல்லார்

(கலிவெண்பா)

நன்னட்பி லாசையு நாட்டம் பிறர்குணத்தில்
துன்னலுங் கல்விநசை தோய்தலும்—உன்னுங்
குருவுக் கடக்கமும் கோதிலாக் கற்பு
மருவுமனை யாளிடத்தில் வாழ்வும்—வெருவும்
பழிக்கஞ்சு மாண்பும் பரமற் கன்பு
கொழிக்குந் திறனுங் கொடிய—வழிச்செல்லும்
தீயார்தங் கேண்மையினிற் றீர்தலும் ஆயகுண
மேயார்க்கு வந்தனஞ்செய் வேம்.

(உரை) சற்சன சகவாசத்திற் பிரியமும், பிறருடைய குணத்தில் இச்சையும், கல்வியாசை பொருந்துதலும், குருவுக்கு அடங்கி நடத்தலும், குற்றமற்ற கற்புடைய மனைவியோடு வாழ்தலும், பெரியோர் அஞ்சும் பழிக்குப் பயப்படும் பெருந்தன்மையும், ஈசுவரனிடத்திற் பக்தியும், துன்மார்க்கர் சகவாசத்தை விட்டு நீங்குதலும் ஆகிய அருங்குணங்களை உடையார்க்கு நாம் வந்தனஞ் செய்யக் கடவோம். (54)

(கலிவெண்பா)

ஆபத்தில் தைரியமும் ஆனபெருஞ் செல்வத்தில்
கோபமிலாப் பெருமை கொள்ளலுமே—கோபித்
தவையில் விளங்கி அலங்கார வார்த்தை
சுவையாகப் பேசுதலும் தூய—நவைதீர்
கீர்த்திப் பிரியமும் கேடில் பெரும்போரில்
ஆர்த்தியுடன் வீரங்காட் டாண்மையும்—சீர்த்திமிகு

வேத கலாவிளக்க மேவுதலும் இவ்வுலகில்
கோதில் மகான்கள் குணம்.

(உரை) ஆபத்து வந்த காலத்தில் தைரியமாயிருத்தலும், பெருஞ் செல்வம் பெற்றபோது கோபத்தை யடக்கிப் பொறுமை யோ டிருத்தலும், ஒற்றுமையோடு சபையிற் பொருந்தி இனிமையாக அலங்கார வார்த்தை பேசுதலும், பரிசுத்தமான குற்றமற்ற புகழிற் பிரியமும், கெடாத பெரிய யுத்தத்தில் மனப் பூர்வமாய் வீரத்தன்மையைக் காட்டும் ஆண்தன்மையும், புகழோடு கூடிய வேதசாஸ்திர விளக்கம் பெற்றிருத்தலும் ஆகிய இவைகளெல்லாம் சாது லக்ஷணங்களாம். (55)

(கலிவெண்பா)

பாரில் மகான்கள் பணமில்லாக் காரணத்தால்
ஆரும் நகையில்லா ரானும்—நேரும்
செயற்கையலங் காரமிது செல்வமென வெண்ணார்
இயற்கையலங் காரமவர்க் கெய்தும்—உயர்ச்சிகேள்
செங்கைக்குத் தானம் சிறந்த அலங்காரம்
பொங்குதலைக் காசான் புனைமலர்த்தாள்—பங்கமின்றிச்
சேவித்த லன்னார் செயிர்தீர் முகத்தினுக்கு
நாவிற் பயிலுண்மை நற்றோட்குத்—தாவில்
பராக்கிரமங் தாங்குதலப் பண்புடையார் தங்கள்
நிராசை மயமாய் நிறைந்து—விராவுகின்ற
நெஞ்சந் தனக்கென்று நிஷ்களங்க மாயிருத்தல்
அஞ்செவிக்குக் கேள்வி யணி.

(உரை) உலகத்தில் கல்வி யொழுக்க நிறைந்த பெரியோர்கள் பணத்தை மதித்துப் பெருத காரணத்தால், நகைகள் பூண்டிருக்கமாட்டார்கள். ஆயினும், இயற்கையழகு, அவர்க்குப் பொருந்தியிருக்கும் செய்தி சொல்லுகிறேன் கேள்! செயற்கை யழகாகிய நகையை அவர்கள் ஒரு பொருளா மதிக்கமாட்டார்கள். அவர்களுடைய கைகளுக்குத் தானமே சிறந்த அலங்காரம். அவர்களுடைய தலைக்குக் குருபாத கமலங்களைக் குறைவின்றிச் சேவித்தலே அழகாகும். அவர்களுடைய குற்றமற்ற முகத்தினுக்கு, நாவிற் பயிலும் உண்மை வாசகமே உத்தமாலங்காரம். அவர்களுடைய வலிய தோளுக்குப் பராக்கிரமமே அழகாகும். அந் நல்லாருடைய ஆசையற்ற நிறை மனதிற்கு நிஷ்களங்கமே அலங்காரம் ஆகும். அவர்களுடைய காதுக்குக் கேள்வியே அழகாகும். (56)



(கலிவெண்பா)

மன்னுயிரைக் கொல்லாமல் வாய்மையே பேசிபிறர்
பொன்னிடத்தில் இச்சையற்றுப் போற்றுகுரு—தன்னி
பத்தி யதிகரித்துப் பல்லுயிர்க்கும் அன்புசெய்து [டத்தில்
சத்தியநு சாரமாய்த் தானதர்மம்—புத்தியுடன்
செய்துபிறன் தாரஞ்சல் தீவினையா மென்றகற்றிப்
பொய்திகழ்பே ராசைதனைப் போக்கியுயிர்—உய்தலே
மேன்மைபெறு விக்குமென்று மெய்ந்நூற் களினுள்ள
பான்மை யறிக பரிந்து.

(உரை) எவ் வுயிரையுங் கொல்லாமை மேற்கொண்டு, உண்மையே பேசி, பிறர் செல்வத்தில் இச்சையற்று, யாவரும் தொழத்தகும் குருவினிடத்தில் பத்தி மிகுந்து, எல்லா வுயிர்க்கும் இரங்கி, சத்திக்குத் தக்கபடி தானதருமஞ் செய்து, பிறன்மனைப் புகுதல் பாவமென விலக்கி, மோச காரணமான பேராசையை யொழித்து உயிர் வாழ்தலே சிறப்பைத் தருமென்று உண்மை நூல்களிற் கூறியுள்ள விஷயத்தைப் பிரியத்தோடு தெரிந்து கொள்ளக்கடவீர்கள். (57)

(வெண்பா)

தக்கோர் மனமலர்போல் சம்பத்தில் மெல்லியதாம்
ஒக்க விபத்துவரின் ஒங்குமலைப்—பக்கத்தில்
கற்குண்டு போலக் கடினமாம் அன்னோர்கள்
நிற்குநிலை யீதறிக நீ.

(உரை) பெரியோர் மனம், சம்பத்து வந்த காலத்தில் பூப்போல் மிருதுவாயிருக்கும். ஆபத்து வந்தால் மலை யடிவாரத்திற் கற்குண்டுபோலக் கடினமாயிருக்கும். அவர்கள் நிற்கும் இந்நிலையை நீ முன்னிலையில் அறிந்து அதன்படி நடக்கக்கடவாய். ()

(கலிவெண்பா)

ஞாயத் தொழில்செய்தல் நல்லவுயிர்க் காபத்துத்
தோயினுஞ் செய்யாத் தொழிலியற்றற்—கேயுமனங்
கொள்ளா திருத்தல் கொடியோரை வேண்டாமை
தள்ளரிய தோழனையும் தான்வேண்டி—உள்ளமுவந்
தெள்ளள வேனு மிரவாமை என்றென்றும்
விள்ளரு மாபத்து மேவிடினும்—எள்ளவிலா
ஆண்மை குறையாமை ஆன்றோர்க் கநுகூலம்
கேண்மையுடன் செய்து கிளர்ந்திடுதல்—மாண்புளவிந்
நற்குணங்க ளெல்லாமும் நல்லோர்க் கியற்கையாம்
மற்றொருவ ரான்வருவ தன்று.

(உரை) நியாயமான தொழில் செய்து பிழைத்தல், உயிர்க்கு முடிவு வருவதானாலும் செய்யத் தகாத தொழிலைச் செய்வதற்கு மனம் பொருமை, துஷ்டர்களை வணங்கி வேண்டாமை, உயிர்த் தோழனானாலும் அவனிடத்தில் இரவாமை, ஆபத்துக் காலத்தில் மனஞ் சோராமல் துணிவு கொள்ளுதல், பெரியோர்க் கநுகூலமாய் நடத்தல் ஆகிய இந்த நற்குணங்களெல்லாம் நல்லோர்க்கு இயற்கையாகவே இருக்கும். வேறொருவரால் வருவதன்று. (59)

(கலிவெண்பா)

பிறரறியாத் தானம் பிரியமாய்ச் செய்தல்
பிறர்செய் யுதவிப் பெருமை—பிறரறியப்
பேசுதல் தான்செய் பெருநன்றி பேசாமை
மாசுதிக ழப்பிறரை வாய்மதத்தால்—ஏசாமை
செல்வம் வருங்கால் செருக்கின்மை யெல்லாமும்
நல்லோர் இயற்கையென நாட்டு.

(உரை) பிற ரறியாமல் தானம் செய்தலும், பிறர் தங்களுக்குச் செய்த வுதவியின் உயர்வைப் பலரறிய எடுத்துச் சொல்லுதலும், தான் பிறருக்குச் செய்த நன்றியை வெளியிலெடுத்துச் சொல்லிக்கொள்ளாமையும், பிறரை வாய்மதங்கொண்டு வையாமையும், செல்வம் வந்தபோது கர்வ மில்லாதிருத்தலும் ஆகிய எல்லாமும் நல்லோர்க்கு இயற்கையான குணங்களாம். ()

(கலிவெண்பா)

காய்ந்தவிரும் புண்டநீர் காணமற் போமதுவே
ஏய்ந்த கமல விலைமேலே—தோய்ந்ததெனின்
முத்தி னொளியடையும் முந்நீரில் வாழ்கின்ற
முத்திப்பிக் குள்ளதுவே மூடிநி—லைத்திருந்தால்
முத்து மணியாகும் மூதுலகிற் சேர்கின்ற
தத்த மிடத்தினது தன்மைதனக்—கொத்தகுணம்
சேர்ந்துத் தமர்மத் திமரதமர் என்னும்பேர்
ஆர்ந்திருப்பார் மாந்தரெல் லாம்.

(உரை) காய்ந்த இரும்பிற் றோய்ந்த நீர் காணமல் மறைந்துபோகும். அதுவே தாமரை இலைமேற் பொருந்தினல் முத்தின் ஒளியை அடையும். அதுவே கடலிலுள்ள முத்துச் சிப்

பிக்குள் சேர்ந்தால் கெட்டிமுத்து மணியாகும். (அதுபோல) இவ்வுலகில் மனிதர்களும் தாம்தாம் சேர்ந்திருக்கின்ற இடத்தின் தன்மைக் கேற்றபடி உத்தம ரென்றும், மத்திம ரென்றும், அதம ரென்றும் தத்தம் குணத்திற்குத் தக்க பேர் பெறுவார்கள். (61)

(கலிவெண்பா)

தந்தை மனதிற்குச் சந்தோஷம் நன்னடையால்
சந்ததஞ்செய் வோனே தனயனும்—நிந்தையறக்
கொண்டாற்கு நன்மைசெயக் கோருகின்ற—ஒண்டொடி
பெண்டாட்டி செல்வம் பெறும்போதும் திண்டாட்டம்[யே
எய்து பொழுதும் இணக்கம் விடாதவனே
மெய்திகழும் நண்பனும் மேலான—செய்கையுள
இன்னோர்கள் எல்லார்க்கும் எய்தார்கள் புண்ணியர்க்கே
உன்னதமாய்க் கிட்டுவரென் றோது.

(உரை) தனது நல்லொழுக்கத்தால் தந்தையின் மனதிற்குச் சந்தோஷம் ஊட்டுபவனே புத்திர னவான். தனது கணவற்கு நிந்தையற அடங்கிநடந்து நன்மை செய்கிறவளே பெண்டாட்டி யாவாள். செல்வம் வந்தபோதும், கஷ்டம் வந்தபோதும் நட்பை விடாதவனே உண்மை நண்பனவான். இப்படிப்பட்ட மேன்மைக் குணமுடைய இம் மூவரும் எல்லார்க்குங் கிடைக்கமாட்டார்கள்; முன்செய் புண்ணியபலனுடையார்க்கே மேன்மையாய்க் கிடைப்பார்கள். (62)

(கலிவெண்பா)

அடக்கத்தால் நல்லோர்கள் யார்க்குமே லான
இடத்தைப் பெறுவார்கள் என்றும்—திடத்துடனே
மற்றவரைப் பூஷித்து வாழ்த்துவதால் தம்முடைய
கற்றறிவை நன்னினைவைக் காட்டுவார்—உற்ற

பிறர்கருமத் திற்காகப் பேருதவி செய்து
திறமுடன் தம்ம தெரிப்பார்—உறவின்றித்
தம்மைக் கடினமாத் தாறுமா றுவேசும்
அம்மதீ யோர்பால் அரும்பொறுமை—செம்மைபெற
காட்டி யவரைக் கலக்குவிப்பார் இன்னோரை
நாட்டினிற் போற்றுரார் நாட்டு.

(உரை) தமது அடக்கமான குணத்தால் நல்லோர்கள் யார்க்கும் மேலான பதவியைப் பெறுவார்கள். என்றைக்கும் ஒரே விதமாகப் பிறரைப் பெருமைபடுத்திப் பேசி வாழ்த்துவதால் தம்முடைய கல்வியறிவையும் நல்லெண்ணத்தையும் தெரிவிப்பார்கள். பிறருடைய காரியத்திற்காகப் பேருதவி செய்து தமது நன்னடத்தையைத் திறமையோடு விளக்குவார்கள். பகைமை பாராட்டித் தம்மைத் தாறுமாருகத் திட்டும் பொல்லாதவர்களிடத்தும் பொறுமை காட்டி அவர் மனத்தை யுறுத்தச் செய்வார்கள். இப்படிப்பட்டவர்களை உலகத்தில் துதியாதவர்களும் மதியாதவர்களும் யார் இருக்கிறார்கள்? நீ சொல்! பார்க்கலாம். (63)

---

## 7-வது அதிகாரம்

## உதவி

### (வெண்பா)

காய்த்த மரம்வளையக் கார்மேக நீர்கொண்டு
சாய்த்த பளுவிற் றுழுமே—வாய்த்த
பொருளுடையார் கர்வம் பொருந்தார் பிறர்பால்
அருளுடையார் ஆவார் அமர்ந்து.

(உரை) நிறையக் காய்த்துப் (பழுத்த) மரம் வணங்கும்; கரிய மேகங்கள் நீர் நிறைந்துள்ள பளுவால் கீழ் இறங்கும்,

(அதுபோலக்) கல்விப்பொருளில் ... லது செல்வப்பொருளிற் சிறந்த நல்லோர் அகங்காரம் அடை பிறரிடத்திற் பொருந்திய இரக்கம் உடையவர் ஆவார். இதுவே அவர்கள் இயல்பு. (64)

(நேரிசை வெண்பா)

அருளுடைய நல்லோர் அருஞ்செவிக்குத் தோடு
பொருளுடைய நூற்கேள்வி பொன்னின்—உருளல்ல
கைக்குநகை காப்பல்ல காருண்ய தானமவர்
மெய்க்குப்ப ரோபகார மே.

(உரை) உயிர்களிடத்துக் கிருபை பூண்ட பெரியோர்களுடைய மேலான காதுகளுக்குக் குண்டலம், பொன்னாற் செய்த வளையம் அல்ல; நூற்கேள்வி யாகும். அவர்களுடைய கைக்கு நகை, காப்பல்ல; காருண்யத்தோடு செய்யும் தான தருமங்களாகும்; அவர்களுடைய சரீரத்திற்கு ஆபரணம், பிறர்க்குதவி செய்தலே ஆகும். (65)

(வெண்பா)

ஆரும்வேண் டாமலே ஆதித்தன் தாமரையை
நீருள் மலர்த்து நிலாவுந்தன்—ஆரொளியால்
அல்லி மலரை அலர்த்தும்விண் நீர்வழங்கும்
நல்லோர்க் குவமையிவை நன்கு.

(உரை) ஆரும் வேண்டிக்கொள்ளாமலே சூரியன் நீரில் உள்ள தாமரையை மலர்விக்கும்; சந்திரனும் தன்னுடைய குளிர்ந்த கிரணத்தால் அல்லியை அலர்விக்கும்; மேகமும் மழை பெய்யும். இவைகள் (வெகு ஜனோபகாரமாயுள்ள) பெரியோர்களுக்குத் தக்க உவமைகளாம். (66)

(கலிவெண்பா)

தங்குறைதீர் வுள்ளார் தளர்ந்து பிறர்க்குறூஉம்
வெங்குறை தீர்க்கிற்பார் மேன்மக்கள்—தங்குறைதீர்
வுள்ளிப் பிறர்க்குறூஉம் வெங்குறை உள்ளுவார்
எள்ளும் இடைமக்கள் என்ஞான்றும்—கள்ளமுடன்
தங்குறைதீர் வுள்ளித் தவிரார் பிறர்குறையைப்
பொங்குங்கீழ் மக்கள் பொருந்துகுறை—தங்களுக்
கில்லையென் றுலும் பிறர்க்கதை யெய்துவிப்பார்க்
கில்லை யொருபெயரும் இங்கு.

(உரை) தங்களுடைய குறைகளைக் கவனியாமல் பிறருடைய குறைகளைத் தீர்ப்பவரே மேன்மக்கள் (உத்தமர்). தங்களுடைய குறைகளைக் கவனித்தபடியே பிறருடைய குறைகளைத் தீர்ப்பவர் இடையாயார் (மத்திமர்). எந்தக்காலத்திலும் வஞ்சனையாகத் தங்களுடைய குறைகளையே கவனித்துப் பிறருடைய குறைகளைத் தீர்க்காதவர்கள் கீழ்மக்கள் (அதமர்). தங்களுக்கு ஒரு குறையும் இல்லாதிருந்தும், பிறருக்கு அதை உண்டாக்குகிறவர்களை இன்னுரென் றழைக்க, ஒரு பெயரும் இல்லை. (67)

(கலிவெண்பா)

நல்லது செய்வித்தல் நவையது நைவித்தல்
ஒல்லும் மறையுதவி ஓட்டுதல்—நல்ல
குணத்தைப் பலரறியக் கூறுதல் கேடுறின்
தணத்தலின்மை காலத் தருகை—இணக்கங்கூர்
இக்குணங்க ளெல்லாம் இசைந்தநன் னட்பினர்க்காஞ்
சற்குணங்க ளென்றுநீ சாற்று.

(உரை) தம் சிநேகனை நல்ல காரியஞ் செய்யத் தூண்டுதல், அவனிடத்திலுள்ள குற்றத்தை ஒழிப்பித்தல், அவனுக்குப் பிற

நறியாமல் உதவி செய்தல், அவனுடைய நல்ல குணத்தைப் பல ரறியக் கூறுதல், அவனுக்குத் துன்பம் வந்தகாலத்தில், அவனை விட்டு நீங்காமை, அவனுக்குக் காலமறிந்து உதவிசெய்தல் ஆகிய இப்படிப்பட்ட சற்சகவாச குணங்களெல்லாம் உத்தம நட்பினர்க் குப் பொருந்திய நற்குணங்களென்று நீ சொல்லக்கடவாய். (68)

(கலிவெண்பா)

தன்னிடத்தி லேகலந்த தண்ணீர்க்குத் தீம்பால்தன்
இன்குணங்க ளெல்லாமும் ஈந்ததனால்—அந்நீரும்
வெப்பத்தால் பால்படுமா வேதனையைக் கண்டழலில்
ஒப்பி விழுந்தே ஒடுங்குமால்—இப்புதுமை
கண்டபால் தானுந்தன் காதலுறு நண்பனுடன்
மண்டழலில் வீழுங்கால் மற்றுநீர்—அண்டிவந்து
சேருவதால் வெங்கோபந் தீரும் இதுபோலாம்
சீரியர்செய் நட்பின் திறம்.

(உரை) தித்திப்பான பாலானது தன்னை விட்டு நீங்காத தண் ணீர்க்குத் தன்னுடைய நல்ல குணங்களை யெல்லாம் தந்ததனால், அந்தத் தண்ணீரானது வெப்பத்தால் தன் சிநேகனாகிய பால் படும் பரம வேதனையைக் கண்டு பொறாமல் மனமொப்பி அக்னி யில் விழுந்து மாயும். இப் புதுமையைக் கண்ட பால், தானுந் தன் அன்புள்ள நண்பனுடன் நெருப்பில் விழத் தொடங்குகையில், மறுபடியும் அந்தத் தண்ணீர்வந்து சேருவதால், தன்னுடைய கடுங் கோப மாறும். பெரியோர் செய்யு நட்பு இதுபோல இருக்கும். ()

(நேரிசை வெண்பா)

கூடவிடத்தில் ஓர்பால் கரியமால் வாழ்வார்
ஆடலரக்கர் ஓர்பால் அமர்வார்—இடமுடைய

மாமலைகள் ஓர்பால் வடவா னலமொருபால்
தாமிருக்கும் மேன்மைபெரி தாம்.

(உரை) சமுத்திரத்தினிடத்தில் ஒருபக்கம் விஷ்ணுமூர்த்தி பள்ளிகொண்டிருப்பார். ஒருபக்கம் அரக்கர்கள் ஒளிந்து குடியிருப்பார்கள். ஒருபக்கம் மலைகளும் பாறைகளும் இருக்கும். ஒருபக்கம் குதிரைமுக நெருப்பாகிய வடவாமுகாக்கினி இருக்கும். (நல்லதையும் கெட்டதையும் சமமாக் கொள்ளும்) சமுத்திரத்தின் பெருமை சாலச் சிறந்ததாம். (70)

(கலிவெண்பா)

எண்ணற் கருஞ்சன்மம் இவ்வுலகைத் தாங்குகின்ற
அண்ணற் கமடம் அருஞ்சோதி—நண்ணும்
துருவ னெனுமிரண்டே தொல்லுலகில் மற்ற
உருவுதிகழ் எல்லாம் உபகாரம்—ஒருவருக்கும்
செய்யாமை யாலண்டச் செவ்வத்தி யின்கனிக்குள்
நொய்யபுழுப் போல நொடிக்குள்ளே—ஐயமின்றித்
தோன்றி யழிதொழிலே தோய்ந்து விளங்குவார்
ஆன்றபெரி யோர்துணிபி தாம்.

(உரை) நினைத்தற்கரிய பெரிய சன்மங்கள், இவ் வுலகைத் தாங்குகின்ற ஆதிகூர்மாவதாரமூர்த்தியும் சோதிமயமாய் ஆகாயத்தில் தோன்றுகின்ற துருவ நக்ஷத்திரமுமேயாம் (கீழ் ஒன்று, மேலொன்றாக இரண்டு) மற்ற உருவமுடையா ரெல்லாம் ஒருவருக்கும் அழியா உபகாரம் செய்யாமையால், அத்திக்கனியின் உள்ளே இருக்கும் புழுக்கள்போலக் கணப்போதில் தோன்றிச் சந்தேக மில்லாமல் அழிந்துபோகுந் தொழிலையே மேற்கொண்டிருப்பார்கள். இது கற்றுணர்ந்த மேலோர் தீர்மானமாம். (71)

(கலிவெண்பா)

ஆசை யகற்றி அரும்பொறை மேற்கொண்டு
மோசு மதத்தை முறுக்கியழித்—தேசுகின்ற
துற்செய்கை யின்மனத்தைத் தோயா தடக்கிமெய்யே
பற்பலர்க்கும் பேசிப் பணிவுடனே—சற்சனர்கள்
போம்வழியிற் சென்று புலவர்ப் பணிந்தெளியோர்
ஆம்பலர்க்கும் நன்மைசெயற் கார்தரித்துத்—தாம்பகைமை
பூண்டோர்க்கும் நீதி புரிந்தறிவால்—மாண்டோர்க்
கடக்கம் செலுத்தி அரும்புகழ்க்குப் பங்கத்
தொடக்கமி லாத துகள்தீர்—நடக்கையுடன்
வாழ்ந்துதுய ரப்படுவோர்க் கன்பு வழங்குவதே
ஆழ்ந்தறிவின் மேலோர்க் கழகு.

(உரை) ஆசையை நீக்கி அருமையாகிய பொறுமைக்குணம் பூண்டு, பிறரை வஞ்சிக்கு மதத்தை யழித்து, பெரியோர் பழிக்கும் கெட்ட காரியத்தில் மனத்தைச் செலுத்தாமல் அடக்கி, உண்மையே எல்லாரிடத்திலும் பேசி, வணக்கத்தோடு நல்லோர்கள் செல்லும் வழியிற் சென்று, வித்வான்களை வணங்கி, எளியோர்க்கு நன்மை செய்ய விரும்பி, பகைவர்க்கும் நீதி வழங்கி, அறிவிற் சிறந்த பெரியோர்க்கு அடங்கி, புகழ்க்குக் கேடில்லாத குற்றமற்ற ஒழுக்கத்தோடு வாழ்ந்து, துன்பப்படுகிறவர்களிடத்தில் அன்பு செலுத்துவதே அறிவுடையோர்க் கழகாகும். (72)

(கலிவெண்பா)

மனமாதி மூன்றால் மருவுநற் செய்கை
தினமாற்றல் என்கின்ற தெய்வக்—கனமருந்தாற்
பூரணரா யார்க்குமன்பு பூண்டுதவி செய்வதற்குக்
காரணராய் மற்றவர்பாற் காணுகின்ற—ஏராணுவாம்

சற்குண மேனுமதைத் தாமலைபோ லேமதித்து
நிற்குமனங் கொண்ட நிமல—சற்குணர்கள்
இவ்வுலகில் எங்கும் இருப்போர் சிலராவார்
தெய்வகதி யாமிதனைத் தேர்.

(உரை) மனம் காயம் வாக்கு என்ற மூன்றாலும் நற்கருமங்களை நாள்தோறும் விடாமற் செய்தல் என்னும் அமுதத்தால் நிறைந்து, எவராலும் அவர்களுக்கு உதவிசெய்யக் காரணராயிருந்து, அவர்களிடத்தில் காணும் அணுவளவு நற்குணத்தையும் மலைபோல மதித்து, அசையாமல் நிற்கு மனத்தைக் கொண்ட நின்மனலோத்தமர்கள் இவ் வுலகில் எங்குத் தேடினும் சிலரே இருப்பார்கள். இது தெய்வீக காரியமாகு மென்று நீ அறிந்து கொள்ளக்கடவை. (73)

---

## 8-வது அதிகாரம்

## துணிவு

(கலிவெண்பா)

அமுதம் பெறச்சுரர்பா லாழி கடைந்தார்
அமுதம் பெறுமுன்ன ராலம்—திமிதிமென்று
மேலெழுந்த தற்கஞ்சார் மேலா மரதனங்கள்
பாலெழுந்த வற்றைப் பரிந்துமன மாலெழுந்து
நாட்டார் அதுகாறும் நாடி எவராலும்
தேடா அமுதம் திரளுமட்டும்—வாடார்
பிடித்த பிடிவிடார் பெற்றிபோல் நெஞ்சந்
தடித்த துணிவுடையார் தாமும்—முடித்தன்றி
எண்ணி முயல்கருமம் எப்படியுங் கைவிடார்
மண்ணிலே நின்ற வழக்கு.

(உரை) அமுதம் பெறும்பொருட்டுத் திருப்பாற்கடல் கடைந்த தேவர்கள் அமுதம் பெறுவதற்குமுன், ஆரவாரத்தோடு விஷங் கிளம்பிற்று. அதற் கவர்கள் ஒரு சிறிதும் அஞ்சவில்லை. ஒரு பக்கத்தில் இரத்தினங்கள் தோன்றின; அவைகளை அவர்கள் விரும்பினார் இல்லை; அதுவரையில் யாராலும் தேடா அமுதம் திரளுமட்டும் மனஞ் சோராமல் ஒரே பிடியாய் இருந்த தன்மைபோல: துணிவு மிகுந்தவர்கள் தாமேற்கொண்ட காரியத்தை முடித்தாக் அன்றிக் கைவிடமாட்டார்கள். இது உலக வழக்கு. (74)

(வெண்பா)

அதமரிடை யூறஞ்சி ஆங்கா ரியத்தின்
விதமறிந்தா ரம்பியார் விக்ன—மதுவரின்
விட்டொழிப்பார் மத்திமர் விக்கினம் வந்தாலும்
விட்டொழியா ருத்தமர்மெய் வேர்த்து.

(உரை) அதமர், இடையூற்றுக் கஞ்சி ஆகும் காரியத்தின் விதத்தை யறிந்து ஆரம்பிக்கமாட்டார்கள். மத்திமர், விக்கினம் வந்தால் அதை விட்டொழிப்பார்கள். உத்தமர், விக்கினம் வந்தாலும் சரீரம் இளைத்து, அல்லது மனம் வெறுத்து அதைக் கைவிடமாட்டார்கள். (75)

(பஃறொடை வெண்பா)

காரியஞ் சாதிக்குங் கருத்துடையோன் பூசயனம்
ஓரிடத்தில் கொள்ளுவான் ஓரிடத்தில் பஞ்சுமெத்தை
நேரிடினும் பள்ளிகொள்வான் நிண்ணயமாய்க் காய்கறிகள்
சேரவுண்பான் ஓரிடத்தில் தெண்ணீரா காரமுண்பான்
ஓரிடத்தில் கந்தை உகந்தணிவான் ஓரிடத்தில்
சீரிய பட்டணிவான் சேர்ந்தமற் றோரிடத்தில்
கோரிய நன்மைவந்து கூடின் மகிழ்ச்சியும்

மூரிய தீமைவந்து மூளின் விசனமும்
பூரியனுய்க் கொள்ளான் பொருந்துந் துணிவுடனே
நேரியனுய் வாழ்வான் நிசம்.

(உரை) எடுத்த காரியத்தை முடிக்கும் எண்ணமுடையவன்: ஓரிடத்தில் தரையிற் படுப்பான்; ஓரிடத்திற் பஞ்சு மெத்தையிற் பள்ளிகொள்வான்; ஓரிடத்தில் ஒழுங்காகக் காய்கறி வகைகளோடு உண்பான்; ஓரிடத்தில் நீராகாரம் உண்பான்; ஓரிடத்தில் கந்தை கட்டிக்கொள்வான்; ஓரிடத்தில் பட்டணிவான்; நன்மை வந்தால் சந்தோஷமும், தீமை வந்தால் விசனமும் அற்பர்களைப் போலக் கொள்ளமாட்டான்; தைரியத்தோடு ஒழுங்காய் வாழ்வான்; இது நிஜம். (76)

பஃறொடை வெண்பா

நிந்தனைசெய் தாலுமன்றி நேராக வாழ்த்திடினும்
சந்ததமுஞ் செல்வமிகச் சார்ந்தாலும் தீர்ந்தாலும்
விந்தையுடன் மரணம் மேவிடினும் வாழ்ந்திடினும்
சிந்தை துணிந்த திறமுடையார் நேர்வழியில்
அந்தமுடன் செல்வார் அதுதப்பி யோரடியும்
பந்தமுடன் வையாரப் பால்.

(உரை) தம்மை யொருவர் நிந்தித்தாலும் அல்லது வாழ்த்தினும், தமக்குச் செல்வம் வந்தாலும் அல்லது வறுமை வந்தாலும், வாழ்வு வந்தாலும் மரணம் வந்தாலும் மனத்துணிவு கொண்ட மகான்கள் நேர் வழியில் நடப்பார்கள். அல்லாமல், அது தப்பி யோரடியும் அப்பால் வைக்கமாட்டார்கள். (77)

(நேரிசை வெண்பா)

யார்மனம்பெண் ணாசைக் கழியாதோ கோபத்தீ
யார்மனத்தைத் தாக்கி எரிக்காதோ—யார்மனத்தை

ஆசைக் கயிறசைத்தப் பாலிழுக்கா தோ அன்னோன்
மாசக்தி யான்ஜயங் கொள்வான்.

(உரை) எவன் மனம் பெண்ணாசையால் வாடாதோ, எவன் மனம் கோபத்தீயால் பற்றி யெரியாதோ, எவன் மனத்தை ஆசைக் கயிறு அசைத்து இழுக்காதோ, அவன் மிகுந்த வல்லமை யுள்ளவன்; எல்லாவற்றையும் வெற்றி கொள்வான். (78)

(நேரிசை வெண்பா)

நெருப்பைத் தலைகீழ் நிறுத்துப் பிடித்துந்
திருப்பா ததன்கொழுந்தைச் சிந்தை—இருப்பாம்
துணிவுடையோற் கெத்தனைதான் துன்பம் வரினும்
பணிவுடையோ னாகான் பயந்து.

(உரை) நெருப்பைத் தலைகீழாய் நிறுத்துப் பிடித்தாலும் அதன் சுவாலை கீழே திரும்பாது; (அதுபோல) சிந்தையில் வீர் போதும் துணிவுடையோனுக்கு எத்தனைதான் துன்பங்கள் வந்தா லும் பிறரை வணங்கமாட்டான். (79)

(நேரிசை வெண்பா)

மலையுச் சியிலேறி மண்மேல் விழலாம்
தலையா யிரத்தான்வாய் தன்னில்—நிலையாநங்
கையை யிடலாங் கனலிற் புகலாங்கேள்
ஏயநற்கு ணம்விடலா கா.

(உரை) மலைமே லேறிக் கீழே விழுந்தாலும் விழலாம். ஆதி சேடன் வாயில் நிலையாக நமது கையை இடலாம். நெருப்பிற் குளிக்கலாம். ஆனால், நமது நற்குணத்தை மட்டும் விடலாகாது. ஐயனே! இதை நீ கேட்டுக் கவனிப்பாயாக. (80)

(நேரிசை வெண்பா)

நற்குண வானுக்கு நன்னீராம் அக்கினியும்
பொற்சிகர மேரு பொடிக்கல்லாம்—பற்கூர்ந்த
சிங்கம் சிறுமானும் செங்கணர வம்பூவாம்
சிங்கிதீம் பாலாஞ் சிறந்து.

(உரை) நல்ல குணமுடையவனுக்கு நெருப்புந் தண்ணீராகும்; பொற்சிகர மேருமலையும் பொடிக் கல்லாகும்; கூரிய பல்லுடைய சிங்கமும் சிறு மானுகும்; கோபக் கண்ணுடைய பாம்பும் பூவாகும்; விஷமும் தித்திப்பான பாலாகச் சிறந்திருக்கும். (81)

(நேரிசை வெண்பா)

குறைத்த மரந்துளிர்ச்சி கொள்ளுவதைத் தேய்ந்து
மறைத்த மதிவளர்ச்சி வாய்ந்து—நிறைப்பதனைக்
காணும் பெரியோர் கவலார்கள் துன்பமெய்தின்
ஈணு மவர்க்கதுதான் நைந்து.

(உரை) வெட்டின மரம் தளிர்ப்பதையும், தேய்ந்து குறைந்து போன சந்திரன் வளர்ந்து நிரம்புவதையும் காணும் பெரியோர்கள் துன்பம் வந்தால் மனம் வருந்தார்கள். அவர்களுக்கு அது பயந்து வருந்தும். (82)

(பஃறொடை வெண்பா)

செல்வனுய் நல்லோனுய்த் தீரனுய் இன்சொலனுய்
ஒல்லும் வகையாலே உத்தமர்க் கீவோனுய்
நல்லகல்வி மானுய் நயகுணனுய்ப் பொன்னனுய்
சொல்லரிய ஞானியாய்த் தோமிலா மோனியாய்
வல்ல முனிவனுய் வாட்டுமுனி வற்றவனுய்
வெல்லுஞ் சமர்த்தனுய் மேவும் பொறுமையனுய்த்

தொல்லையி லாதமனத் தூயதர்மஞ் செய்வோர்க்குப்
பல்லலங் காரமிவை பார்.

(உரை) செல்வமுடையவனாய், நல்லவனாய், தைரிய முடையவனாய், இன்சொல் பேசுபவனாய், சொல்லுதற்கரிய ஞானியாய், குற்றமற்ற மௌனியாய், நல்ல கல்விமானாய், நயவார்த்தை சொல்பவனாய், பணக்காரனாய், தன்னால் இயன்ற விதங்களில் சற்சனர்க்குக் கொடுப்பவனாய், செய்தவத்திற் சிறந்த முனிவனாய், கெடுக்குங் கோபம் அற்றவனாய், வெற்றிகொள்ளும் பலசாலியாய், பொறுமை யுடையவனாய் வேறொரு தொல்லை யில்லாமல் சுத்த மனத்தோடு நல்ல தானஞ் செய்வோர்க்கு மேற்சொன்ன நற்குணங்களெல்லாம் பலவிதமான ஆபரணங்க ளாகும். (83)

---

## 9-வது அதிகாரம்

## தெய்வம்—கடவுள்

(கலிவெண்பா)

கோட்டை சுவர்க்கம் குருவியாழ னஞ்சுரர்கள்
வாட்டமிலா வீரர் வயிரங்கைந்—நீட்டுகின்ற
ஆயுதமால் என்றும் அநுக்கிரகஞ் செய்கடவுள்
காயுமத மாபகைவர் கால்வாங்கி—ஓயுமா
செய்யுமயி ராவதமாஞ் சீர்களிவை பெற்றிருந்தும்
உய்யுமா றில்லாமல் உம்பர்கோன்—மெய்யாய்ப்
பகைவர் தமக்கஞ்சிப் பாறினன் என்றால்
தொகையாம் பலங்களொரு தூய—வகையாகுந்
தெய்வபல மின்றிச் சிறப்படையா என்றுசொல
ஐயமில்லை ஐயமில்லை ஆம்.

(உரை) சுவர்க்கமே கோட்டை; வியாழபகவானே குரு; தேவர்களே சேனாவீரர்; வயிரமே கையாயுதம்; திருமாலே அநுக்கிரகஞ் செய்யுங் கடவுள்; அயிராவதமே பகைவரை ஓட்டும் யானை. இப்படிப்பட்ட சிறப்புகளைப் பெற்றிருந்தும் தேவேந்திரன் பிழைக்கும் வழி தெரியாமல் பகைவர்க்கஞ்சி ஓடினன் என்றால் பலவித பலங்கள் கூடியிருந்தும் தெய்வபலம் இல்லாவிட்டால், சிறப்பில்லை. இதற்கு யாதொரு சந்தேகமும் இல்லை. (84)

(நேரிசை வெண்பா)

பாம்பிருந்த பெட்டியொன் றிற் பாரா தெலியொன்று
தூம்புசெய்து செல்லச் சுடுபசியாற்—சாம்பியபாம்
பவ்வெலியைத் தின்றுபின்னர் அவ்வழியே தப்பியதால்
தெய்வபலம் ஆரறிவார் தேர்ந்து.

(உரை) பாம்பிருந்த பெட்டியில் அதைப் பாராத எலியொன்று துளைசெய்து உட்சென்றது. அதற்குள் சில தினங்களாக ஆகாரமின்றி வருந்தின பாம்பு அவ் வெலியைத் தின்று பசியாறி அவ் வழியே தப்பிப் போய்விட்டது. ஆகையால், தெய்வ பலத்தை யாரால் அறிய முடியும்? (85)

(வெண்பா)

பந்துகீழ் வீழ்ந்துமேல் பாய்வதுபோல் சற்குணன்தான்
நொந்துதன் னிலைபோய் நுடங்கிடினும்—வந்துவிடும்
முன்னிலைக்குப் பச்சைமண் மொத்தைபோல் துர்க்குணன்
முன்னிலைக்கு வாரான் முயன்று. [தான்

(உரை) பந்தானது கீழே விழுந்து மேலே பாய்வதுபோல, சற்குணன் நொந்து தன்னிலையில் இழிந்தாலும் உடனே முன் னிலைக்கு வந்துவிடுவான். பச்சைமண் மொத்தைபோல, துர்க்

குணன் தன்னிலையில் தாழ்ந்தால் அப்படியே அழுந்திவிடுவான் (முன்னிலைக்கு வரமாட்டான்.) (86)

(வெண்பா)

ஆடைத் தலையொருவன் ஆதித்தன் சூடுபொறான்
கோடைப் பனைநிழலிற் கூடினான்—நீடுமதன்
செங்காய் தலைமேல் தெறித்திறந்தான் தெய்வபலம்
இங்கா ரறிவா ரியம்பு.

(உரை) தலையில் துணி சுற்றிய ஒருவன் கோடை வெய்யில் பொறுமல் ஒரு பனைமர நிழலிற் றங்கி, அங்கு அதன் காய் திடீரென்று அவன் தலைமேல் வீழ்ந்ததனால் மாண்டான். ஆகையால், தெய்வ பலத்தை யாரால் அறிய முடியும்? (87)

(வெண்பா)

பாம்பு புலிபறவை பாசத்தாற் கட்டுண்ணல்
ஆம்புத்தி மான்வறுமை ஆர்ந்திடுதல்—பாம்பிரண்டு
சூரியனைச் சந்திரனைத் தோய்ந்துபற்றல் தெய்விக
காரியங்க ளென்றுணர்ந்தேன் கண்டு.

(உரை) பாம்பும் புலியும் பறவையும் மந்திர தந்திர சூத்திரங்களாற் கட்டுண்ணுதலும், புத்திமான் வறுமை யடைதலும், இராகு கேதுக்கள் சூரிய சந்திரரைப் பின் தொடர்ந்து பிடித்தலும் தெய்வீக காரியங்க ளென்று கண்டு தெரிந்துகொண்டேன். (88)

(வெண்பா)

புலிக்கலங் காரப் புருஷனையுண் டாக்கித்
தவிக்கச்செய் தெய்வம் சால்பு—கவிக்கும்
அவனை அழிக்கின்ற தந்தோ அதற்குக்
கவனங் குறைவோ கழறு.

(உரை) சற்குண நிரம்பிய அலங்கார புருஷனை யுண்டாக்கி யும் உடனே அவனைத் தெய்வம் அழிக்கின்றது. அதற்குக் கொஞ்சமேனும் அவன் விஷயத்தில் ஞாபகம் இல்லையோ? (89)

(வெண்பா)

அமுதத் திருப்பிடம் ஔஷத ராஜன்
அமித வயித்திய ரார்வார்—இமவான்
மருகற் கணியா மதியுங் கயநோய்
பெருகிவிதி யாலழிவான் பீடு.

(உரை) சந்திரன் அமுதத்துக் கிருப்பிடம்; மூலிகைகளுக்கு அரசன்; அநேக வயித்தியர் அவனைச் சூழ்ந்திருப்பார்கள்; சிவனுக்கு ஆபரண மாவான். இப்படியிருந்தும் அவன் க்ஷயநோய் அதிகரித்துத் தெய்வ விதியால் பெருமை யழிவான். (90)

(வெண்பா)

தெய்வக் குயவன் தெரியா தெனக்கிங்கென்
செய்யமண் மொத்தையென் சிந்தையைச்—செய்துதன்
கையிலே துன்பக் கடுந்தண்டங் கொண்டடித்
தையய சுழற்றுமன அச்சு.

(உரை) தெய்வக் குயவன், இங்கு என்ன செய்வதற் கென்று எனக்குத் தெரியவில்லை! என் சிந்தையை மண் மொத் தையாக்கித் தன் கையிலே துன்பமென்னுங் கடுங்கோல் கொண் டடித்து, என் மனச் சக்கரத்தைச் சதா சுழற்றிக்கொண் டிருக் கிறான். (91)

(வெண்பா)

பெரியோர்க்குத் துன்பம் பிறப்பிக்க எண்ணும்
தெரியாத் தனத்தாலே தெய்வம்—உரியகற்ப

கால மலைபோல் கயவர் சலிப்பரிவர்
சாலச் சலிப்பரோ தாம்.

(உரை) அறிவில்லாமையால் தெய்வம், பெரியோர்க்குத் துன்பமூட்ட எண்ணும். கற்பாந்த காலத்திற் சலிக்கும் குல மலைகள்போல மூடர் சலித்து நிலை பெயர்வார்கள். இவர்கள் என்றும் சலிப்பரோ? பெரியார் என்றும் சலியார். (92)

(வெண்பா)

சாதகத்தின் வாயிற் சாருஞ் சிலதுளிபோல்
பாதக மின்றிவிதி பாலிக்கும்—ஆதலினால்
இன்னாருக் கின்னபடி என்றதெய்வ வல்லமையின்
பின்னாருக் காராலென் பேசு.

(உரை) சாதகப் பறவையின் வாயில் விழும் சில நீர்த்துளிகள் போல உயர்வு தாழ்வின்றித் தெய்வவிதி எல்லார்க்கும் தக்கபடி பலங் கொடுக்கும். ஆகையால், இன்னாருக் கின்னபடி யென் விதிக்கும் அந்தத் தெய்வ வல்லமைக்குப் பிறகு, யாரால் யாருக் கென்ன ஆக்கமோ கேடோ விளைக்க முடியும்? (93)

---

## 10-வது அதிகாரம்

## ஊழ்

(கலிவெண்பா)

தேவர்க்கு வந்தனஞ் செய்கின்றேன் அன்னாரும்
ஓவுதலில் தெய்வத்திற் குட்பட்டு—மேவுதலால்
தெய்வம் வணங்குகின்றேன் தெய்வமூ ழின்படியே
செய்வதால் ஊழ்வணக்கஞ் செய்கின்றேன்—எய்துபலன்

ஊழின் படியதனால் உம்பரால் தெய்வத்தால்
சூழும் பயனில்லை தொல்வினையில்—ஆழும்
அமரரும் தாண்டற் கரிதாமூழ் தன்னை
அமர்ந்து தொழுதிடுவேன் யான்.

(உரை) தேவரை வணங்குகின்றேன். தேவரும் கெடாத தெய்வபலத்திற் குட்பட்டு நிற்பதால் தெய்வத்தை வணங்குகின்றேன். தெய்வம் ஊழின்படி நன்மை தீமை நமக்குச் செய்வதால் ஊழை வணங்குகின்றேன். நமக்கு எய்தும் பலன்கள் ஊழின்படியாகையால் தேவராலுந் தெய்வத்தாலும் உண்டாகும் பலன் ஒன்றுமில்லை. ஊழ்வினையில் ஆழும் தேவரும் தாண்டற் கரிதாகிய ஊழை விரும்பித் தொழுவேன். (94)

(பஃறொடை வெண்பா)

அண்ட[illegible]டயில் அயனெதனு லேயிருப்பான்
விண்டுவெத னாற்பரியாய் மேவுதற் கேற்பட்டான்
பண்டுருத்தி ரன்தான் பலியோ டெதனாலே
கொண்டிரந்தான் சூரியனுங் கோளமாய் வானத்தில்
அண்டியெத னாற்றிரிவான் அத்தகைய வூழ்வினைக்குத்
தெண்டனிட்டு வந்தனஞ்செய் வேன்.

(உரை) அண்டமத்தியில் பிரமன் எதனால் பொருந்தியிருப்பான்? விஷ்ணு எதனால் கற்கியாய் மேவுதற்கு ஏற்பட்டான்? ஆதியில் உருத்திரன் எதனால் பிச்சையோடெடுத்து இரக்கப் புறப்பட்டான்? சூரியனுங் கோளாகாரமாய் எதனால் ஆகாசத்திற் சஞ்சரிப்பான்? அப்படிப்பட்ட ஊழ்வினைக்குத் தெண்டன் இட்டு வந்தனஞ் செய்வேன். (95)

(பஃறொடை வெண்பா)

எண்ணின எண்ணமுனக் கீடேற வேண்டுமென்றால்
மண்ணினிற் றீய மனிதரை நல்லோராய்
நண்ணுமொரு மூடனை நல்விகல்வி மானாக
எண்ணுதலில் சத்துருவை ஏய்ந்தமன மித்திரனாய்
ஒண்ணும் புலப்பொருளை ஓங்குபுலன் தானாக
அண்ணும் விடத்தை அமுதமெனப் பேதமின்றிப்
பண்ணுமருஞ் செய்கை பழகுவதற் கன்றிவே
றெண்ணியிடர்ப் பட்டுவருந் தேல்.

(உரை) எண்ணின எண்ணம் உனக்குப் பலிக்கவேண்டுமானால், உலகில் கெட்டவர்களை நல்லவர்களாகவும், மூடனை வித்வானாகவும், எண்ணாத சத்துருவை மித்திரனாகவும், ஐம்புலப் பொருளை அவைகளேயாகவும், விஷத்தை அமுதமாகவும் பேதமின்றிச் செய்யும் அருங் காரியத்திற் பழகுவதற்கல்லாமல் வேறு நினைத்து வருந்தாதை. (96)

(வெண்பா)

நற்செய்கை நண்ணினால் நல்லமெத்தை மேடைகளும்
உற்றவனப் போங்குகுலத் தொண்டொடியார்—பற்பலரும்
செந்தா மரைத்திருவும் சேர்வார்கள் இல்லையேல்
அந்தோ அகன்றுபோ வார்.

(உரை) நற்காரியஞ் செய்தால், நல்ல மெத்தை மேடைகளும், அழகு மிகுந்த அநேகங் குலக்கன்னியரும் திருமகளும் சேர்வார்கள். தீச்செயல் செறியுமேல் எல்லாரும் விட்டு நீங்குவார்கள். (97)

(வெண்பா)

வாசித் தறிந்தோன் வகையாய் ஒருகருமம்
யோசித்துச் செய்கழுன் யோசியான்—மோசம்
அடைவான் அவனை அவமானம் அம்புப்
படைபோல வாட்டுநன்ருய்ப் பாய்ந்து.

(உரை) வாசித்தறிந்தவன் நன்ருய் ஆலோசித்து ஒரு காரியத்தைச் செய்யக்கடவன்; அப்படி யோசியாதவன் மோசம் போவான்; அவமானமும் அவனை விடாமற் சேர்ந்து அம்பு போற் பாய்ந்து வருத்தும். (98)

(வெண்பா)

கன்மநில மாம்பாரதக் காசினியி லேபிறந்தும்
சன்மசா பல்யத் தவஞ்செய்யா—மன்பதைகள்
தண்ணீர்மாக் கூழுக்குச் சந்தனத்தைக் கொண்டெரிக்கும்
உண்ணீரில் லானையொப் பார்.

(உரை) கன்ம பூமியாகிய இந்தப் பாரதகண்டத்திலே பிறந்தும் சன்மம் ஈடேறத் தவஞ் செய்யா மாந்தர்கள் தண்ணீர் கலந்த மாக் கூழாக்குவதற்குச் சந்தனக் கட்டையிட் டெரிக்கும் அறிவில்லாதவனை யொப்பார்கள். (99)

(வெண்பா)

ஓங்கறிவு கல்வி உருவங் குலமுயற்சி
தாங்குந் தொழிலால் தனம்வருமோ—ஆங்கானும்
முன்செய் தவத்தால் முழுப்பலனுண் டாகுமாம்
தன்பருவத் தாற்பழுத்தல் போல்.

(உரை) சிறந்த அறிவு, கல்வி, அழகு, குலம், முயற்சி இவைகளோடு கூடிய காரியத்தால் தனம் வந்துவிடுமோ? ஆம்;

வாரா. மரங்கள் தங்கள் பருவத்தால் பழுத்தல்போல, முன் செய் தவத்தினாலே முழுப்பலன் கிடைக்கும். (100)

(கலி வெண்பா)

சேவித்தும் வர்த்தகம் செய்தும் பயிரிட்டும்
பாவித்தும் பன்னூல் படித்துணர்ந்தும்—மேவி
முயற்சிபல செய்தும் மூவா அதிர்ஷ்டம்
உயர்ச்சியின்றி ஓர்பலனும் உண்டோ—அயர்ச்சியின்றி
அன்னதுதான் எய்துமேல் ஆர்போய்த் தடுத்தாலும்
உன்னுபல னுண்டாம் உயர்ந்து.

(உரை) சேவித்தும், வர்த்தகஞ் செய்தும், பயிரிட்டும், பிறரை உயர்வாகப் பாவித்தும், பல நூல் படித்தும், பன் முயற்சி செய்தும், கெடாத நல்லதிர்ஷ்ட உயர்ச்சியின்றி ஒரு பலனும் உண்டாகாது. தாழ்க்காமல் அது வந்து சேருமானால், ஆர் தடுத்தாலும் நில்லாமல் நினைத்த பலன் கிடைக்கும். (101)

(வெண்பா)

ஆனவதிர்ஷ்டத்தால் அடவி நகரமாம்
ஆனவதிர்ஷ்டத்தால் அகிலமும்—ஊனமிலாச்
சுற்றமாம் பூமியெலாந் தொட்டவிடம் பொன்மணியாய்
மற்றொப்பி லாமம் வரும்.

(உரை) அதிர்ஷ்டம் கூடி வருவதால் காடும் கடி நகரமாகும்; எல்லாரும் பந்துக்க ளாவார்கள்; பூமியில் கைபட்ட விடங்களி லெல்லாம் பொன்னும் மணியும் புதை பொருளாய்க் கிடைக்கும். ()

பர்த்ருஹரி நீதி சதகம்
மூலமும் உரையும்
முற்றுப் பெற்றன.

---

First Edition] [1000 Copies.

பரமபதி துணை

பர்த்ருஹரி நீதி சதகத்தின்

# செய்யுள் முதற்குறிப்பு அகராதி

பர்த்ருஹரி நீதி சதகத்தின்
செய்யுள் முதற்குறிப்பு அகராதி முற்றிற்று.

| | அ. | ப. |
|---|---|---|
| ஆத்திசூடி உரை | 0 | 9 |
| கொன்றைவேந்தன் உரை | 0 | 9 |
| வெற்றிவேற்கை உரை | 1 | 0 |
| வாக்குண்டாம் உரை | 1 | 3 |
| நல்வழி உரை ... | 1 | 6 |
| நன்னெறி உரை ... | 1 | 6 |
| ஷை நீதிநூற்கொத்துஉரை | 8 | 0 |
| ஷை 6 நூலின் மூலமும், நீதிநெறி விளக்க மூலமும், அவற்றின் இங்கிலீஷ் மொழிபெயர்ப்பும் அடங்கிய நீதிநூற்றிரட்டு ... | 8 | 0 |
| அறப்பளீசுர சதகம் ... | 3 | 0 |
| குமரேச சதகம் ... | 3 | 0 |
| திருவேங்கட சதகம் ... | 3 | 0 |
| தண்டலையார் சதகம் ... | 2 | 0 |
| கோவிந்த சதகம் ... | 0 | 9 |
| எம்பிரான் சதகம் ... | 1 | 0 |
| சிவசங்கர சதகம் ... | 0 | 9 |
| ஷை 7 சதகமும் அடங்கிய சதகத்திரட்டு1-ம்பாகம் | 12 | 0 |
| கைலாசநாதர் சதகம் ... | 2 | 0 |
| ஜெயங்கொண்டார் சதகம் | 2 | 0 |
| குருநாத சதகம் ... | 1 | 0 |
| அவையாம்பிகை சதகம் | 2 | 0 |
| அருணாசல சதகம் ... | 1 | 0 |
| அண்ணாமலைச் சதகம் ... | 2 | 0 |
| வடவேங்கடநாராயணசதக | 2 | 0 |
| தொண்டைமண்டலசதகம் | 2 | 0 |
| கோகுல சதகம் ... | 0 | 9 |
| திருத்தொண்டர் சதகம் | 2 | 0 |
| ஷை 10 சதகமும் அடங்கிய சதகத் திரட்டு2-ம்பாகம் ரூ. 1 | | |

| | அ. | ப. |
|---|---|---|
| ஏசுவை நம்பினால் ரக்ஷிப் படையலாமா? ... | 0 | 6 |
| கிறிஸ்தவர் விடை மறுப்பு | 4 | 0 |
| விவிலிய குற்சிதம் ... | 2 | 0 |
| ஷை திக்கார கண்டனம் | 2 | 0 |
| சிவநாம விளக்கம் ... | 1 | 6 |
| ஏசுமனிதனோ, கடவுளா? | 2 | 0 |
| விக்ரஹாராதனமுதலியன | 1 | 0 |
| பைபில் யார் எழுதியது? | 1 | 0 |
| சிவனுந் தேவனும் என்னும் தீய நாவுக்கு ஆப்பு ... | 1 | 0 |
| கிறிஸ்தவர் ஞானோதய ஆபாச விளக்கம் ... | 0 | 6 |
| புரோடஸ்டாண்டு கிறிஸ்து மத கண்டனம் ... | 0 | 9 |
| வஜ்ஜிரடங்கம் ... | 1 | 0 |
| கிறிஸ்துமதத் திரியேகத்துவ ஆபாசம் ... | 0 | 6 |
| இந்துஜெய பேரிகை: 4 பாகமும் ... | 3 | 9 |
| பைபிலும் உலக சிருஷ்டியின் ஆபாசமும் ... | 0 | 9 |
| கிறிஸ்துமதத்தின் குருட்டு நம்பிக்கை ... | 0 | 3 |
| பாதிரிமார் ஸ்கூலில் பெண்கள் படிக்கலாமா? ... | 0 | 3 |
| ஆரியப்பெண்களுக்குக் கல்வி கற்பிக்கும் முறைமை | 0 | 6 |
| ஷை 18 நூலும் சேர்ந்தது ரூ. $1\frac{1}{2}$ | | |
| சைவதூஷண பரிகாரம் | 4 | 0 |
| பிரசங்க பீடிகை, கிறிஸ்து மத கண்டன வஜ்ஜிர குடாரம் ... ... | 1 | 6 |

பஞ்சதந்திர பாடற்கதை என வழங்கும்

# பஞ்சதந்திரம் செய்யுள்

விலை அணா 8

பஞ்ச தந்திரம் என்பது இனிய கதைகள் மூலமாக நீதிகளைப் போதிக்கும் ஓர் அரிய நூல். பஞ்ச தந்திரம் என்றால் ஐந்து உபாயம்: அதாவது, பகைவரை ஜயிப்பதற்கு உபயோகிக்க வேண்டிய ஐந்து வகை உபாயங்களை உணர்த்தும் நூல் என்பது பொருள். இதில் அடங்கியுள்ள ஒவ்வொரு கதையும் அறிவை விருத்தி செய்யக்கூடிய நீதிகளைக் கொண்டிருப்பதால், இந் நூல் உலகத்தில் வழங்கும் பல பாஷைகளில் மொழிபெயர்க்கப்பட் டிருக்கிறது. இதற்கு முதனூல் ஸம்ஸ்கிருத பாஷையில் உள்ளது; இது தமிழில் முன்னர் வசன ரூபமாய் மொழிபெயர்க்கப்பட்டு, பின்னர் கல்வி பயிலும் சிறுவர் சிறுமியர் இதி லடங்கிய கதைகளைச் சுலபமாக மனப் பாடம் பண்ணத்தக்க விதமாய், எல்லோருக்கும் விளங்கத் தக்க எளிய நடையில் இனிய சந்தம் அமைந்த விருத்தப் பாக்களால் அமைக்கப்பட்டு, பஞ்சதந்திர பாடற் கதை என வழங்கி வருகிறது. இது விவேக சிந்தாமணியைப் போல் விவேகத்தைப் போதிக்கும் அரிய நூலாய் இருப்பதால், இப் பஞ்சதந்திர கதையானது வித்தியார்த்திகளுக்கு வெகு அத்தியாவசியகமான நூலாகும். [பஞ்ச தந்திர வசனம்: விலை அணா 10]

# விவேக சிந்தாமணி

மூலமும் உரையும்: 2 பாகமும் [விலை ரூபா 1-2-0]

'விவேக சிந்தாமணி' என்பதற்கு விவேகத்தைத் தருவதாகிய சிந்தாமணி போன்ற நூல் என்று பொருள். 'சிந்தாமணி' என்பது வேண்டியவற்றைத் தரும் சிறப்புற்ற ஒருவகைத் தெய்வமணி. இம் மணி வேண்டியவற்றை யெல்லாம் தருவதுபோல், இந் நூலும் வேண்டிய விவேகங்களை யெல்லாம் தரக்கூடியதா யிருத்தலின், இதற்கு 'விவேக சிந்தாமணி' என்னும் பெயரிடப்பட்டிருக்கின்றது. இந் நூல் சிறுவரும் கற்றுணர்வதற்குத் தகுதியான தெளிவான பாடல்களை யுடையதாகவும், நீதிகளை எளிதிற் போதிக்கக் கூடியதாகவும் இருத்தலால், இது கல்வி பயிலும் மாணவர்களுக்கும், மற்றவர்களுக்கும் மிக உபயோகமான நூலாகும்.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

திருமாணிக்கமாமலை

# திருத்தொண்ட சதகம்.

---

இஃது

காஞ்சீபுரத்தில் தலமுற்றுறென்னும்

ஸ்ரீமயேசுரகுலதிலகராகிய திருப்பாண்டிக்கொடுமுடி

மலைக்கொழுந்து நாவலரவர்களால்

இயற்றப்பட்டு,

சென்னை:

மதராஸ் ரிப்பன் அச்சியந்திரசாலையில்

பதிப்பிக்கப்பட்டது.

---

1914

விலை அணா 2

குருவேதுணை.

திருநெல்வேலி புதுத்தெருவிலிருந்த ம-ா-ா-ஸ்ரீ, வித்வான்

அழகிய சொக்கநாதபிள்ளையவர்க ளியற்றிய

# சிறப்புப்பாயிரம்.

கோச்சகக்கலிப்பா.

பொன்னிநதிச் சோணாட்டிற் காவிரிப்பூம் பட்டினத்துச்
சென்னியெனு மன்னிகலாற் சிந்தைகொளாது சார்வணிகர்
முன்னியவா றுதரித்துத் தில்லைமூ வாயிரர்போற்
பன்னிருவ ரெனவவரைப் பார்சொலச்சேர்த் துறைபரமன். (௧)

தோட்போக்கி வாணனைமாய்த் தவன்றுருவப் பாதலக்கீழ்த்
காட்போக்கி நின்றபிரான் றனிநுதற்கட் டழற்படையால்
வேட்போக்கி மலைமகளை மணந்தருளை வெற்பனைய
[illegible]ட்போக்கி சிவஞைதயெனு மாணிக்க மலையமர்ந்தோன். (௨)

சிலைக்கொழுந்து முடங்குகங்கை பாற்றிநெடுங் கிற்றுமதிக்
[illegible]க்கொழுந்து படருமுடித் தழும்பர்திருக் கழலிணைக்கே
யிலைக்கொழுந்து மலரின்வகை புலருமென வெழிற்கச்சி
மலைக்கொழுந்து நாவலன்பா மாலைதொடுத் தணிந்தனனால். (௩)

சாத்திடுமம் மாலிகைப்பேர் திருத்தொண்டர் சதகமலீ
தேத்திடுநல் லடியாகத் திருளகற்றி யெப்பற்று
நீத்திடுமெஞ் ஞானநல்கி நிமலனடி நிழலிருத்திக்
காத்திடுநிச் சயமதனைக் காதலா மலகமென. (௪)

தேர்ந்தருங்க [illegible]லாது மகிலமெங்குஞ் சிறக்கவுள்ளங்
கூர்ந்துமேற் [illegible]ன் னிருவரெனுங் குழுவினரு
நேர்ந்துகி [illegible] வெண்டுசிமித் தமதானு
மோர்ந்த [illegible] வொழுக்கமதா லுயரொருவன் ( )

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இந்திரை யான்றாள் பூசித் தின்னருள் பெற்ற நீராற்
சந்திரு வாரூ ரென்னத் திகழ்தலத் துதித்த செல்வன்
மந்திராக் கரங்க ளஞ்சும் வைகலுஞ் சிந்தை செய்வோன்
றந்திர மதியி னூன்செந் தமிழ்வளங் கொழிக்கும் வாயன். (௬)

சிவனடி யார்க டம்மை யவனெனப் பேணுஞ் சீலன்
றவமரு ளுருத்தி ராக்க நீற்றணி தழைக்கு மெய்யன்
கவர்புறச் சமைய மேற்கொள் கண்டகாக் கசனி போல்வா
னவனியிற் பொறையு ளானென் னனையவர்க் குயிரே யன்னான்

அப்பர்சுந் தரர்சம் பந்த ரருட்டிருப் பாட லெல்லாந்
துப்பவிர் சடையான் காதிற் றும்புரு வெனவே பாடி
யொப்பருஞ் சொக்க லிங்க வோதுவா மூர்த்தியென்னச்
செப்பபி தானம் பெற்ற செகப்பிர சித்த னன்னான். (௮)

### ஷை வேறு.

கருதுபுபல் பிரதிகளைக் கொண்டுநன்கு பார்வையிட்டுக்
கமழுந் தென்றன்
மருவுமலைக் குறுமுனிவன் கமண்டலோ தகப்பொருநை
வளப்பந் தன்னூற்
பருவாலி னெல்லைநகர் முத்தமிழா கரவச்சிற்
பதிப்பித் தாப்ப
ரிருசுடர்க ளுள்ளமட்டும் பெருகுபுகழ்ப் பயிரைவளர்த்
திட்டான் மன்னோ. (௯)

குருவே துணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர் சதகம்.



## கணபதி காப்பு.



நேரிசை வெண்பா.

மாதிதொரு பாகர்திரு மாணிக்க மாமலையார்
மீதிலன்பர் பேறுகொண்ட மெய்ச்சதக—மோதிடவே
தந்தனக்கு மெட்டாத சங்கரிதான் பெற்றுகந்த
கந்தனுக்கு முன்னுதித்தோன் காப்பு.

---

## அவையடக்கம்.



ஆசிரிய விருத்தம்.

பூமேவு வன்றொண்டர் கருணைகூர்ந் தெழில்பெறப்
புகறிருத் தொண்டத் தொகைப்
பொற்புலவு நம்பியாண் டார்கலித் துறைவகைப்
பொருள்கொண்டு சேக்கிழார் சொல்
நாமேவு தொண்டர்கள் புராணவிரி கொற்றையார்
நவிலும் புராண சாரம்

## அறுசீர்க்கழி நெடிலடியாசிரிய விருத்தம்.

இந்திரை யான்றாள் பூசித் தின்னருள் பெற்ற நீராற்
செந்திரு வாரூ ரென்னத் திகழ்தலத் துதித்த செல்வன்
மந்திராக் கரங்க ளஞ்சும் வைகலுஞ் சிந்தை செய்வோன்
றந்திர மதியி னான்செந் தமிழ்வளங் கொழிக்கும் வாயன். (௬)

சிவனடி யார்க டம்மை யவனெனப் பேணுஞ் சீலன்
றவமரு ளுருத்தி ராக்க நீற்றணி தழைக்கு மெய்யன்
கவர்புறச் சமைய மேற்கொள் கண்டகர்க் கசனி போல்வா
னவனியிற் பொறையு ளானென் னனையவர்க் குயிரே யன்னான்

அப்பர்சுந் தரர்சம் பந்த ரருட்டிருப் பாட லெல்லாந்
துப்பவிர் சடையான் காதிற் றும்புரு வெனவே பாடு
மொப்பருஞ் சொக்க லிங்க வோதுவா மூர்த்தியென்னச்
செப்பபி தானம் பெற்ற செகப்பிர சித்த னானோன். (௮)

### ஷை வேறு.

கருதுபுபல் பிரதிகளைக் கொண்டுநன்கு பார்வையிட்டுக்
கமழுந் தென்றன்
மருவுமலைக் குறுமுனிவன் கமண்டலோ தகப்பொருநை
வளப்பந் தன்னாற்
பருவரலி னெல்லைநகர் முத்தமிழா கரவச்சிற்
பதிப்பித் தம்ப
திருசுடர்க ளுள்ளளவும் பெருகுபுகழ்ப் பயிரைவளர்த்
திட்டான் மன்னோ. (௯)

குருவே துணை.

உ

சிவமயம்.

திருச்சிற்றம்பலம்.

# திருத்தொண்டர் சதகம்.

## கணபதி காப்பு.

நேரிசை வெண்பா.

பாதியொரு பாகர் திரு மாணிக்க மாமலையார்
நீதிலன்பர் பேறுகொண்ட மெய்ச்சதக—மோதிடவே
நந்தனக்கு மெட்டாத சங்கரிதான் பெற்றுகந்த
கந்தனுக்கு முன்னுதித்தோன் காப்பு.

---

## அவையடக்கம்.

ஆசிரிய விருத்தம்.

பூமேவு வன்றொண்டர் கருணைகூர்ந் தெழில்பெறப்
புகறிருத் தொண்டத் தொகைப்
பொற்புலவு நம்பியாண் டார்கலித் துறைவகைப்
பொருள்கொண்டு சேக்கிழார் சொல்
நாமேவு தொண்டர்கள் புராணவிரி கொற்றையார்
நவிலும் புராண சாரம்

நாடித் திருத்தொண்டர் சதகமதை நாயினே
னுவலமுன் னோது பான்மை
மவு சோலையிற் சோனைமுகில் கண்டுகளி
கூழ்ந்துவிளை யாடல் புரியுந்
தோகைமயில் கண்டுதன் சிறகனை விரித்தாடு
சூட்டுவான் கோழி யொப்பா
மாமேவு வெள்ளைவிடை மீதேறி யன்பர்முன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவநைதகர்
மாணிக்க மலை நாதனே. (க)

## தொண்டர் நூற்சிறப்பு.

படியிலகு மனுநெறி நடத்திவரு முத்தமப்
பல்லவ னெனுஞ் சோழன்முன்
பைந்தமிழ்ச் சீவகச் சிந்தா மணிக்கினிமை
பகர்பொழுது சேவை வேளாண்
குடிபெறு மமைச்சரென வருசேக்கி ழார்மடக்
குண்டர்போய் நூலி ருமையுங்
குணங்கொடா திருமைக்கு முறுதிநூல் வேறெனக்
கூறவந் நூலியா தென
வடிகள்புக ழாரூரர் தொண்டத் தொகைப்பதிக
மதன்பொருளை யானை முகனு
லறிந்தினிது நம்பிசொலு மந்தாதி வகையென்ன
வரசன்விரி பகர்க வெனவே
வடிதமிழ்ச் சேக்கிழார்க் குலகெலா மென்றுமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவநைதகர்
மாணிக்க மலை நாதனே. (உ

நாயனர் தொகை.

வேதியர்கள் பதின்மூவர் சைவமறை யோர்நால்வர்
மிகுமருத் துவரி லொருவர்
வேந்தர்களி லறுவர்குறு நிலமன்ன ரைவர்புகழ்
விரவுதன வணிக ரைவர்
தீதில்வே ளாளர்பதின் மூவர்குய வர்கள்வேடர்
திகழ்பாணர் கடைஞர் செக்கார்
செய்யவீ மூவர்தூசர் பரதர்சா லியர்தனிற்
செப்புமோ ரொருவர் மிக்க
நீதிசெறி யிடையர்களி லிருவர்மர பறியார்
நிகழ்ந்தபதின் மூவ ரென்று
நீணில மகிழ்ந்துகொண் டாடவழி யாதபுகழ்
நித்திபா நந்த சைவ
மாதவர் பணிந்திடப் பாதமலர் தந்துமுன்
னுந்தடிமை கொண்ட கயிலை
யாசனை யிராஜலிங் கேசனை சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே. (௬)

நாயனர்கள் திருமரபு.

மோனமிகு தில்லையந் தணர்ஞான சம்பந்தர்
முருகர்தண் டேசர் நக்கர்
முறைமைபெறு சோமாசி மாறர்கண நாதர்மென்
மொழிசிறப் புலியர் கலைபர்
ஞானமிகு பூசலை யரப்பூதி பசுபதியர்
நமிநந்தி வேத மறையோர்
நவிலுமவன் றொண்டரிசை ஞானியர் புகழ்த்துணைவர்
நற்சடையர் சைவ மறையோர்
போனகந் தருசிறுத் தொண்டர்நன் மருத்துவர்
புகலிடங் கழியர் சேரர்

பொற்புகழ்ச் சோழர்நெடு மாறர்மங் கைக்கரசி
போற்றுகோச் செங்கண் வளவர்
மானிலம் புகழ்வேந்தர் தாள்பணிந் திடவுமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனே யிராஜலிங் கேசனே சிவனைநகர்
மாணிக்க மலை நாதனே.

திருவுலவு கூத்தர்நர சிங்கர்சே தித்தலைவர்
செய்யகா டவர்கோன் கழற்
சிங்கர்குறு நிலமன்ன ரமர்நீதி மூர்த்தியார்
திகழியற் பகை யம்மை யுந்
தருவுயர் கலிக்கம்பர் வணிகர்திரு நாவரையர்
சாக்கியர் கலிக் காமனார்
சத்தியார் விறன்மிண்டர் மூர்க்கர்கோட்
புலியெழில் சாற்றுமரி வாட்டாய னார்
கருணைபிளை யான்குடிப் பதிமாறர் வாயிலார்
கருதுமுனை யடுவர் மானக்
கஞ்சாற னார்செருத் துணைநாய னாரெனக்
கழறும்வே ளாளர் தொல்சீர்
மருவுமன தன்பினிற் றிருவருள் புனைந்திடமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனே யிராஜலிங் கேசனே சிவனைநகர்
மாணிக்க மலை நாதனே.

செப்பரிய திருநீல கண்டர்குய வர்வேடர்
செம்மல்கண் ணப்பர் பாணர்
செய்யதிரு நீலகண் டப்பாணர் கடைஞர்நாட்
செல்வர்செக் கார்கலியனா
ரொப்பிலீ மூக்குலத் தேனாதி யார்வணா
ருயர்குறிப் புத்தொண்டர் மெய்

யோங்குபர தவரிலதி பத்தர்சா லியர்குலத்
துற்றசிவ நேச ரிடையர்
தப்பிலாத் திருமூல ராணுயர் மாயிலார்
தண்டியெறி பத்தர் புல்லர்
தருகுலச் சிறைகாரி யொப்பிய குறும்பாடி
சார்ந்தவடி யாருண் மற்றும்
மைப்புய லெனுங்கருணை யுற்பன நிறைந்திடமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவனைநகர்
மாணிக்க மலை நாதனை. (௬)

## குருவருளால் முத்திபெற்ற நாயனார்கள்.

பூமருவு தெய்வமலை மாமக டனத்திருப்
பொற்கின்னை வமுதுண்டு மெய்ப்
பாதமிகு தமிழ்மாலை யோதுசம் பந்தர்பொய்ப்
புத்தர்வலை நீத்து நின்று
ணைமருவு நாவரையர் திருமூலர் நின்றசீர்
நெடுமாற ரப்பூதி யார்
நேயமுறு சோமாசி மாறர்மங் கைக்கரசி
நீலகண் டப்பாணர் பண்
பாமருவு மிழலைக் குறும்பர்கண நாதரொடு
பகாரிய சைவ நெறியே
பற்றிய குலச்சிறையு மானவிப் பதினொருவர்
பாங்குலக மோங்க நான்கு
மாமறை பாராவுமுப தேசகுரு வாகமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவனைநகர்
மாணிக்க மலை நாதனை. (௭)

## இலிங்கத்தால் முத்திபெற்ற நாயனார்கள்.

புகழ்பெறுங் கலையனெறி பத்தர்கூற் றுவனார்
புகழ்த்துணைவர் கண்ணப்பர் கோட்
புலியார னையர்பசு பதியர்சாக் கியர்விறற்
பூசலையர் புல்லர் முருகர்
அகமறுவில் சண்டேசர் நமிநந்தி வாயிலா
ரருள்சேரர் தண்டி யடிக
ளதிபத்தர் கலியர்வாட் டாயர்கா ரியர்தக்க
வையடிக ணீல நக்கர்
திகழ்பெற வருஞ்சிறப் புலியர்திரு நாட்போவர்
செய்யசெங் கட்சோழனார்
செப்பிய கலிக்காமர் பொற்கழற் சிங்கர்வான்
செருத்துணைவர் மூர்த்தி யாரா
மகிழுமா றைந்தடியர் பணிலிங்க வடிவெனமுன்
வந்தடிமை கொண்ட கபிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவனைதநகர்
மாணிக்க மலை நாதனை.

## வேடத்தால் முத்திபெற்ற நாயனார்கள்.

கணிதமிகு திருநீல கண்டர்விறன் மிண்டர்படை
கற்றுவல வேனாதி யார்
கஞ்சாற னார்சிறுத் தொண்டர்நர சிங்கர்பொய்
கடிகலிக் கம்பர் மூர்க்கர்
பணிதனிறை சத்தியா ரமர்நீதி யார்மிகப்
பரவிய புகழ்ச் சோழனார்
பண்புறை திருக்குறிப் புத்தொண்டர் சிவனேசர்
பகருமெய்ப் பொருண் மாறனார்
அணிதரும் போரின்முனை யடுவர்கா ரைக்காவி
லடமையு மிடங்கழியர் ஜீ

ராகிய வியற்பகையர் மேயபத் தொன்பதடி
யார்கண்மன தன்பின் மிக்க
மணிதரும் பூதிசா தனவேட வடிவெனமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவநைதகர்
மாணிக்க மலை நாதனை. (௯)

இயலிசைத்தமிழ் நாயனார்களும் ஆச்சிரமமும்.

தனிமைபெறு திருஞான சம்பந்தர் நாவரையர்
தக்கபே யாரிய லிசைத்
தமிழ்மூவ ராயர்திரு நாட்போவர் பாணர்சொற்
றருபரம னைப்பாடு வார்
பனுமிசைத் தமிழ்நால்வ ரையடிக டிருமூலர்
பயில்காரி யார்சேர னார்
பண்புபெறு பொய்யடிமை யில்லாத புலவரியல்
புகழ்வலோ ரைவர் மறுவிற்
புனிதமுறு மில்லறந் திருநீல கண்டனார்
பொருமியற் பகையு னிட்டார்
புகலரையர் மூர்த்தியார் துறவறஞ் சண்டேசர்
புகல்பிரம சாரிய ருமோளார்
மனவாக்கு டன்காய மொருமையுற் றடியவர்முன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவநைதகர்
மாணிக்க மலை நாதனை. (௧0)

சுந்தரமூர்த்தி நாயனார்.

பண்குலவு கயிலையிற் பணிவிடை யகன்றுதென்
பால்நாவ லூர்ச்சடைய னார்
பாலரென வுற்றருட் டுறைமண முடிக்குமுன்
பரமனுக் கடிமை யாகி

விண்குலவு மதிகைசேர் தாரூரி லருள்புரிய
மென்பரவை தோள் புணர்ந்து
விறன்மிண்ட ருடியரு ளாற்றொண்டர் புகழ்பாடி
வெண்குண்டை நெல்லை ழைத்துத்
தண்புகலி யூர்ச்செங்கல் பொன்செய்து முதுகுன்றர்
தந்தபொரு ளாற்றி னிட்டுத்
தடமெடுத் தெழில்சங்கி லிக்குரிமை யாய்த்தூது
சாற்றியொரு தனையழைத்து
மண்குலவு சேரனொடு வெண்கய மதிற்செலமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே.

## தில்லைவாழந்தணர்.

சொல்லுலவு சொர்ணமய மன்றுளார் திருவடித்
தொண்டின்மனம் வைத்த பெரியோர்
தூயநான் மறைகளா றங்கம்வல் லார்கண்முத்
தீயுளா ரறுதொழிலி னோர்
இல்லறந் தனில்வழார் கருணைதவ மறிவுபொறை
யெழில்சீல மிக்க புகழார்
இனியகண் டிகைபூதி சாதனத் தோர்பணிந்
தேவரு மிறைஞ்சு செல்வத்
தில்லைவா ழந்தணர்கண் மூவாயி ரத்தொகைத்
தெய்வமறை யோர்கண் மகிமை
செப்பவெவர் வல்லுந ரெனப்புவனி யோதவே
தில்லைவா ழந்தண ரென
வல்லவன் றொண்டரைப் பாடுநீ யென்றுமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே.

### திருநீலகண்டநாயனார்.

கழனிசெறி தில்லைநகர் வேட்கோவர் திருநீல
கண்டர்மிகு காத லோடுங்
கருணையடி யார்க்கமுது செய்வதற் கினியமட்
கலமளித் திடுவ ரன்பா
லிழைதனப் பொதுமாதர் பாலணைய வதுதெரிந்
தில்லவள் பொருதூடி நீ
ரெமைத்தொடிற் றிருநீல கண்டமென வஞ்சிமா
லின்பந் துறந்திளமை போய்ப்
பழையவய தூற்றவர்மு னற்றவ னெனத்தமது
பாத்திரந் தந்தொ ளித்துப்
பலநா ளகன்றுகேட் பவர்கள்கா ணுமைமறு
பாத்திரந் தாவெ றுத்து
வழுவிறட மூழ்குவித் தவரிளமை பெற்றிடமுன்
னந்தடிமை கொண்ட கயிலை
னே யிராஜலிங் கேசனே சிவதைநகர்
மாணிக்க மலை நாதனே. (கரு)

### இயற்பகை நாயனார்.

போதமரு மருதநீர் நாட்டினிற் காவிரிப்
பூம்பட்டி னத்துள் வணிகர்
புகழியற் பகையடி யவர்கள்வேண் டியவெலாம்
பொருந்தக் கொடுக்கு நாளிற்
காதல்பெறு தூர்த்தமறை யோரெனச் சென்றுநின்
காதலி தனைத்தரு கெனக்
கழறவப் படிதந் தனுப்பவே தமரெலாங்
கருதியே தடைகள் செய்ய
வோதுபழி யிதென்று வந்தவரை வீட்டியிடை
யூறெலாம் விலக்கி யாங்கே

உற்றதுணை யாகிவரு மற்றவர்த நிலைமையினை
புலகெலா மறிய வேண்டி
மாதுமையி னோடுவிடை யேறியெதிர் நின்றுமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவகைநகர்
மாணிக்க மலை நாதனை.

இளையான்குடிப்பதிமாறனார்.

பாரின்வள முழவுதொழி லாருமிளை யான்குடிப்
பதிமாற னெனின் மிக்க
பாக்கிய நிறைந்தடிய ருண்டியறு சுவைநல்கு
பண்பினர்செல் வங்குறைத்துக்
காரின்மழை சாடநடு யாமமனை மூடிக்
கடும்பசி பெறுங் காலையிற்
கடிந்தோ ரெனச்செலக் கண்டமுது செயவன்பர்
காதலியை வினவ வவளிவ்
வூரிலார் தருவரிவ் வேளைவே றிலவயலி
லுண்டுநென் முளைக ளெனவே
யோதவயல் சென்றரித் தில்லிலக் காற்சமைத்
துறுபயிர்க் கறிசெய் தன்பால்
வாரிரமு துண்கவென வழுதுருவ மாகிமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவகைநகர்
மாணிக்க மலை நாதனை.

மெய்ப்பொருள் நாயனார்.

நன்னய மிகுஞ்சேதி நாட்டினிற் கோவலூர்
நற்குடி விளாட மன்னர்
நம்புதிரு வேடமெய்ப் பொருள்கொண்ட சிந்தை
நான்முறை நெறிவழா தார்

பின்னைமறு மன்னர்சம ருன்னிவலி தோற்றடற்
பெறவரி தெனத்தீ தகம்
பெற்றுமிக் கவரெனக் கைப்படை காந்தவொரு
புத்தகக் கவளி யேந்தி
யுன்னிவா யிற்றடை விலக்கிமா தொடுமன்ன
னுறுதுயில் கூரிடஞ் சென்
றுபசார முறஞான மொழிகுவ னெனப்பணி
வுறவஞ்ச நினைவு செய்ப
மன்னன்மெய்ப் பொருளென்று நன்னெறி புரிந்திடமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவகைதநகர்
மாணிக்க மலை நாதனே. (கசு)

விறன்மிண்டநாயனார்.

விந்தைபெறு மலைநா டியர்ந்தசெங் குன்றூரில்
வேளாளர் தொல்குலத்தில்
விறன்மிண்டர் சிவசமய நெறிகொண்டு பலபதிகண்
மேவியடி யார்களோடுப்
பந்தமற மகிழ்விலொடு மாரூரின் மேவுநாட்
பரவையார் தோண் மணந்த
பாங்கர்வன் றொண்டர்வந் தடியார்க டிருவடி
பணிந்திடா தேக வதனாற்
சிந்தைமிக வூடியது கண்டுவன் றொண்டரைத்
திருவருளி னல் நிறைந்த
சீர்பெறுந் தொண்டர்தொகை யோதுகென வன்றொண்டர்
செந்தமிழ்ப் பதிக மோதி
வந்தனை மொழிந்தன்பர் புந்திமகிழ் வாகமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவகைதநகர்
மாணிக்க மலை நாதனே. (கஎ)

### அமர்நீதிநாயனுர்.

அருள்பெறும் பொன்னிநா டிலகுபழை யாறையூ
ரதன்வணிக ராடை மாடை
யளவிலெண் ணிதியுடைய வமர்நீதி யாரடிய
ரன்புவைத் துடைகோ வணந்
தருவர்திரு நல்லூர் விழாவின் மட முறைபொழுது
தக்கசிறு முனிவர் பொற்கைத்
தண்டிலிரு கோவணங் கொண்டுசென் றிடவன்பர்
தாமமுது கொள்க வென்ன
வுருவநீர் தோய்வமென் றொருகோவ ணந்தந்
தொழித்துவந் தீர மாற்றெம்
முடைகோ வணந்தனைத் தாவெனக் காணவிலை
வேறொன்று தருவலென நேர்
மருவுநிறை தாவெனத் தொண்டர்நிறை கோலுறமுன்
வந்தடிமை கொண்ட கயிலை
வாசனை யிராஜலிங் கேசனை சிவநைநகர்
மாணிக்க மலை நாதனே. (

### எறிபத்தநாயனுர்.

சீதவயல் நீடுகரு வூரிலெறி பத்தர்மெய்ச்
சிவனடியர் துயர மெல்லாஞ்
சிதைப்பலென் றேபரசு செடுத்திடுந் திறலினர்
சிவகாமி யார்வை கறைப்
போதுகொய் தாணிலையர் மீதுபூ மலரைப்
புகழ்ச்சோழர் கைம்மா மதம்
பொழிந்துசித றத்தொண்டர் சிவதா வெனுஞ்சொற்
பொருமலெறி பத்த ருடி
மோதவய மாவீரர் மாயவேவந் தன்கண்டு
முன்புநின் றென்னுயிரை நீர்

